# மின்தமிழ் மேடை



## "நெய்தல் நிலத்தில் தொடரும் வாழ்க்கைப் போராட்டங்கள்"

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*
*வெளியிடும் காலாண்டு மின்னிதழ்*
*மின்தமிழ்மேடை - காட்சி: 12*
*ஜனவரி — 2018*



# மின்தமிழ் மேடை

**காட்சி: 12**

---

**ஜனவரி - 2018**

**“நெய்தல் நிலத்தில் தொடரும் வாழ்க்கைப் போராட்டங்கள்”**



முன்னட்டைப் படம்: டிசம்பர் 2017 ஒகி புயல் பாதிப்பால் மீனவர்கள் அதிக அளவில் உயிரிழப்பு, பொருளிழப்பு போன்ற துயரை எதிர்கொண்டுள்ளார்கள்




**தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு**

http://www.tamilheritage.org/

**இதழ் தொகுப்பு: தேமொழி**

# தலையங்கம்: நெய்தல் நிலத்தில் தொடரும் வாழ்க்கை போராட்டங்கள்



2017ன் இறுதி வாரங்கள் தமிழ் மக்களைப் பெறும் துயரத்தில் வீழ்த்திய வாரங்களாகக் கழிந்தன. இயற்கை சீற்றத்தால் மின்சாரம் இல்லாமலும், குடிநீர் இல்லாமலும் ஒரு வாரத்திற்கும் மேலாகத் தமிழகத்தின் குமரிமாவட்ட மக்கள் துன்பத்தில் வாடினர். ஆழ்கடலுக்கு மீன் பிடிக்கச் சென்ற தங்கள் குடும்பத்தினர் என்று வருவர், திரும்பி வருவார்களா வரமாட்டார்களா, என்ற அச்சத்தோடு துடித்தனர் இம்மக்கள். இவர்களின் அச்சம் நிரந்தரமானது என்பதைப் பறைசாற்றுவதாக மீட்புப் படையினரும் பலனின்றி திரும்பிய சோகம் தான் நிகழ்ந்துள்ளது. ஓகிப் புயல் இம்மக்களை மிக மோசமாகப் பாதித்ததும், நூற்றுக் கணக்கானவர்கள் இன்று வரை காணாமல் போயிருப்பதும், திரும்பி வராதவர்களை இறந்தவர்களாக அறிவித்து கடல் நீரிலேயே தர்ப்பணம் செய்ததும் அண்மைக் கால அழிக்க முடியாத சோகங்கள்.



பன்னெடுங்காலமாக தமிழ்ப் பண்பாட்டில் நெய்தல் நிலத்தின் பங்களிப்பு அளப்பரியது. ஆனால் தற்காலத்தில் நெய்தல் நில மக்களைப் பற்றின புரிதலும் அறிதலும் மற்ற நில மக்களுக்கு மிகக் குறைவாகவே இருக்கின்றது. தமிழகத்தின் வணிகப்பொருட்களுக்கு உலகம் முழுவதும் கடல்வழித்தடங்களைக் கண்டுபிடித்து உலகம் முழுமையும் கொண்டு போய் சேர்த்த பெருமை நெய்தல் நில மக்களுக்கே உள்ள தனிச்சிறப்பு.

நெய்தல் நில மக்கள் இல்லாமல் போயிருந்தால் தமிழகப் பண்பாட்டு விழுமியங்கள் உலகின் பல பாகங்களுக்குப் போய் சேர்ந்திருக்காது என்பது நிதர்சனமான உண்மை. காலங்கள் மாறி சமூக பொருளாதார அமைப்புகள் மாறிய சூழலில், கடல் உணவுப் பொருட்களை பிடிப்பவர்களாகவும்,

முத்துக்குளிப்பவர்களாகவும், உப்பு காய்ச்சுபவர்களாகவும் இறுதியாகக் கடலோடிகளாகவும் நெய்தல் நில மக்கள் இன்று இருக்கின்றனர்.

தற்போது கடலோடி தொழில் முற்றிலுமாக நெய்தல் நில மக்களிடமிருந்து மறைந்து போய் விட்டது எனலாம். ஆழ்கடல், மற்றும் கரையோர மீன் பிடி தொழிலைத் தவிர மற்ற கடல் சார்ந்த தொழில்கள் தமிழகக் கடலோரங்களில் சிதறிய வகையில் சிறு சிறு கிராமத்து குழுக்களின் தொழிலாக இருந்து வருகின்றது. இந்த வீழ்ச்சியின் காரணமாக வெளி உலகத்துத் தொடர்புகள் குறைந்து போய் இம்மக்களின் மீதான பாராமுகம் அதிகரித்துள்ளது.

இயற்கை சீற்றங்களான ஆழிப்பேரலைகள், புயல்கள் பெருமழை சீற்றங்கள் ஆகியவற்றினால் உடனடியாகவும் நேரடியாகவும் பாதிக்கப்படுகின்ற மக்கள் இம்மக்களே.



2017ம் ஆண்டு கிறிஸ்மஸ் பண்டிகையைக் கொண்டாடவில்லை இக்கடலோர மக்கள். பிறந்த புத்தாண்டும் இம்மக்களுக்கு வெளிச்சம் காட்டுமா என்பது கேள்வியே. தமிழகக் கடலோர மக்களின் நலனை எண்ணிப் பார்த்து நம் ஒவ்வொருவராலும் இயன்ற ஏதாவது ஒரு நற்பணியை இம்மக்களுக்கு நாம் செய்ய வேண்டும் என்பதைத் தமிழ் மரபு அறக்கட்டளை கேட்டுக் கொள்கின்றோம்.

தமிழ் மரபு அறக்கட்டளையின் இக்காலாண்டிதழை ஓகிப் புயலால் பாதிக்கப்பட்டு வாடும் அனைத்துத் தமிழக கடற்கரையோர மக்களையும் நினைவு கூறும் வகையில் அவர்களுக்காக அர்ப்பணிக்கின்றோம்!

அன்புடன்
முனைவர். சுபாஷிணி

# இந்த இதழில் ...
## மின்தமிழ் மேடை - காட்சி: 12; ஜனவரி - 2018
### "நெய்தல் நிலத்தில் தொடரும் வாழ்க்கை போராட்டங்கள்"

(மின்தமிழில் அக்டோபர் 16, 2017 - ஜனவரி 15, 2017 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)

## உள்ளடக்கம்

## 1. தூத்துக்குடி நெய்தல் நில மக்கள் - சங்கு குளித்தல்

– முனைவர்.க.சுபாஷிணி



பாண்டிய நாடு முத்துடைத்து என்கின்ற மிக நீண்ட கால பழமொழியின் ஆணிவேர் இன்றைக்கும் இருக்கின்ற இடம் தூத்துக்குடி. பாண்டியநாட்டின் முத்துக்கள் எகிப்திய, ரோமானிய நகரம் வரை வணிகம் செய்யப்பட்டன என்கின்ற வரலாற்றுப் பெருமைக்கு சொந்தமான இடம் அன்றைய பாண்டிய நாட்டின் மிக முக்கியமான துறைமுகப்பகுதியாக இருந்த கொற்கை, தொண்டி, தூத்துக்குடி எனலாம். நெய்தல் நில மக்களில் கடலோரக் குடிகளின் மீன்பிடிப்பவர்களைப்போல ஆழ்கடலில் முத்தும், சங்கும் எடுப்பதில் தூத்துக்குடி கடலோர மக்கள் அன்றும் இன்றும் முன்னணியில் இருக்கின்றார்கள்.

ஆனால் வரலாற்றுப் பெருமையையும் பொருளாதார வளத்தையும் ஒரு சேர உருவாக்கித் தந்த இக்கடல் குடிகளின் வாழ்வில் முன்னேற்றம் இல்லை. தூத்துக்குடியில் தெரேஸ்புரம் மற்றும் தூத்துக்குடியைச் சுற்றியுள்ள கிராமங்களில் வசிக்கும் மக்களின் முதன்மைத் தொழில் மீன் பிடித்தலும் கடலில் மூழ்கி சங்கெடுத்தலுமே. இந்தச் சங்குகள் அழகு சாதனப்பொருட்களாகவும் வழிபாட்டுப் பொருட்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன.

இத்தகைய பொருட்களை எடுப்பதற்காக ஆழ்கடலில் மூழ்கிப் பணி செய்யும் இந்த முக்குளிப்பவர்கள் படும் துன்பமும் துயரங்களும் கணக்கில் அடங்காதவை. தொடர்ந்து கடல் நீரில் மூழ்கி இருப்பதினால் கடலின் அழுத்தத்தினாலும் கடல் உப்பு நீரின் அரிப்பினாலும் அவர்களின் உடல் விரைவிலேயே நசிந்து முதுமையடைந்து விடுகிறார்கள். 40 வயதிற்குமேல் அவர்கள் நடமாடத்தகுந்த மனிதர்களாக இருக்க முடியவில்லை. இயற்கை தரும் தண்டனை இதுவென்றாலும் செயற்கையாக அவர்களுக்குத் துன்பம் நேர்கின்றது . முக்குளிக்கும் போது அவர்கள் பயன்படுத்துகின்ற நீர் மூழ்கி உபகரணங்கள்

போதிய பாதுகாப்போடு இல்லை. தரமற்றவையாகவும் பாதுகாப்பு அற்றவையாகவும் இருப்பதினால் கடலிலேயே மாண்டவர்களும் உண்டு. மீண்டவர்களில் பலர் உடல் உறுப்புக்களை இழந்து ஊனமுற்றோராக வாழும் நிலையும் இருக்கின்றது.

கடலின் தாக்கத்தினால் நிரந்தர நோயாளிகளாக மாறியிருக்கின்ற இக்கிராம மக்களுக்குப் போதிய மருத்துவ உதவி அளிக்க வேண்டிய அமைப்புகளோ இவர்களைக் கண்டு கொள்வதில்லை. தன்னார்வத்தோடு உதவக்கூடிய ஒரு சில அமைப்புக்களை இவர்கள் நாடுகிறார்கள். ஆயினும் அதுவும் எட்டாக்கனியாகவே உள்ளது.



இப்பதிவின் தொடர்புடைய விழியப் பதிவினை **https://www.youtube.com/watch?v=IwGDUPR0hmY&feature=youtu.be** காணலாம்.

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 2. ஓலைச்சுவடியில் தமிழ்ப்புத்தாண்டு

– ருத்ரா இ.பரமசிவன்



விசும்பின் விரியிழைத் தோகையன்ன
மஞ்சின் வரிகொடு ஓவுபல காட்டி
விடியல் இன்று கலித்தே ஆர்த்தது.
குரல்கதிர் பரிதி கடல் எனும் பழனம்
உழுதது கண்டே நனிகளி உற்று
நனந்தலைப் படப்பை நடந்தேன் ஆங்கு.
அலவன் வரிய ம்யிரிய மணற்கண்
எழுதிய போன்ம் எழுத்துக்கள் ஊர
கண்டேன் "தமிழ் வாழிய" என்றே!
ஆழிமகள் அடியொற்றித் தந்த
அனிச்சம் தூவிய மென்னகை அலையும்
அழிக்க ஒண்ணா அன்பொடு தடவி
வாழ்த்தும் வாழ்த்தும் ஈண்டு ஓர்
"தமிழ்ப்புத்தாண்டு! தமிழ்ப்புத்தாண்டு!"அஃதின்
விண் இமிழ் நுண் ஒலி எங்கணும் கேட்கும்.
கேள்மின்! கேள்மின்! மின் தமிழ் நண்பர்காள்!
மண்ணும் விண்ணும் மற்றும் எல்லா
மலர்தலை உலகம் யாவும் இது கேட்கும்.
தமிழ் வாழ்க! தமிழ் வாழ்க!
—— ருத்ரா இ பரமசிவன்.

விசும்பின் விரியிழைத் தோகையன்ன
மஞ்சின் வரிகொடு ஓவுபல காட்டி
விடியல் இன்று கலித்தே ஆர்த்தது.
குரல்கதிர் பரிதி கடல் எனும் பழனம்
உழுதது கண்டே நனிகளி உற்று
நனந்தலைப் படப்பை நடந்தேன் ஆங்கு.
அலவன் வரிய மயிரிய மணற்கண்
எழுதிய போன்ம எழுத்துக்கள் ஊர
கண்டேன் "தமிழ் வாழிய" என்றே!
ஆழிமகள் அடியொற்றித் தந்த
அனிச்சம் தூவிய மென்னகை அலையும்
அழிக்க ஒண்ணா அன்பொடு தடவி
வாழ்த்தும் வாழ்த்தும் ஈண்டு ஓர்
"தமிழ்ப்புத்தாண்டு! தமிழ்ப்புத்தாண்டு!"அஃதின்
விண் இமிழ் நுண் ஒலி எங்கணும் கேட்கும்.

கேள்மின்! கேள்மின்! மின் தமிழ் நண்பர்காள்!
மண்ணும் விண்ணும் மற்றும் எல்லா
மலர்தலை உலகம் யாவும் இது கேட்கும்.
தமிழ் வாழ்க! தமிழ் வாழ்க!
தமிழ் என்றென்றும் வாழ்கவே!

---

**அருஞ்சொற்பொருள்:**

மஞ்சின் வரி – மேகத்தின் படிமக்கீற்றுகள்
ஓவு – ஓவியம்
குரல்கதிர் – கதிர்க்கற்றைகள்
பழனம் – வயல்
நனந்தலை படப்பை – விரிந்த வெளியும் நெய்தல் சார்த்த வனமும்
அலவன் வரிய – நண்டுகள் நடந்த வரிச்சுவடுகள்
மயிரிய மணற்கண் – மெல்லிய இழைகளை ஏற்படுத்தினார் போன்ற
கடற்கரையின் (பட்டு)மணல் படர்ந்த இடம்
எழுதிய போன்ம – எழுதினாற் போலும் உள்ள காட்சி
ஆழிமகள் அடியொற்றி – கடல்மகள் அடியெடுத்து நடந்து
அனிச்சம் தூவிய மென்னகை அலையும் – அனிச்ச மலர்கள் தூவியதைப்போன்ற
மெல்லிய நகை புரிந்து வரும் அலைகள்

---

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 3. பொங்கலோ பொங்கல்!

**– இராம.கி.**



பொங்கலைப் பற்றிக் கேட்டால், சட்டென்று பலரும் "தமிழர் திருநாள், உழவர் திருவிழா, நன்றி சொல்லும் நேரம்" என்று சொல்லப் புகுவார்கள். அப்படிச் சொல்வது ஒருவகையில் சரிதான்; ஆனால் அது முழுமையில்லாத, ஒருபக்கமான, பக்கமடைச் (approximate) செய்தியாய் அமைந்து விடும். முழுமையாய்ச் சொல்ல, சரியானபடி அறிய, இன்னும் கொஞ்சம் ஆழப் போக வேண்டும். குறிப்பாக "தை முதல் நாளில் இவ்விழாவை ஏன் வைத்தார்கள்?" என்ற கேள்விக்கு விடை காண வேண்டும். மேலும், இந்த விடைகாணலின் முதற்படியாக, சூரியனைப் புவி சுற்றும் சாய்ந்த நீள்வட்டத்தைப் (inclined ellipse; இதைப் புவியின் பரிப்பு மண்டிலம் என்றும் சொல்லுவது உண்டு. பரிதல் = செல்லுதல்) புரிந்து கொள்ள வேண்டும். அதைப் புரிந்து கொண்டால் தான், நம்முடைய பருவங்களின் காரண கருமங்கள், பண்டிகைகளின் உட்கருத்து, போன்றவை புலப்படும். பொங்கல் விழா தொடங்கிய காலம், அதன் வெளிப்பாடு, அந்த விழா முற்காலத்தில் எதைக் குறித்திருக்கும் என்ற காலமாற்றத்தில் ஏற்பட்ட வேறுபாடுகளை இங்கு சொல்ல முற்படுகிறேன்.

சூரிய நாள்காட்டைப் (நாள்காட்டு> நாள்காட்டம்> நாக்ஷத்திரம்> நக்ஷத்ரம் = star) புவியோடு சேர்ந்து பல கோள்கள் வலந்து (வலத்தல் = to revolve) கொண்டிருக்கின்றன. இந்த வலந்தைகளின் (planets) வலம், கிட்டத்தட்ட ஒரே தளத்தில் தான் நடக்கிறது. இந்தச் சுற்று வலயத்தை ”ஏகலோடி” என்று வானியலிற் சொல்லுவர். (ecliptic; வலந்தைகள் ஏகி ஓடும் தளம் ஏகலோடி; ஏகுதல் = செல்லுதல்; ஏகலோடியை ஞாயிற்று மண்டிலம் என்றும் சொல்லுவது உண்டு.) இந்த ஏகலோடியில் வலக்கும் மற்ற கோள்களோடு நம்முடைய புவியைத் தொடர்புறுத்தும் முகமாக, இன்னொரு வட்டத்தையும் வானியலில் கற்பித்துச் சொல்லுவார்கள். அது வேறு ஒன்றும் இல்லை; புவிக் கோளத்திற் கற்பிக்கும் ஞால நடுவரையையே (terrestrial equator;), தொலைவிற் தெரியும் வானவரம்பு (horizon) அளவுக்குப் பெரிது படுத்தி, அதை வான் நடுவரையாய் (celestial equator) உருவலித்துக் காட்டுவதாகும். இந்த வான் நடுவரையை, இன்னொரு விதமாய், விசும்பு வலயம், விசும்பு வட்டம் என்றும் சொல்லுவதுண்டு.

விசும்பு வட்டம் என்பது புவியின் தன்னுருட்டோடு (self-rotation) தொடர்புடையது; ஏகலோடி என்பது எல்லாக் கோள்களும் சுற்றும் ஒரு வலயத் தளம். இந்த விசும்பு வட்டம், ஏகலோடி என்ற இரு வட்டங்களும் ஒன்றையொன்று ஒருக்களிப்பாய் (obliquity) வெட்டிக் கொள்கின்றன. (சிவகங்கை வட்டாரத்தில் ”ஒருக்களித்தல்/ ஒருக்கணித்தல்” என்று புழங்கும் வினைச்சொல் ”சாய்ந்து இருத்தல்” என்ற பொருளைக் காட்டும். ”ஒருக்களித்துப் படுத்தான்” என்றால், ”மல்லாக்கப் படுக்காமல் கொஞ்சம் திரும்பிக் கிடைமட்டத்திற்குச் - horizontal - சாய்ந்தாற்போல் ஒருபக்கமாய் உடம்பை வைத்துப் படுப்பது” என்று பொருள் கொள்ளும்) இத்தகைய ஒருக்களிப்பின் காரணமாய், கோடையும் (summer), வாடையும் (winter), இடையே பசந்தமும் (பச்சையாய்ப் பசிய இருப்பது பசந்தம்; spring; இதை ஒலிப்பு மாற்றி ப/வ போலியில் வசந்தம் என்று இன்று சொல்லுகிறோம்.), கூதிரும் (இலைகள் கூம்பி உதிர்வது கூதிர்; autumn; கூதிருக்கு அப்புறம் நீளும் முன்பனிக் காலத்தில் அடிக்கும் காற்று கூதல்) எனப் பருவங்கள் மாறி மாறி வருகின்றன. அதன் விளைவால் கோடையில் வெக்கையும், வாடையில் குளிரும் நம்மை வாட்டுகின்றன. குளிருக்கு அவ்வளவு பழகாத (ஆனால் வெக்கையை எப்படியும் பொறுத்து விடலாம் என்று பழகிய) தமிழர், "குளிர்காலம் குறையாதா?" என்று எதிர்பார்ப்பது இயற்கையே. பருவச் சுழற்சியின் காரணத்தால், குளிர் அதிகமாய் இருக்கும் நாளே, "குளிர் இனிக் குறையப் போகிறது" என்று உணர்த்தும் நாளாகும். அந்த நாள் வரும் போது, "இனிமேல் வரப் போவது மகிழ்வான காலம், வாட்டுகின்ற குளிர் தொலைந்து போகும்" என்று தமிழர் களி கொண்டு விழா எடுப்பது இயற்கையே.

இப்படி ஒரு நீண்ட பின்புலத்தை எடுத்துச் சொல்லுவது பொங்கல் விழாவின் அடிப்படையைச் சொல்லுதற்குத் தான்.

ஆண்டின் ஒவ்வொரு பருவ காலத்திலும், பகலும் இரவும், ஒரே அளவுப் பொழுதாக 12 மணி நேரம் இருப்பதில்லை. கோடையில் பகல் நீளுகிறது; வாடையில் இரவு நீளுகிறது. ஆனாலும் ஆண்டின் இரண்டே இரண்டு நாட்களில் மட்டும், பகலும் இரவும் (=ஒரே அளவுள்ள) ஒத்த நாட்களாக அமைகின்றன. அந்த நாட்களை ஒக்க நாட்கள் (equinoxes) என்றே மேலையர் அழைக்கின்றனர். மற்ற நாட்களில் பகலோ, இரவோ, ஒன்று மற்றொன்றைக் காட்டிலும் அதிக நேரம் வியலுகிறது. (அதாவது பகல் குறைந்து இரவு நீண்டோ, அல்லது பகல் நீண்டு, இரவு குறைந்தோ, இருக்கின்றன). இப்படிப் பகலும் இரவும் ஒன்றே போல ஒக்க இருக்கும் மார்ச்சு 22 - ஆம் நாளைப் பசந்த ஒக்க நாள் (spring equinox) என்றும், செப்டம்பர் 23 - ஆம் நாளைக் கூதிர் ஒக்க நாள் (autumn equinox) என்றும் சொல்லுவார்கள்.

இது போக, நீள்வட்டத்தில் செல்லும் புவியில் இருந்து சூரியனின் தொலைவை அளந்தால், மேலே கூறிய இரண்டு ஒக்க நாட்களில் மட்டும் நடுவார்ந்த தூரம் (median distance) இருக்கும். மற்ற நாட்களில் எல்லாம், புவிக்கும் சூரியனுக்கும் இடையே உள்ள தூரம் கூடியோ, குறைந்தோ, வரும். இப்படிக் கூடுதல், குறைச்சல் வரும் போது, வலயத்தின் ஓரிடத்தில் மட்டும்,இருப்பதிலேயே அதிக தூரமாகவும், வலயத்தின் இன்னொரு இடத்தில், இருப்பதிலேயே குறைந்த தூரமாகவும் அமையும். இருப்பதிலேயே கூடிய தூரமாய் புவியும் சூரியனும் அமையும் நாளைப் பனி முடங்கல் என்றும் (winter solistice; முடங்கல் = அமைதல்; முடங்கிப் போதல்; மாட்டிக் கொள்ளுதல்; பனிக் காலத்தில் அமைதல் - திசம்பர் 22-ம் நாள்), அண்மைத் தூரத்தில் புவியும் சூரியனும் அமையும் நாளை வேனில் முடங்கல் என்றும் (summer solistice; வேனில் = வெய்யிற் காலம் - சூன் 22ம் நாள்) நாம் சொல்லுகிறோம்.

புவிக்கு தன்னுருட்டம் (self-rotation), வலயம் (revolution) என்ற இரு இயக்கங்கள் போக, கிறுவாட்டம் (gyration; பம்பரம் போன்ற ஆட்டம்) என்னும் இன்னோர் இயக்கமும் இருக்கிறது. அதைப் புவியில் இருந்து புரிந்து கொள்வதற்கு மாறாக இந்த ஒக்க நாட்களின் இயக்கமாய்ப் புரிந்து கொள்ளுவது இன்னும் எளிதாக இருக்கும். அதாவது, ஒவ்வோர் ஆண்டும் செல்லச் செல்ல இந்த ஒக்க நாட்கள் சிறிது சிறிதாக முன் நகர்ந்து கொண்டிருக்கின்றன. (மேலே சொன்ன மார்ச்சு 22, திசம்பர் 22 என்பவை இந்தக் காலத்தில் நிகழ்பவை; ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்னால், அல்லது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், அவை இதே நாட்களில்

நிகழ்ந்தவை அல்ல.) இந்த ஒக்கநாட்களின் இயக்கத்தை முற்செலவம் (precession; precede = முன்செல்லு) என்று வானியலில் கூறுவார்கள்.

இந்தக் காலத்தில் பசந்த ஒக்கநாள் என்பது மீன (pisces) ஓரையில் விழுகிறது (=ஏற்படுகிறது). கூடிய விரைவில், இன்னும் ஐந்தாண்டுகளில் கி.பி. 2012 - ல் அது அஃகர (aquarius) ஓரையின் தொடக்கத்தில் வந்து விழும். அப்படி விழும் போது, புதிய உகத்திற்கு நாம் போகிறோம் (உகம் = ஒன்று சேரும் காலம்; உகம்>யுகம்>yuga என்ற வடமொழியில் சொல்லுவார்கள்.) என்று வரலாற்றாசிரியர்கள் சொல்லுகிறார்கள். அதே போல, வரலாற்றின் முன்காலத்திற்கு முற்செலவத்தின் துணை கொண்டு போனால், ஒரு காலத்தில் ஏப்ரல் 14 -ல் மேழ ஒரையின் தொடக்கத்தில் (மேஷ ராசி) இந்த ஒக்க நாள் விழுந்திருக்கும். அதாவது ஒரு காலத்தில் மேழத்தில் விழுந்த பசந்த ஒக்க நாள் இன்று 24 நாட்கள் முன்னேயே மீனத்தில் மார்ச்சு 22-ல் நிகழ்கிறது. இது போல முற்செலவத்தின் நகர்ச்சியால், கூதிர் ஒக்கநாள், பனி முடங்கல், வேனில் முடங்கல் ஆகிய மற்றவையும் 24 நாட்கள் முன்தள்ளிப் போகின்றன. அதாவது அக்டோபர் 15ல் விழ வேண்டிய கூதிர் ஒக்கநாள் செப்டம்பர் 23-லேயே நடக்கிறது. சனவரி 14ல் நடக்க வேண்டிய பனிமுடங்கல் திசம்பர் 22 -இலும், சூலை 14ல் நடக்க வேண்டிய வேனில் முடங்கல் சூன் 22 -இலும் நடக்கின்றன.

இந்த முற்செலவம் என்ற இயக்கம் மாந்த வாழ்க்கையில் ஒரு நீண்டகாலத் தாக்கத்தை ஏற்படுத்துகிறது. வரலாற்றில் பருவங்களைக் குறிக்கும் எந்தக் குறிப்பையும், முற்செலவம் கொண்டு உரசிப் பார்த்துப் புரிந்து கொள்ளவேண்டும். மொத்தமாய் ஒரு முழு முற்செலவம் முடியக் கிட்டத்தட்ட 25783 ஆண்டுகள் ஏற்படுகின்றன (அளவு கோல்கள் நுணுக நுணுக, இந்த முற்செலவு இயக்கத்தின் நடப்புக் காலமும் துல்லியப் பட்டு வருகிறது). 25783 ஆண்டுகள் என்று எடுத்துக் கொண்டால், ஒரு ஓரையில் (உகத்தில்) 25783/12 = 2148.58 ஆண்டுகள் என்ற ஒரு பருவ காலம் அமையும். இந்தப் பருவகாலத்தை உகம் (=யுகம்) என்று சொல்லுகிறார்கள். உகம் உகமாய் மாந்த வாழ்க்கை மாறுகிறது என்பது இப்படித் தான். இப்பொழுது மீன உகத்தில் இருக்கும் நாம் அடுத்து ஐந்தே ஆண்டுகளில் அஃகரை உகத்திற்குள் நுழையப் போகிறோம்;

இந்திய வானியலில் முற்செலவம் என்ற அயனத்தையும், வலயம், தன்னுருட்டு ஆகியவற்றையும் சேர்த்து இயக்கங்களைக் கணக்கிடும் முறைக்கு ”உடன் அயன முறை” (உடன் = சக என்று வடமொழியில் அமையும்; சக அயன முறை = sayana method) என்று பெயர். மேலையர் பெரும்பாலும் இந்த முறையில் தான் காலங்களையும்க் கணிக்கிறார்கள். மாறாக, முற்செலவம் என்ற அயனத்தை

முற்றாகக் கழித்து மற்றவற்றைப் பார்ப்பது நில்லயன முறை (nirayana method) எனப்படும். இந்திய வானியலில் முற்செலவத் திருத்தம் (precession correction) கொண்ட நில்லயன முறை என்பதே விதப்பாகப் பின்பற்றப்படுகிறது.

நில்லயன முறையின் படி, தை மாதத்தில் இருந்து ஆனி மாதம் வரை இருக்கும் சூரியத் தோற்ற நகர்ச்சியை வட செலவு (=உத்தர அயனம்) என்றும், ஆடி மாதத்தில் இருந்து மார்கழி மாதம் வரை இருக்கும் சூரியத் தோற்ற நகர்ச்சியை தென் செலவு (=தக்கண அயனம்) என்றும் சொல்லுவார்கள். நில்லயன முறையின்படி, தென்செலவை முடித்துக் கொண்டு, வடசெலவைச் சூரியன் தொடங்குவது தை முதல் நாளில் தான். அதே பொழுது இந்தக் காலத்தில் உடன் அயன முறையின்படி, வடசெலவு தொடங்குவது திசம்பர் 22 ஆகும். இங்கே கூறும் கால வேறுபாடு முற்செலவத்தால் ஏற்படுவது.

இன்னொரு விதமாய்ப் பார்த்தால், சனவரி 14/15ல் நடக்க வேண்டிய பனி முடங்கல், ஒரு நாள் முன் போய் சனவரி 13/14ல் நடக்க, 25783/365.25636556 = 70.587672, ஆண்டுகள் ஆக வேண்டும். இந்த அளவை வைத்துக் கொண்டு, வெறும் முழு நாட்களாய்ப் பார்க்காமல், இன்னும் நுணுக்கமாய் நாட்கள், மணி, நுணுத்தம் என்று கணக்குப் போட்டால், இன்று திசம்பர் 22ல் நடக்கும் பனி முடங்கல், 1722 ஆண்டுகளுக்கு முன்னால் சனவரி 14-லேயே நடந்திருக்கும் என்று புலப்படும். அதாவது கி.பி.285-க்கு அண்மையில் பனிமுடங்கல் என்பது, பொங்கல் நாளில் நடந்திருக்கும்.

அந்தப் பொழுதில், நில்லயன முறையும், உடன் அயன முறையும் ஒரே கணக்கைக் காட்டும். இன்னொரு வகையிற் சொன்னால், இந்திய அரசின் அதிகாரக் கணக்கின் படி, முற்செலவத்தின் நடப்புச் சுற்று தொடங்கிய ஆண்டு கி.பி. 285 ஆகும்.

இந்திய வானியலில் முற்செலவத்தின் நடப்புச் சுற்று தொடங்கிய நிலையை நினைவு படுத்தி, "பசந்த ஒக்க நாளும் மேழ விழுவும் கி.பி.285 இல் ஒன்று சேர்ந்திருந்தன" என்று சொல்லுவார்கள். (ஒருக்களித்த விசும்பு வட்டத்தில் மேழ ஓரை தொடங்கும் நாளை மேழ விழு என்றும், துலை ஓரை தொடங்கும் நாளைத் துலை விழு என்றும் சொல்லுவது வானியல் முறை. மலையாளத்தில் மேழ விழுவை மேஷ விஷு என்றும், துலை விழுவைத் துலாம் விஷு என்றும் சொல்லுவார்கள்.)

மேலவிழு, துலை விழு ஆகியவற்றைச் சொன்னது போலவே, "பொங்கல் நாள்" என்பது ஒரு காலத்தில் (அதாவது கி.பி.285ல்) "பனிமுடங்கலைச் சுட்டிக் காட்டிய பண்டிகை" என்பது இதுவரை சொன்ன விளக்கத்தால் புலப்படும். பனிமுடங்கலைக் கொண்டாடுவதன் மூலம், "அந்த நாளுக்கு அப்புறம் இரவு குறைந்து பகல் நீளும், இனிமேல் மகிழ்ச்சி பொங்கும், பனி குறையும், சூரியன் நெடு நேரம் பகலில் இருப்பான், இனிமேலும் வீட்டிற்குள் அடங்கியிருக்க வேண்டாம்" என்று உணர்த்துகிறோம். தெற்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்த கதிரவன் இனித் திரும்பி வந்து வடக்கு நோக்கி வரத் தொடங்குவதற்காக, அவனுக்கும் இறைவனுக்கும் நன்றி சொல்லும் ஒரு விழா தான் இந்தப் பொங்கல் விழா.

அந்த அடிப்படையைப் பார்க்கும் போது, பொங்கல் விழா என்பது சங்கம் மருவிய காலத்தில் தான் முதலில் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்கிறோம். இதற்கு ஏற்றாற் போல சங்க இலக்கியத்தில் (கி.பி.285க்கு முந்திய இலக்கியத்தில்) எங்கணுமே பனிமுடங்கலை ஒட்டி எழுந்த பொங்கல் விழா பற்றிய குறிப்பு பதிவு செய்யப் படவே இல்லை. அப்படியானால் "பொங்கல் விழாவை கி.பி.285 ற்கு முன் தமிழர் என்ன சொல்லிக் கொண்டாடினர்?" என்ற கேள்வி எழுகிறது.

அந்தக் கேள்விக்கான விடையை, விழாவைக் கொண்டாடும் முறையிலிருந்து புரிந்து கொள்ளலாம். பொங்கலின் போது சிவன், விண்ணவன் என்று எந்தச் சமயத்தின் தொன்மக் கதைகளும் ஊடே கலந்து சொல்லப் படுவதில்லை. பொங்கலுக்கான படையல் என்பதும் வெட்ட வெளியில் சூரியனுக்குக் கீழே அளிக்கப் படுகிறது. அறுவடை முடிந்து பெற்ற புத்தரிசி, கரும்பு, மஞ்சள், பனங்கிழங்கு, நம்முடைய கொடிவழிக் காய்கறிகள் (குறிப்பாக அவரை, புடலை, கத்திரி, வாழை, சர்க்கரை வள்ளிக் கிழங்கு, கருணைக் கிழங்கு போன்றவையே அன்று வைக்கப்படும். மேலையர் காய்கறிகளை இந்தப் படையலோடு வைப்பதைத் தவிர்ப்பார்கள்), வெல்லம் ஆகியவற்றோடு தான் படையல் இடப்படுகிறது. விழாவிற்கு முன்னால், வீட்டைத் தூய்மை செய்து, முடிந்தால் வெள்ளையடித்து, கோலமிட்டுச் செய்யும் ஒவ்வொரு வேலையிலும் கூடச் சமயஞ் சேராத ஈடுபாடே இருக்கும். விழாவின் போது செய்யும் "பொங்கலோ, பொங்கல்" என்ற கூப்பாடு கூட நல்லது நடக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பையே குறிக்கிறது.

இத்தகைய குறிப்புக்கள் அத்தனையும், இந்த விழாவைத் தமிழர் என்னும் இனக்குழு (tribe) தொடர்பான விழா என்று தெளிவாக உணர்த்துகின்றன. இந்த விழாவின் நடைமுறையைப் பார்த்தால், மெய்யியற் சமயங்கள் (religions emphasizing

philosophy) தமிழகத்தில் நிலைகொள்ளுவதற்கு முன்னாலிருந்தே, இனக்குழு வழிபாடுகள் நிலவிய போதே, இந்த விழாக் கொண்டாடுவது தொடங்கியிருக்க முடியும், ஆனால் வேறு எதையோ அது குறித்திருக்க வேண்டும் என்று புரிந்து கொள்ளுகிறோம். "அந்த வேறு எது?" என்பது அடுத்த கேள்வி.

[இன்றைக்கும் கூட இனக்குழு வழிபாடுகள் எல்லாமே, குறிப்பாக அய்யனார் கோயில்கள், அம்மன் கோயில்கள், கருப்பண சாமி கோயில்கள் ஆகியவற்றில் நடக்கும் - tribal worships - எல்லாம் பொங்கலிட்டுப் படையல் இடுவது (இது பெரும்பாலும் கறியாகவும், ஓரோவழி மரக்கறியாகவும் இருக்கும்), மாவிளக்கு வைப்பது என இயற்கையளவிலேயே இருப்பதை ஓர்ந்து பார்த்தால் நான் சொல்லுவது புரியும்.]

[இந்த இடத்தில் கொஞ்சம் இடைவிலகல். பொதுவாக, மெய்யியற் சமயங்கள் நம்மூரில் களப்பிரர் ஆட்சிக்கு அப்புறமே நிலைத்தன. அதுவரை நம்மூரில் விரவியவை இனக்குழுச் சமயங்களும் (tribal religions), வடபுலத்தில் இருந்து வந்த செயினம், புத்தம் (இவற்றோடு இங்கே பெரிதும் பங்களிக்கப் பட்ட ஆசீவகம்), வேதநெறி ஆகியவையுமே.

மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த மாணிக்கவாசகரின் திருவாசகத்திற்கும் (மாணிக்க வாசகரின் காலம் பற்றிப் பலர் வேறுபடக் கூடும். என்னுடைய இன்றையப் புரிதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு தான்), ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த திருமந்திரத்திற்கும்ம முன்னால் சமய வரைபாட்டைச் சொல்லும் நூல்கள் தமிழில் ஏற்படாததே மெய்யியற் சமயங்கள் தமிழர் வரலாற்றில் பின்னால் ஓங்கியவையே என்பதை உணர்த்தும். அதே பொழுது சிவன் கோயில், விண்ணவன் கோயில் போன்றவை சங்க காலத்திலும் இருந்திருக்க முடியும். ஆனால் அவை ஏதோ ஒரு மெய்யியலைச் (சித்தாந்தத்தைச்) சுட்டிக் காட்டின என்று சொல்லமுடியாது. (என்னுடைய புரிதலின் படி மாணிக்க வாசகரே தமிழில் எழுந்த முதல் சிவநெறி மெய்யியற்காரர்.)

கோயிலைக் குறிக்கும் சொற்கள், குறிப்பாக ஆலயம் என்ற சொல் ஆல மரத்து வெளி என்ற பொருளையும், அம்பலம் என்ற சொல் திறந்த வெளி என்பதையும், கோட்டம் என்ற சொல் கூடுகின்ற இடம் என்ற பொருளையுமே காட்டுகின்றன. எல்லோரும் பெரிதாக இன்று பயன்படுத்தும் கோயில் என்ற சொல் கூட "இறைவன் வீடு" என்று இன்றைக்கு வலிந்து கூறப்படும் பொருளைக் காட்டிலும், கோவுகிற இல் = கோவில் என்று பொருள் கொள்ளுவது சிறப்பாக இருக்கும் என்று தோன்றுகிறது. கோத்தல்/கோவுதல் என்ற வினைச்சொல்லிற்கு

ஒன்றுசேர்த்தல் என்றே பொருள் அமைகிறது. ஊரில் உள்ளவர் ஒன்று கூடும் இடம் கோவில் என்ற பொருள் இந்த வினைச்சொல்லின் அடிப்படையில் இயல்பாக வருகிறது. ஆக ஆலயம், அம்பலம், கோட்டம், கோவில் என்ற இந்தச் சொற்கள் எல்லாமே இனக்குழுப் பொருள்களையே தருகின்றன.

அந்த வகையில் சங்க இலக்கியங்கள் காட்டும் இறை வழிபாடுகள் எல்லாம் வெறுமே இனக்குழு வழிபாடுகளாகவே இருக்கின்றன. அவற்றில் மீநிலைச் சமயப் பொருள்கள் பொதுவாக அமைவதில்லை. [பெரும் ஆதன் (=பரமாத்மா), உயிர் ஆதன்(=ஜீவாத்மா), பதி - பசு - பாசம் போன்று விளக்கம் சொல்லும் மெய்யியல்கள் எழுவதற்கு முன்னமே இருந்த பொருளை நான் இங்கு சுட்டிக் காட்டுகின்றேன்.] தமிழகத்துள் சங்க காலத்திற்குச் சற்று முன்னால் நுழைந்த வடபுலத்து வேத நெறியும் கூட முதலில், வேத நெறியின் வழி வேள்வி நடத்துவது, வேண்டுதல், அவி சொரிதல் என இனக்குழு வழிபாட்டையே காட்டுகிறது. இந்த வேத நெறி தமிழ்நாட்டில் ஏற்படுத்திய தாக்கம் பற்றிப் பலவிதமான தவறான புரிதல்கள் தமிழ் இணையத்தில் உலவுகின்றன. அதைப் பற்றி இந்தக் கட்டுரையில் நான் பேச முற்படவில்லை. வேறு ஒரு பொழுது பார்க்கலாம்.

இந்த இனக்குழு வழிபாட்டைக் கேள்வி கேட்டு வாதப் படுத்துவதின் மூலம், உலகாய்தம், செயினம், புத்தம், ஆசீவகம் போன்றவை கலகச் சமயங்களாய் (polemic religions) நம்மூரில் எழுந்தன. அவற்றிற்கு விடை சொல்லும் முகத்தால், எதிர்வினையாக, வடநாட்டில் உபநிடதங்களும், தமிழகத்தில் மாணிக்க வாசகராலும், திருமூலராலும், திருவாசகமும், திருமந்திரமும் எழுந்தன. திருவாசகத்திற்கு முந்திய மெய்யியற் செய்திகளை நான் தமிழில் கண்டதில்லை.]

"சரி, கி.பி.285-க்கு முன்னால், இந்த விழா எதுவாக இருந்திருக்கும்?" என்பதை இனிப் பார்ப்போம்.

கி.பி.285 கால அளவில் தான், நம்மூரில் ஆண்டு ஒன்றை நான்கு பருவங்களாய்ப் பிரிக்கும் பழக்கம் பெரிதும் புழக்கத்திற்கு வந்தது. சங்க இலக்கியம் முழுதிலும் இந்த நான்கு பருவக் காலம் குறிப்பிடாதது வியப்பாக இருக்கிறது. மாறாகப், பின்பனி தொடங்கி, இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி ஈறாக ஆறு பெரும்பொழுதுகள் ( = இருதுப் பருவங்கள்) குறிப்பிடப்படுகின்றன.

இப்படிப் பின்பனியில் ஆண்டைத் தொடங்குவதற்கு சங்க இலக்கியத்திலும்,வடமொழி சாற்றங்களிலும் சான்றுகள் இருக்கின்றன. தொல்காப்பிய வழக்கத்தின் படி காரில் இருந்து ஆண்டு தொடங்கியதும் புலப்படுகிறது. இளவேனிலிற் தொடங்கியது சங்க காலம் முடியும் போதே ஏற்பட்டிருக்க வேண்டும். (சிலம்பில் இந்திரவிழா இளவேனிலில் தொடங்குகிறது.)

எந்தவொரு சூரிய ஆண்டுத் தொடக்கமும் (tropical year beginning) பனிமுடங்கல், வேனில் முடங்கல், இரு ஒக்க நாட்கள் என்ற நான்கு நாட்களில் தான் தொடங்க முடியும். அவற்றில் ஒக்க நாட்கள் என்பவை வானியல் அறிவு கூடிய காலத்தில் கணக்கிட்டுப் பார்த்தே அறிய முடியும். ஆனால் முடங்கல் நாட்களோ வெறும் குச்சியின் நிழலை வைத்தே அறிந்து விட முடியும்.

இனக் குழுக்களாய் வாழ்ந்த காலத்தில் கூட நேரம் என்பது நிழலை வைத்தே கண்டறியப் பட்டது. இந்திய வானியலில் சாய் என்ற சொல் நிழலின் வழி வானியல் படித்த வரலாற்றை நமக்கு உணர்த்தும். (சாய் என்பது வடமொழியில் jya என்று ஒலிபெயர்ப்பாகும்; வடமொழியில் இந்த ஒலிபெயர்ப்புச் சொல்லுக்குப் பெண்ணின் மார்பு வளைவு என்ற பொருள் இருந்ததைக் கண்டு, அரபு வழி கிரேக்கம் போன போது, sine என்ற சொல்லெடுக்கும். தமிழனின் சாய் எப்படியோ திரிந்து இன்று மேலை நாடுகளிற் sine ஆகி நிற்கிறது.)

பின்பனியில் ஆண்டைத் தொடங்குவது என்பது சூரியனின் வட செலவில் இருந்து தொடங்குவதற்கு இணையானது. அப்படியானால் தைமுதல் நாள் பொங்கல் விழாவைக் குறிப்பதற்கு முன்னால் ஆண்டுத் தொடக்கத்தைக் குறித்தது என்ற பொருளையே ஏரணத்தின் மூலம் நாம் பெறுகிறோம். ஏதோ ஒரு காரணத்தால், நாள்காட்டுகளில் இருந்து இந்திய வானியலில் ஓரைகளுக்கு நகர்ந்த காலம் கி.பி.285. அதே காலத்தில் தான் இப்போதைய முற்செலவச் சுற்றும் தொடங்கியிருக்கிறது. ஆறு பெரும்பொழுதுகளுக்கு மாறாய் நான்கு பருவங்களைப் பேசும் பழக்கமும் தோன்றியிருக்கிறது. களப்பிரர் ஆட்சி தமிழகத்தில் நிலைத்ததும் இதே காலமே. இன்னும் இது பற்றி ஆய்வு செய்யப்பட வேண்டிய செய்திகள் பலவும் இருக்கின்றன.

பெரும்பொழுதுகளுக்கு மாதங்கள் குறிப்பிடும் போது இந்தக் காலத்தில் (மாசி,பங்குனி), (சித்திரை, வைகாசி), (ஆனி, ஆடி), (ஆவணி, புரட்டாசி), (ஐப்பசி, கார்த்திகை), (மார்கழி, தை) என்று ஆறு இருமாதங்களைக் குறிப்பிடுவார்கள். இத்தகைய இன்றையப் புரிதலை மீண்டும் முற்செலவம் கொண்டு உரசிப் பார்த்தால், ஒவ்வொரு இருதுவையும் 24 நாட்களுக்கும் மேல் முன்தள்ளிப் பார்க்க

வேண்டும். அப்படித் தள்ளும் போது, பின்பனி என்பது சங்க காலத்தில் (தை, மாசி) என்ற மாதங்களையும், இளவேனில் என்பது (பங்குனி, சித்திரை) மாதங்களையும், முதுவேனில் என்பது (வைகாசி, ஆனி) மாதங்களையும், கார் என்பது (ஆடி, ஆவணி) மாதங்களையும், கூதிர் என்பது (புரட்டாசி, ஐப்பசி)மாதங்களையும், முன்பனி என்பது (கார்த்திகை, மார்கழி) மாதங்களையும் குறித்திருக்க வேண்டும். அப்படியானால், ஆண்டுத் தொடக்கம் என்பது தை முதல் நாளே என்பது புரியும்.

பிறகு எப்படி ஆண்டு/ஆட்டை என்ற சொல் எழுந்தது? மேழ ஓரை என்பது ஆடு என்ற உருவைக் குறிக்கும் ஓரையே. ஆட்டின் வழி ஏற்பட்ட சொற்கள் ஆண்டு, ஆட்டை என்பவை. ஆடு தலையாக எண்ணப் பட்டது நெடுநல் வாடையில்,

**திண்ணிலை மருப்பின் ஆடுதலை யாக**
**விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து**
**முரண்மிகு சிறப்பிற் செல்வனோடு நிலைஇய**
**உரோகிணி நினைவனள் நோக்கி -----**

என்று குறிப்பிடப்படுகிறது. உறுதியாக நெடுநல் வாடை என்பது கி.பி.285க்கு முன்னர் எழுந்த பாட்டே ஆகும்.

அப்படியானால், இரண்டு விதமான ஆண்டுத் தொடக்கங்கள் (ஒன்று தையில் தொடங்குவது, இன்னொன்று சித்திரையில் தொடங்குவது) இந்த நாவலந்தீவில் இருந்திருக்கின்றன. கொஞ்சம் கொஞ்சமாய், தைத்திங்கள் என்பது ஆண்டுத் தொடக்கம் என்ற குறிப்பு ஒழிந்து, அதே பொழுது, பழைய நினைவுகளைக் குறிக்கும் முகத்தான் சூரியப் படையலோடு அது அமைந்து போனது; அதே காலத்தில், கொஞ்சம் கொஞ்சமாய் சித்திரைத் தொடக்கமே ஆண்டுத் தொடக்கம் ஆயிற்று போலும்.

சூரியன் மேழத்தில் நுழைவதே இன்றையத் தமிழர் புரிதலில் ஆண்டுப் பிறப்பு. அதே போல சூரிய மானத்தின் படி, சூரியன் ஓர் ஓரையில் இருந்து இன்னோர் ஓரைக்குப் போவதே மாதப் பிறப்பாகும். சூரிய மானப் பெயர்களான, மேழம் (=மேயம்>மேஷம்), விடை (ரிஷபம்), ஆடவை (மிதுனம்), கடகம், மடங்கல் (=சிகையம்>சிம்ஹம்), கன்னி, துலை(=துலாம்), நளி (விருச்சிகம்), சிலை (தனுசு), சுறவம் (மகரம்), கும்பம், மீனம் என்ற பெயர்களையே மலையாளத்தார் போலத் தமிழரும் புழங்கினால் நன்றாக இருக்கும். [இப்பொழுது சூரியச் சந்திரமானப் பெயர்களான சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி,

கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி ஆகியவற்றையே பயன்படுத்துகிறோம். பழைய கல்வெட்டுக்களில் ஞாயிற்று மாதங்களும் (காட்டாக மகர ஞாயிறு), திங்கள் மாதங்களும் (தைத் திங்கள்) பதிவாக்கப் பட்டிருக்கின்றன.]

இன்றோ, மேலையரின் தாக்கத்தால் மீண்டும் பனிமுடங்கலுக்கு இணையான சனவரி 1 தொடக்கத்தை ஆண்டுத் தொடக்கமாய்க் கொள்ளும் போக்கு அதிகரித்திருக்கிறது. மாதங்களைக் கூட சூரிய மாதங்களையோ, சூரியச் சந்திர மாதங்களையோ சொல்லாமல் மேலையர் மாதங்களை வைத்தே சொல்லும் பழக்கமும் கூடி வருகிறது. ஒரு 20, 30 ஆண்டுகளுக்கு முன்னால் கூட மார்கழி மாதத்து இசைவிழா என்று தான் சொல்லக் கேட்டிருக்கிறோம்; இன்றைக்கு "டிசம்பர் சீஸன்" என்றால் தான் பலருக்கும் விளங்குகிறது. காலத்தின் கோலம் பாருங்கள்!

கட்டுரையை முடிப்பதற்கு முன்னால் ஒரு வேண்டுகோள்.

பொங்கல் விழாவில் "சூரியன் வடக்கு நோக்கி நகர்வதற்கு நன்றி சொல்லுகிறோம்" - அவ்வளவு தான். அந்த நன்றி, சமயம் சாராத, பொது இறைப் பெயருக்குப் போகிறது. பொங்கலும் படையலும் மெய்யியற் சமயம் சாராதவை. என்னைக் கேட்டால், இந்த விழா எந்தச் சமயத்தவரும் பழகக் கூடிய விழா. [திருவோணம் என்ற விழாவைக் கூட பல சமய நெறியினரும் கேரளத்தில் கொண்டாடுகின்றனர். மாவலி மீண்டும் தங்கள் வீட்டிற்கு வந்து மகிழ்ச்சியைத் தருவான் என்று எண்ணுகிறார்கள். இன்றைக்குத் திருவோணம் தமிழகத்தில் கொண்டாடவில்லை என்றாலும் அது உறுதியாகத் தமிழர் பண்டிகை தான்; மாவலியும், பெருங்கலாதனும்(>பெருகலாதன்>ப்ரகலாதன்; ஆதன் என்பதே அவன் சேர அரசன் என்பதை நமக்கு உணர்த்தும்) நம் தமிழ் அரசர்கள் தான். சங்க இலக்கியத்தில் பல இடங்களில் திருவோணம் நம்மூரில் - குறிப்பாக மதுரையில் - கொண்டாடப் பட்டதற்குச் சான்றுகள் இருக்கின்றன. பழந்தமிழகத்தில் ஒரு பகுதியான கேரளத்தில் மட்டுமே இப்பொழுது திருவோணம் கொண்டாடப் படுகிறது.]

பொங்கலைப் பொதுவாய்த் தமிழர் கொண்டாடுவதற்கு என்ன தயக்கம், இதில் சமயம் எங்கே வந்தது, என்று புரியவில்லை. பொங்கல் கொண்டாடுவதால், சிவனும் மகிழ்வான்; விண்ணவனும் மகிழ்வான்; தேவனும் மகிழ்வான்; அல்லாவும் மகிழ்வார்; இயற்கையும் சிறக்கும். நண்பர்களே! கொஞ்சம் ஓர்ந்து பாருங்கள்.

## பொங்கலோ பொங்கல்!

(குறிப்பு: இது பூங்கா வலையிதழுக்காக, அவர்கள் கேட்டுக் கொண்டதின் பேரில், 10 ஆண்டுகளுக்கு முன் எழுதிய கட்டுரை. என்னுடைய வலைப்பதிவில் சேர்த்து வைப்பதற்கும், பின்னூட்டு இருந்தால் மறுமொழிக்கவும் வேண்டி, அங்கு பதியப்பட்டது.)

படம் உதவி: விக்கிப்பீடியா

https://upload.wikimedia.org/wikipedia/commons/2/2b/Preparation_of_Pongal.jpg

---

தொடர்பு: இராம.கி. <poo@giasmd01.vsnl.net.in>

http://valavu.blogspot.com

## 4. கொங்கர்புளியங்குளம் கல்வெட்டுக்களும் சமணர் சின்னங்களும்

**– முனைவர். க.சுபாஷிணி**



கொங்கர்புளியங்குளம். பண்டைய தமிழ் மக்களின் தொல் மரபுகள் தொடர்ச்சியாக இன்றும் பேணப்பட்டு வரும் ஒரு முக்கிய வரலாற்றுச் சிறப்புப் பெற்ற பகுதி. இன்று காண்பதற்குப் பாறையும் புதர்களும் தானே இருக்கின்றன என நினைப்போர் உள்ளே சென்று பார்த்தால் வளமான தமிழர் தொல் பழம் மரபுகள் இன்று உயிர்ப்புடன் இங்குத் தொடர்வதை அறியலாம்.

மதுரையின் திருமங்கலம் வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர் கொங்கர்புளியங்குளம். தேனிக்குச் செல்லும் சாலையில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தை அடுத்து அமைந்துள்ளது இந்தச் சிற்றூர். மதுரையிலிருந்து ஏறக்குறைய 15 கி.மீ தூரத்தில் உள்ளது இவ்வூர்.

பசுமை மாறாத வகையில் இப்பகுதி அமைந்திருக்கின்றது. இங்கு வாழும் மக்கள் சிறிய வகையில் பயிர் விவசாயம் செய்து வாழும் விவசாயிகள். நாகமலை பாறை பகுதிக்குச் செல்வதற்குக் கீழே நாட்டுப்புற வழிபாடு நடைபெறும் மாயன் கோயில் ஒன்று இங்குள்ளது. உருவங்கள் அற்ற வகையில்

செங்குத்தான ஒரு  கல்லினை மட்டுமே வைத்து வழிபடும் மரபு இங்குள்ளது. மிகப் பழமையான வழிபாட்டுக் கூறுகள் மாற்றமடையாத நிலையில் இன்றும் தொடர்வதாக இந்த வழிபடு தலம் அமைந்திருக்கின்றது.

ஒரு செங்குத்தான கல்லை வைத்து அக்கல்லைக் கடவுளாக உருவகித்து மாலைகள் பூசைப் பொருட்கள் வைத்து வழிபாடு நடத்தப்படுகின்றது. இந்த மாயன் வழிபாட்டினை நினைக்கும் போது நம் சிந்தனையில் தென் அமெரிக்காவில் குறிப்பாக மெக்சிகோ, குவாட்டமாலா போன்ற நாடுகளில் இன்றைக்கு 4000 ஆண்டு வாக்கு எனக் கணக்கிடப்படும் மாயன் கலாச்சாரம் நினைவுக்கு வரலாம். பண்டைய மரபுகளில் இருக்கும் பல சடங்கு முறைகளில் இத்தகைய ஒற்றுமைகளை அதிகம் காணலாம். இவை ஆராயப்பட வேண்டியவை.

அத்தோடு சங்ககால இலக்கியத்தில் நாம் அறியும் மாயோன் என்ற கடவுளின் ஒரு கூறாக இது அமைய வாய்ப்பிருக்கலாம் என்பதும் ஆராயப்பட வேண்டியதே.

இங்குள்ள மாயன் கோயிலுக்கு வடகிழக்குப் பகுதியில் இறந்தோரை எரிக்கும் ஒரு சுடலை இருக்கின்றது. இங்கு மக்கள் இறந்தவர்களைக் கொண்டு வந்து எரித்து சாம்பலையும் எலும்புத் துண்டுகளையும் எடுத்துச் செல்லும் மரபு இன்றும் தொடர்கின்றது.

இந்தக் கோயிலுக்கு பின்னால் உள்ள பாறையில் தான் இன்றைக்கு 2200 ஆண்டுகளுக்கு முன்னர் சமண முனிவர்கள் தங்கியிருந்து பள்ளிக்கூடங்களை அமைத்து கல்வியும் கலையும் செழிக்கச் செய்துள்ளனர். அவர்களின் வாழ்விடமாக இங்குள்ள குகைத்தளம் அமைந்திருக்கின்றது. அங்கு முனிவர்கள் தங்க இடம் அமைத்துக் கொடுத்த நல்லுள்ளங்களின் பெயர்களை பண்டைய தமிழ் எழுத்துக்களில் கல்வெட்டாகப் பொறித்து வைத்துள்ளனர்.

உள்ள நாகமலைத்தொடர் பாறைகளின் மேற்பகுதியில் 60க்கும் மேற்பட்ட சமண கற்படுக்கைகள் உள்ளன. அங்கு செல்வதற்குக் கீழ்ப்பகுதியிலிருந்து ஏற்படுத்தப்பட்டுள்ள படிகளில் ஏறிச்செல்லவேண்டும்.

இங்கு அப்பாறையினைச் செதுக்கி வரிசை வரிசையாக படுக்கைகளை அமைத்திருக்கின்றனர்.  இது இயற்கையான குகைத்தளமாகும். இக்குகையின் முகப்புப் பகுதியில் காடி என அழைக்கப்படும்  நீர்வடி விளிம்பு

அமைக்கப்பட்டுள்ளது. அதன் மேல் சுவற்றுப் பகுதியில் பெரிய அளவில் செதுக்கப்பட்ட தமிழி (பிராமி) எழுத்துக்கள் கொண்ட வாசகங்கள் உள்ளன.

**முதல் கல்வெட்டின் பாடம்:**

**குறகொடு பிதவன் உபச அன் உபறுவ(ன்)**

இதன் பொருள், உபசன் ஆகிய உபறுவன் என்பவரால் இக்குகை கொடுக்கப்பட்டது. உபசன் என்பது சமய ஆசாரியன் என்னும் பொருள்படும். உபறுவன் என்பது ஆட்பெயர். குற என்னும் சொல் கூறை என்னும் பொருளில் இக்குகையைக் குறிப்பது. கொடுபிதவன் என்பதைக் க் கொடுப்பித்தவன் என்று கொள்ளல் வேண்டும்.

2ம் கல்வெட்டு முதல் கல்வெட்டிலிருந்து இரண்டடி தூரத்தில் அதே பாறைப்பகுதியில் வெட்டப்பட்டுள்ளது.

**இரண்டாம் கல்வெட்டின் பாடம்:**

**குறு கொடல்கு ஈத்தவன் செற் அதன் ஒன்**

குறு என்பது கூரை என்றும், கொடல் என்பது கொடுத்தல் என்றும், குஈத்தவன் என்பதை குயித்தவன் எனக் கொண்டு குகையைச் செதுக்கியவன் எனப் பொருள் கொள்ளல் வேண்டும். இறுதியில் உள்ள இரண்டு குறியீடுகள் பொன் என்பதைக் குறிப்பன.

**மூன்றாவது கல்வெட்டுப் பாடம்:**

**பாகன் ஊர் பேராதன் பிடன் இத்தவேபொன்**

பாகனூரைச் சேர்ந்த பேராதன் பி(ட்)டன் கொடுத்த பொன் என்பது இதன் பொருள். வே பொன் என்பதை வெண்பொன் எனக் கொள்ளலாம். பாகனூர் என்பது இம்மலையின் பின்புறம் உள்ள நிலப்பகுதியாகும். பிடன் என்பது பிட்டன் என்னும் ஆள் பெயராகக் கொள்ளல் வேண்டும்.பாகனூரே இன்றைய சோழவந்தான் எனவும் கொள்ளலாம்.

இக்கல்வெட்டுக்கள் மூன்றும் கி.மு.2ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை.

இக்கல்வெட்டின் மேற்குப் பகுதியில் பாறையின் மேல் சிறிய தீர்த்தங்கரர் திருமேனி செதுக்கப்பட்டுள்ளது. அதன் கீழ் ஸ்ரீ அச்சணந்தி செயல்

எனும் வட்டெழுத்துக் கல்வெட்டு உள்ளது. இது கி.பி. 9-10ம் நூற்றாண்டைச் சேர்ந்தது.




கொங்கர்புளியங்குளம் இன்றைக்கு ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட காலகட்டத்தில் சமண முனிவர்கள் தங்கி வாழ்ந்து கல்விச்சாலைகளை அமைத்து சமண நெறி தழைக்கச்செய்த ஒரு முக்கிய இடமாகும். பக்திகாலத்தில் சமண சமய வீழ்ச்சிக்குப் பின்னர் மீண்டும் கி.பி.9ம் நூற்றாண்டு வாக்கில் அச்சணந்தி முனிவர் ஏற்படுத்திய சீரிய நடவடிக்கைகளினால் இப்பகுதியில் மீண்டும் சமணம் தழைத்தோங்கியது. அதன் சான்றாக இருப்பது தான் நாம் இன்று காணும் தீர்த்தங்கரர் சிற்பமும் அதன் கீழ் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டுகளுமாகும்.

இந்த முக்கியப் புராதனச் சின்னத்தைப் பற்றி அக்கறை கொள்ளாத சுயநலவாதிகள் இங்கே பாறை உடைப்புப் பணிகளைத் தொடங்கி சில பகுதிகளை சேதப்படுத்தி விட்டனர். ஆயினும் இது தடுக்கப்பட்டு, இன்று கொங்கர்புளியங்குளம் புராதனச் சின்னங்கள் நாம் பார்த்து நம் வரலாற்றின் பழமையை நினைத்துப் பெருமைகொள்ளும் வகையில் இங்குள்ளன.

இங்கு வந்து செல்வோர் தங்கல் பெயர்களை கீறியும், கற்படுக்கைகளைச் சிதைத்தும் இச்சின்னங்களை அழிப்பது வேதனைக்குரிய விசயமாகும். இவை நம் சொத்துக்கள் என்று மனதில் உணர்ந்தால் இவற்றைச் சேதப்படுத்தும் எண்ணம் மனதில் எழாது. இதனை மனதில் கொண்டு இந்த வளம் மிக்க பகுதியை நமது பாரம்பரியச் சின்னங்களில் ஒன்றென உணர்ந்து பெருமை கொள்வோம்.

குறிப்பு: மாமதுரை, பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம்

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 5. கல்லாபுரம் பாறை ஓவியங்கள்

**– து.சுந்தரம்**

### வாணவராயர் அறக்கட்டளை வரலாற்று உலா

கோவை-வாணவராயர் அறக்கட்டளை சார்பாக மாதந்தோறும் ஒரு வரலாற்று உலா நிகழ்வு நடைபெற்றுவருகிறது. அவ்வகையில், சென்ற 22-10-2017 ஞாயிறன்று உடுமலைப் பகுதியில் கல்லாபுரம் அருகில் பாறை ஓவியங்களைக் காணச் சென்றிருந்தோம். அண்மையில், பழநியைச் சேர்ந்த நாராயணமூர்த்தி என்னும் ஆய்வாளர் உடுமலைப் பகுதியில் தொன்மையான பாறை ஓவியங்களைக் கண்டறிந்து செய்தி வெளியிட்டிருந்தார். அந்த வரலாற்றுத் தொன்மையை நேரில் பார்த்த பயணம் குறித்த பதிவு இங்கே பகிர்ந்துகொள்ளப்படுகிறது.

### பயணம் தொடங்கியது

எங்கள் பயணம் காலையில், கோவையிலிருந்து தொடங்கியது. வெவ்வேறு பணியிலும் தொழிலிலும் இருப்பவர்கள், பணியை நிறைவு செய்தவர்கள், கல்லூரி மாணவர்கள், இல்லத்தரசிகள் எனப் பல்வகை மக்களும் வரலாற்று ஆர்வம் காரணமாகக் கலந்துகொண்டனர். ஏறத்தாழ நாற்பது பேர். கோவையிலிருந்து உடுமலை சென்றதும் அங்கு உடுமலைப்பகுதி ஆய்வாளர் உடுமலை இரவி என்பார் எங்களுடன் இணைந்துகொண்டார். உடுமலையிலிருந்து கல்லாபுரம் செல்லும் சாலையில் பயணம்.

### கல்லாபுரம்-வரலாற்றுப் பின்னணி கொண்ட ஊர்

உடுமலைப்பகுதி, பழங் கொங்குநாட்டின் இருபத்து நான்கு நாட்டுப்பிரிவுகளுள் ஒன்றான கரைவழி நாட்டில் அமைந்திருந்தது. உடுமலைக்கு மிக அருகில் இருக்கும் பழநி, கொங்குநாட்டின் வைகாவி நாட்டில் இருந்தது. கரைவழி நாட்டில் கல்லாபுரம் அமைந்திருந்தது. கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கொங்குச் சோழன் விக்கிரம சோழனின் கல்வெட்டில் கரைவழி நாட்டுக் கல்லாபுரமான விக்கிரம சோழ நல்லூர் என்னும் குறிப்பு காணப்பெறுகிறது.

சங்கிராம நல்லூர் சோழேசுவரர் கோயில் கல்வெட்டு (A.R. No.145/1909)

**1 ஸ்வஸ்திஸ்ரீ த்ரிபுவநச்சக்ரவத்தி கோநேரிந்**

**2 மை கொண்டாந் கண்டந் காவநாந சிவபத்த**

**3 னுக்கு  நம் ஓலை குடுத்தபடியாவது கரைவழி**
**4 நாட்டுக் கல்லாபுரமான விக்ரமசோழ நல்லூ**
**5 ரில் நாம் இவனுக்கு இட்ட ..... ஒந்றுக்கு நி**
**6 லமாவது**

13-ஆம் நூற்றாண்டுக்கு முன்பிருந்து இன்று வரை கல்லாபுரம் என்னும் இயற்பெயரைக் கொண்டிருந்த இவ்வூர் 13-ஆம் நூற்றாண்டில் விக்கிரமசோழனின் ஆட்சிக்காலத்தில் அவன் பெயரால் விக்கிரமசோழ நல்லூர் என்னும் சிறப்புப் பெயர் கொண்டிருந்தது என்பதைக் கல்வெட்டு வாயிலாக அறிகிறோம்.

**மதகடிப்புதூர்**

கல்லாபுரம் சாலையில், தமிழக நீர்வள ஆதாரத்துறை, உலக வங்கி நல்கையின் உதவியுடன் மேற்கொண்ட ”நீர்வள நிலவளத் திட்ட”த்தின் கீழ் வடிநிலப்பணியாகப் பழைய வாய்க்காலைச் சீரமைத்த இராம குளம் வாய்க்கால் குறுக்கிட்ட இடத்தில் பேருந்துப் பயணத்தை நிறுத்தினோம். அது மதகடிப்புதூர் என்னும் பெயருடைய பகுதி. பெயருக்கேற்றவாறு, அந்த இடத்தில் வாய்க்காலில் ஒரு மதகு கட்டியிருந்தார்கள். அருகே, வயலில் ஒரு பகுதியில் நெற்பயிரின் நாற்றங்காலில் சிலர் வேலை செய்துகொண்டிருந்தனர். மதகுக்கு அருகில் இரண்டு சிறுமிகளும் ஒரு சிறுவனும் வயல் நீரில் நண்டு பிடிக்கும் விளையாட்டில் களிப்புற்று ஈடுபட்டிருந்தனர். ஆவல் மேலிட அவர்களை அழைத்து நண்டைக் காட்டச் சொல்லி, அவர்கள் காட்ட, அதைப்பார்த்து அச்சிறார்களின் களிப்பில் நானும் பங்கு கொண்டேன். பசுமை வயல்களின் பக்கம் சென்று பல நாளாயின. பள்ளிப் பருவத்தில், புக்கொளியூர் அவினாசியில் சுந்தரர் முதலைவாய்ப் பிள்ளையை மீட்ட தாமரைக்குளத்தில் மீன் பிடித்த நிகழ்வு, நினைவுக் களத்தில் (நினைவுக்குளத்தில் என்றும் சொல்லலாம்) மேலெழுந்ததைத் தடுக்க இயலவில்லை. அங்கிருந்த முதிய உழவர் ஒருவர், இங்குக் காணும் மதகு நடுமதகு என்றும் இன்னும் இரு மதகுகள்  இப்பகுதியில் இருப்பதாகவும் சொன்னார். வாய்க்காலும், மதகுகளும் சேர்ந்து மதகடிப்புதூர் என்னும் பெயருக்குச் சான்று பகர்ந்தன. பகலுணவை இந்த வாய்க்கால் கரையில் அமர்ந்து உண்டுவிட்டு, ஓவியங்கள் இருக்கும் மலைப்பாறை நோக்கிப் பயணமானோம்.

**குகைத்தளம் நோக்கி**

மதகடிப்புதூர் வாய்க்காலிலிருந்து கிளைத்துச் செல்லும் மண்பாதையில் (இட்டேரிப் பாதை என்றும் கூறுவதுண்டு) சிறிது நேரம் நடந்து சென்றோம். வழியில், ஆங்காங்கே அவரைச் செடிகள் பயிரிட்டிருந்தார்கள். இட்டேரியின்

இராம குளம் வாய்க்கால்



நாற்றங்கால்



நண்டு பிடிக்கும் சிறார்கள்



குகைத் தளம் நோக்கி - பயணக்காட்சிகள்









குகைக் காட்சிகள்







முடிவில், கருவேல மரங்கள் அடர்ந்த ஒரு தொகுப்பு காணப்பட்டது. வனச் சூழ்நிலையை நினைவூட்டியது. அதைக்கடந்ததும் பாதை ஒற்றையடிப்பாதையாக மாற்றம் பெற்றது. அதனூடே சற்று நேரம் நடந்த பின்னர் பாதையின் வடிவம் மறைந்து, காலடியில் பாறைக்கற்களும், பக்கப் பகுதிகளில் கள்ளி போன்ற சிறு மரங்களும் காணப்பட்டன. ஆங்காங்கே, சரிந்த பாறைப்பரப்புகள். கால்கள் இடறி விடாமல் கண்ணும் கருத்துமாக அடியெடுத்து வைக்கவேண்டிய சூழ்நிலை. சில இடங்களில் நம்மைக் குனிந்து கையூன்ற வைக்கும் பாறைச் சரிவுகள்; பாறை இடுக்குகள். அரை மணிக்கூறு இவ்வாறான பயணம். முடிவில் குகைத் தளத்தை அடைந்தோம்.

**குகைத்தளமும் ஓவியங்களும்**

குகை, ஒரு விரிந்த குடையின் பாதி வடிவத்தில், கடல் பரப்பில் ஒரு நீண்ட அலை தலை உயர்த்திக் கரைநோக்கிக் கவிந்து வரும் தோற்றத்தில் காணப்பட்டது. நீண்ட குகை. மேற்பரப்பில் ஆங்காங்கே சில தேன் கூடுகளும், குருவிக்கூடுகளும். குருவிக்கூட்டினுள் குருவிக்குஞ்சுகளை உண்ணும் நோக்கத்தில் பாம்புகள் வந்துபோனதன் அடையாளமாகப் பாம்புகள் உரித்த சட்டைகள் பறவைக்கூடுகளை ஒட்டித் தொங்கிக்கொண்டிருந்தன. குகையின் கூரைப் பகுதியில் பாறையில் வெள்ளை நிறத்தில் (WHITE OCHRE) வரையப்பட்ட சிறு சிறு ஓவியங்கள் நிறைய இருந்தன.

**ஓவியம்-1 குழு நடனம்**

சிறு வடிவங்களைக் கொண்ட ஓவியங்களுக்கிடையில், அனைத்து ஓவியங்களுக்கும் தலையாகக் காணப்பட்டது ஒரு பேரோவியம். மற்ற சிறு ஓவியங்களில் இல்லாத ஒரு அழகும் நேர்த்தியும் இந்த ஓவியத்தில் இருந்தன. ஓவியத்தில் பதினேழு மனித உருவங்கள். ஒரு விலங்குருவம். நமது பார்வையில், வலப்பக்கம் காணப்படும் மனித உருவங்கள் பதினொன்று. அவற்றில் எட்டு உருவங்கள் பெரியவர்கள்; மூவர் சிறார்கள்; இடப்பக்கம் காணப்படும் மனித உருவங்கள் ஆறு. இவர்கள் அனைவர்க்கும் நடுவில் ஓர் ஆட்டின் உருவம் வரையப்பட்டுள்ளது. ஆணும் பெண்ணுமாகக் கலந்திருக்கும் இவ்வுருவங்கள் கைகோத்து ஆடிக்கொண்டிருக்கின்றன. பயண ஏற்பாட்டாளரான தொல்லியல் ஆய்வாளர் இரா.ஜெகதீசன் அவர்கள், இந்த ஓவியம் ஒரு வழிபாட்டு நிகழ்வைக் குறிக்கிறது என்றார். வழிபாட்டுக்கான சடங்கில் ஆடு பலியிடப்பெறுகிறது. மக்கள் குழுவாக நடனமாடுகிறார்கள். அருமையானதோர் ஓவியம். இரா.ஜெகதீசன் அவர்கள் குறிப்பிடும்போது, "சங்க இலக்கியங்களில் வேலன் வெறியாடல் போன்ற வழிபாடு கூறப்பட்டுள்ளது. வெற்றியின் காரணமாக எல்லாரும் சேர்ந்து ஆடுகின்ற ஆட்டம் இங்கே குகை ஓவியமாகியுள்ளது. கரூரில் கொங்கர்கள் ஆடும் ஆட்டம் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் உள்ளது. அது போலவே, இறை வழிபாட்டு

ஓவியம்-1: குழு நடனம்



குழு நடனம் - ஓவியத்தின் வலப்புறம்



குழு நடனம் - ஓவியத்தின் இடப்புறம்



குழு நடனம் - மையத்தில் ஆடு



சதிக்கை ஓவியம்





படம்-உதவி ஆதிரை சின்னசாமி (முக நூல்)

மரபில் மனிதரைப் பலியிட்டு வழிபடும் மரபும், பகைவரைப் பலியிட்டு வழிபடும் மரபும் இருந்துள்ளன. பின்னாளில், மனிதரின் இடத்தில் தாம் வளர்க்கும் கால்நடைகளைப் பலியிட்டுள்ளார்கள். இது காட்டுப்பகுதியாக இருந்தபோது, கால்நடை தொடர்பான போர் அல்லது வேட்டை ஆகிய நிகழ்வுகளில் தமக்குத் தேவையானவை கிடைக்கவேண்டும் என்னும் வேண்டுதலுக்காகப் பலி கொடுத்தல் நடைபெற்றிருக்கக்கூடும். அந்த வகையில், இங்கே குழு நடன ஓவியத்தில் ஆடு காட்டப்பட்டுள்ளது" என்று குறிப்பிட்டார்.

**ஓவியம்-2: சதிக்கை**

மற்றொரு ஓவியத்தில், பெரியதாக ஒரு கை மட்டும் வரையப்பட்டுள்ளது. கை, பெண்ணின் கையைக் - குறிப்பாக வளைக்கை - குறிப்பதாகும். கை என்பது சதிக்கல் வகையைச் சார்ந்த நடுகற்களில் காணப்படும் ஒன்று. வீரக்கை என்று தொல்லியலில் குறிப்பிடுகிறார்கள். உடன் கட்டை ஏறிய பெண்டிரை வழிபடும் செயலைக் குறிக்க காட்டப்படுவது கையாகும். இங்குள்ள சதிக்கை உருவம் உடன்கட்டை ஏறிய பெண்ணின் வழிபாட்டிடத்தைக் குறிக்கலாம். குழு நடன ஓவியத்தை இந்தப் பெண்ணைத் தெய்வமாக வழிபடும் காட்சியாகக் கருதலாம்.

சதிக்கை ஓவியம் (படம்-உதவி ஆதிரை சின்னசாமி (முக நூல்)

**ஓவியம்-3: போர்க்காட்சி**

போர் வீரன் ஒருவன் வில்லெடுத்து வேறொருவன் மீது அம்பு எய்வதுபோல் ஓர் ஓவியம் காணப்படுகிறது. மற்றவன் குதிரைமீது இருப்பதாகக் கருதலாம். முதல் வீரனின் உருவத்துக்குக் கீழே இன்னொரு வீரனும் வில் கொண்டு தாக்குவது போல் வரையப்பட்டுள்ளது.

**ஓவியம்-4: வழிபாடு**

ஓர் ஓவியத்தில், ஒரு கட்டம் வரையப்பட்டு அதனுள் குதிரை மீதமர்ந்த வீரனின் உருவம் காட்டப்பட்டுள்ளது. இக்கட்டத்துக்கு மேற்புறம், பெரிய உருவம் ஒன்று வரையப்பட்டுள்ளது. இது கடவுள் வழிபாட்டைக் குறிப்பதாகலாம். மனித உருவத்தைவிடப் பெரிதாக ஓர் உருவம் வரையப்படுவது தெய்வ உருவத்தைக் குறிக்கவே. பெரிதாக இருக்கும் உருவங்களில் யானையின் உருவமும் காணப்படுகிறது. இப்பகுதி ஆனை மலையின் அருகில் இருப்பதைக் கருதிப்பார்க்கலாம். இக்குகை ஓவியங்களைக் கண்டறிந்த நாராயணமூர்த்தி அவர்கள் பழநிக்கருகில் உள்ள ஆண்டிப்பட்டி மலை என்று குறிப்பிட்டதால், பலரும் இக்குகையின் இருப்பிடத்தைச் சரியாகக் கண்டறிந்து ஓவியங்களைக் காண இயலவில்லை.

ஓவியம்-3 போர்க்காட்சி



ஓவியம்-4 வழிபாடு



உடுமலையைச் சேர்ந்த தென்கொங்கு சதாசிவம் என்னும் ஆய்வாளர், பெரிதும் முயன்று இக்குகையின் இருப்பிடத்தைக் கண்டதால், கோவைக் குழுவினர் மேற்படி பாறை ஓவியங்களைக் கண்டு மகிழும் வாய்ப்பு ஏற்பட்டது.

சில ஓவியங்களை இனம் காண இயலவில்லை. இவ்வோவியங்களைத் தொல்லியல் துறையினர் முறையாக ஆய்ந்து இவற்றின் விளக்கங்களையும், இவற்றின் காலத்தையும் வெளிக்கொணரும் வரலாற்றுச் செய்திகளை எதிர்பார்த்து நிற்போம்.

**நாயக்கர் கால வாய்க்கால் பாலம்**

பாறை ஓவியங்களைப் பார்த்து முடிந்ததும் கல்லாபுரத்தைக் கடந்து திருமூர்த்திமலை அணைப்பகுதியில் காட்சிக்கு வைத்திருக்கும் தளி பாளையக்காரர்களின் நினைவுக் கற்சிற்பங்களைக் காணப்புறப்பட்டோம். கல்லாபுரம் இந்தப்பகுதியிலேயே மிகச் செழிப்பான பகுதி. நீர்வளத்தால் நெல்வளம் பெருகும் நிலங்கள். வழியில் உழவோட்டும் அழகான காட்சிகள். அருகிலேயே, நீண்ட பாலம் போன்ற கட்டுமானம் ஒன்று காணப்பட்டது. ஆனால் அது பாலம் அன்று. நீரை எடுத்துச் செல்லும் ஒரு வாய்க்கால் தரைமட்டத்திலிருந்து உயர்த்தப்பட்டு அமைக்கப்பட்டிருந்தது. கல்லாபுரத்தின் அந்த இடத்தில் தரைவழிச் செல்லும் வாய்க்கால், தாழ்வான பகுதியைக் கடந்து செல்வதற்காகத் தரை மட்டத்திலிருந்து உயர்த்தி எழுப்பப்பட்டு மீண்டும் கிடை மட்டத்தில் செல்லும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. உடுமலை ஆய்வாளர் இரவி அவர்கள், இந்த வாய்க்கால் கட்டுமானம் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் நாயக்கர் காலத்தில் கட்டப்பெற்றது என்னும் செய்தியைச் சொன்னார்.

நாயக்கர் கால வாய்க்கால் பாலம்





படம் உதவி ராஜா ராமசாமி (முகநூல்)









**தளி பாளையப்பட்டு-நினைவுச் சிற்பங்கள்**

அடுத்து நாங்கள் திருமூர்த்திமலை அணைக்குச் சென்றோம். அணை கட்டியபோது சுற்றும் இருந்த சில கிராமங்களில் தளி பாளையக்காரர்களின் வரலாற்று எச்சங்களாகத் திகழ்ந்த நினைவுச் சிற்பங்களை இங்கே பாதுகாப்பாக ஒரு மேடையில் பதித்து வைத்துள்ளனர். காண்பதற்கு அருமையானவை. (படம் உதவி ராஜா ராமசாமி (முகநூல்)

**தூக்குமரத்தோட்டக் கல்வெட்டும் எத்தலப்ப நாயக்கரும்**

அடுத்து நாங்கள் சென்ற இடம் தளியில் இருக்கும் தூக்குமரத்தோட்டம். ஜல்லிப்பட்டிக்கும் தளிக்கும் இடையில் அமைந்துள்ளது இந்தத் தூக்குமரத்தோட்டம். இங்குள்ள ஒரு கல்வெட்டு தனிச் சிறப்புப் பெற்றது. ஆங்கிலேயன் ஒருவனைத் தளி பாளையப்பட்டின் எத்தலப்ப நாயக்கர் தூக்கிலிட்ட இடம் என்று கருதப்படுகிற இடத்தில் இருக்கும் கல்வெட்டு. தளி என்னும் ஊர், வரலாற்றுச் சிறப்புடைய ஓர் ஊராகும். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ஆங்கிலேயருக்கு எதிராக அப்போதிருந்த பாளையக்காரர்கள் போரிட்டார்கள். பாஞ்சாலங்குறிச்சியை ஆண்டுவந்த கட்டபொம்மன், வஞ்சனையால் ஆங்கிலேயரால் 16-10-1799 அன்று தூக்கிலிடப்பட்டான். அவன் தம்பி ஊமைத்துரை மற்ற பாளையக்காரர்களோடு சேர்ந்து வெள்ளையரை எதிர்த்துப் போரிட்டபோது தளி பாளையக்காரர் மலையாண்டி வெங்கிடுபதி எத்தலப்ப நாயக்கரும் சேர்ந்துகொண்டார். 1801-ஆம் ஆண்டு பிப்ரவரி 2-ஆம் நாள் தொடங்கி நூற்று நான்கு நாள்கள் நடைபெற்ற போரில் ஊமைத்துரைக்கு ஆதரவாக 14 பாளையக்காரர்களை ஒன்றிணைத்து அதற்குத் தலைமையேற்றவர் இந்த எத்தலப்ப நாயக்கர், எத்தலப்ப நாயக்கரை அடக்குவதற்காக அப்போதைய ஆங்கிலேய அரசு தந்திரமாக ஒரு தூதுக்குழுவை அவரைச் சந்திக்க அனுப்பிவைத்தது. கட்டபொம்மனின் நண்பரான எத்தலப்ப நாயக்கர், கட்டபொம்மனைச் சதியால் தூக்கிலிட்டதற்கு எதிர்வினையாகத் தனது படை வீரர்களை அனுப்பி ஆங்கிலத் தூதுக்குழுத் தலைவனை மட்டும் தனியே கைது செய்து அவனைத் தூக்கிலிட்டார்.

வெள்ளையர் இந்தியரைத் தூக்கிலிடும் செயலுக்கிடையில், இந்தியர் ஒருவர் வெள்ளையனைத் தூக்கிலிட்ட துணிவான அருஞ்செயல புரிந்தவர் என்னும் பெருமை எத்தலப்ப நாயக்கருக்கு உண்டு.

**கல்வெட்டுச் செய்தி**

கல்வெட்டு தனியார் ஒருவரின் தோட்டத்தில் அமைந்துள்ளது. சிலுவைக்கல் ஒன்று நின்ற நிலையிலும், அதன்கீழ், கல்வெட்டு பொறிக்கப்பெற்ற ஒரு





கற்பலகை தரையில் கிடத்தப்பெற்ற நிலையிலும் காணப்படுகின்றன. கோவை பூ.சா.கோ கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் கல்வெட்டியல் பட்டயப்படிப்புப் பொறுப்பாசிரியர் மற்றும் இணைப்பேராசிரியர் ச.இரவி அவர்கள் இக்கல்வெட்டைப் படித்துச் செய்தி வெளியிட்டுள்ளார். அவர் கூற்றிலிருந்து :

“திருப்பூர் மாவட்டம், உடுமலை வட்டத்திற்குட்பட்ட கிராமம் தளியில் ஆங்கிலேயர் ஒருவரைத் தூக்கிலிட்டதற்கு ஆதாரமாகக் கல்வெட்டு கண்டறியப்பட்டுள்ளது. அதனைப் படிக்க முயற்சித்த போது அது ‘அந்திரை கெதி’ அல்லது ‘எங்கிரை கெதி’ என்னும் ஆங்கிலேயரின் அடக்கம் செய்யப்பட்ட சமாதி எனக் கண்டறியப்பட்டது.”

நாங்கள் நேரில் பார்த்தபோது கல்வெட்டின் பாடம் பின்வருமாறு காணப்பட்டது.

**கல்வெட்டின் பாடம்:**

I N ( R I )

1 1801 வரு. (ஆபுரி)ல் மீ 23

2 உ வியாழ கிழமை வரை

3 க்கும் செல்லா நென்ற

4 துன்முகி வரு. சித்திரை மீ (..)

5 3 உ தஞ்சை நகரத்தி

6 லிருந்த அந்திரை கெதிஷ்

7 பறங்கி யிருபத்தேழு வ

8 யதில் தெய்விகமாகி அ

9 டங்கின சமாது + I H S

கல்வெட்டின் உச்சியில் I N R I என்று எழுதப்பட்டுள்ளது. இது Jesus Nazarenus Rex Judaeorum என்னும் இலத்தீன் மொழித் தொடரின் குறுக்க வடிவம். ஆங்கிலத்தில் “J” என்பது இலத்தீனில் “I” என்பதாக அமையும். இதன் பொருள் ”நாசரேத்தின் இயேசு யூதர்களின் அரசர்” என்பதாகும். வட சொல்லின் “ஜ” ஒலிப்பு, தமிழ் மொழியில் ”ய” என்பதாக ஒலிப்பதைக் கருதிப்பார்க்க. தமிழுக்கும் இலத்தீனுக்கும் இடையில் ஓர் ஒற்றுமை. அரசு என்னும் தமிழ்ச் சொல் அரைசு என்று திரிதலை விளக்கும் தமிழறிஞர் தேவநேயப்பாவாணர், இந்தச் சொல்தான் இலத்தீன் மொழிக்குச் சென்று “ரெக்ஸ்” எனத்திரிந்து வழங்குவதாகக் குறிப்பிடுவார். கல்வெட்டின் இறுதியில் ஒரு சிலுவைக்குறியும் அதைத் தொடர்ந்து I H S என்னும் எழுத்துகளும் காணப்படுகின்றன. இது Iesus Hominum Salvator என்னும் இலத்தீன் மொழித் தொடரின் குறுக்க வடிவம். ஆங்கிலத்தில் “J” என்பது இலத்தீனில் “I” என்பதாக அமையும் என்பதை முன்னரே கண்டோம். இதன் பொருள் ”மாந்த இனத்தைக் காக்கும் இயேசு” என்பதாகும்.

**கல்வெட்டு கூறும் செய்திகள்**

கி.பி. 1801-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23-ஆம் நாள் (தமிழாண்டு துன்முகி, சித்திரை மாதம்) தஞ்சையைச் சேர்ந்த பறங்கி அந்திரை கெதிஷ் (Andre Katie/Andrew Katie) என்பவன் (இருபத்தேழு வயதினன்) இறந்துபட்ட (தெய்விகமாகி அடங்கின) சமாதி இது என்னும் செய்தி கல்வெட்டு வாயிலாக அறியப்படுகிறது. கல்வெட்டில் தூக்கிலிடப்பட்டதாகவோ, தூக்கிலிட்டவர் எத்தலப்ப நாயக்கர் என்ற குறிப்போ இல்லை. எனவே, ஆங்கிலேயரைத் தூக்கிலிட்டதற்கு இக்கல்வெட்டு ஆதாரம் என்று கூறவியலாது. செவி வழிச் செய்திகள், ஆங்கிலேயன் தூக்கிலிடப்பட்டான் என்பதாகவும், தூக்கிலிட்டவர் எத்தலப்ப நாயக்கர் என்பதாகவும் அமைகின்றன. இதை உறுதிப்படுத்த வேறு சான்றுகள் - எடுத்துக்காட்டாக, மெக்கன்சி ஆவணங்கள் போன்றவை - தேவைப்படுகின்றன. இந்த நிலையில், ஆய்வாளர் உடுமலை இரவி அவர்கள், கல்வெட்டுள்ள இந்த இடம் (தூக்குமரத்தோட்டம்) எத்தலப்ப நாயக்கர் தூக்கிலிடப்பட்ட இடமாகும் என்றொரு கருத்தைச் சொன்னார். இந்தச் செய்திக்கும் தகுந்த சான்றுகள் தேவைப்படுகின்றன. வரலாற்றுப் பேராசிரியர் கோவை இளங்கோவன் அவர்கள் மற்றொரு கருத்தை முன்வைக்கிறார். 1799-இல் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்டபின்னர், 1801-1802 காலகட்டத்தில் ஆங்கிலேய அரசுக்கெதிராக ஒரு கூட்டமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இதில், பாளையக்காரர்கள், மருது பாண்டியர், கட்டபொம்மனின் சந்ததிகள், திப்புவின் சந்ததிகள், ஆங்கிலேய அரசுக்குப் பகை நாடான பிரஞ்சு அரசு ஆகியோர் ஒன்றிணைந்து எதிர்க்கிறார்கள். அந்த வகையில், தளி பாளையப்பட்டுக்கு உதவிய பிரஞ்சுக்காரர் ஒருவர் இறந்ததற்காக இந்தச் சமாதியும் கல்வெட்டும் எழுப்பப்பட்டிருக்கலாம். வரலாற்றுப் பேராசிரியரின் இக்கருத்து ஆய்வு நோக்கில் கருதற்பாலது. கல்வெட்டு ஆங்கிலேயர் வைத்திருந்தால் ஆங்கிலத்தில் இருந்திருக்கவேண்டும். தமிழில் கல்வெட்டு அமைவதால் இளங்கோவன் அவர்களின் கருத்து முன்னிலை பெறுகிறது. இறந்து போன பறங்கியின் பெயரான கெதிஷ் என்பது பிரஞ்சுப் பெயர்போலத் தோற்றமளிக்கிறது. இப்பெயர், பிரஞ்சுப்பெயர்தானா என்ற ஐயம் நீக்கப்படல்வேண்டும்.

**எத்தலப்ப நாயக்கரின் வரலாறு-நாட்டார் புனைவுகள்?**

1988-ஆம் ஆண்டு, தளியைச் சேர்ந்த சுந்தரசாமிக் கவுண்டர் என்பவர், "கீர்த்தி வீரன் எத்தலப்பன் வரலாறு" என்னும் தலைப்பில் நூல் வெளியிட்டுள்ளார். அதில், தளியில் திருமூர்த்தி மலைச் சாரலில், சரக்கூட ஆசிரமம் ஒன்றை 1970களில் அமைத்துத் துறவு வாழ்க்கை மேற்கொண்ட யோகி இராமசாமி அவர்களுக்கு நேர்ந்த ஒரு நிகழ்வினை அடிப்படையாகக் கொண்டு எத்தலப்ப நாயக்கரின் வரலாற்றை எழுதியுள்ளார். எத்தலப்ப நாயக்கனின் மெய்க்காப்பாளன்

சின்னையன் என்பவனின் ஆவி, பல இரவுப்போதுகளில் யோகி அவர்கள் முன்பு தோன்றி எத்தலப்ப நாயக்கன் வரலாற்றைச் சொன்னதாக நூல் விரித்துரைக்கிறது.

ஆங்கிலேயர்கள், தளி பாளையக்காரர் எத்தலப்ப நாயக்கருடன் சமாதானமாகப் போவதென ஒரு சிறு தூதுக்குழுவுடன் தளிக்கருகில் வந்து கோட்டைத்தளபதியிடம் எத்தலப்ப நாயக்கரைக் கண்டு பேசவேண்டும் என்று தூதுத் தகவல் அனுப்பியபோது, நாயக்கர் இதனை ஒரு சதியென நினைத்து வீரர்களை அனுப்பி ஆங்கிலேயத் தூதுவனைப் பிடிக்கச்செய்து தூக்கிலிடச் செய்தார். இதற்கு எதிர்வினையாக ஆங்கிலேயர் தளி மீது இரவு நேரத்தில் பீரங்கித் தாக்குதல் நடத்தினர். எத்தலப்ப நாயக்கரின் தம்பியும், அரண்மனைப் பெண்டிர் அனைவரும் இறந்துபடுகின்றனர். எத்தலப்ப நாயக்கர் தாம் வணங்கும் ஜக்கம்மா சிலையருகில் இருக்கும் சுரங்கப்பாதை வழியே வெளியேறித் தன்னுணர்வின்றி திருமூர்த்திமலை மேல் சென்றார். அங்கு அவரைக்கண்ட முதுவர் குடியினர், அவர் கைகாட்டியதிசையில் அவரை அகத்தியம்பாறை என்னுமிடதில் விட்டு அகன்றனர். அவரைத் தேடி அலைந்த மெய்க்காப்பாளன் சின்னையனுக்கு எத்தலப்ப நாயக்கரின் குரலில் ”தெற்கே மலைக்குப்போகிறேன் வந்து சேர்” என்னும் ஒலி கேட்டது. முதுவர் உதவியுடன் அகத்தியம் பாறை சென்ற சின்னையன், நாயக்கர் அங்கு உயிரோடு வீடுபேறுற்றார் என உணர்ந்தான். கனத்த குட்டையான, நீண்ட தாடியுடைய ஒரு முனிவர் சின்னையனை எதிர்கொண்டு, “நீ இன்னும் இருநூறு ஆண்டுகள் தூல உடலில் இருந்து இறைவனடி சேர்வாய்” என்று சொன்னதால் ஆவி வடிவில் யோகி இராமசாமியைச் சந்தித்து எத்தலப்ப நாயக்கரின் வரலாற்றைச் சொன்னதாக நூல் விரிகிறது. ஆனால், தளி பாளையப்பட்டின் வரலாறும், எத்தலப்ப நாயக்கரின் வரலாறும் இன்னும் முற்றாகச் சான்றுகளோடு நிறுவப்படவில்லை என்றே கருதவேண்டியுள்ளது.

---

தொடர்பு:

து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை (doraisundaram18@gmail.com)

அலைபேசி : 9444939156.

## 6. கொங்குநாட்டுக் கல்வெட்டுகள் - வெள்ளலூரும் கைக்கோளப் படையும்

– து.சுந்தரம்

**முன்னுரை:**

கல்வெட்டுகளைத் தேடிச் செய்திகளை வெளியிடும் பணி பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில், அண்மையில் அறிமுகமான கோவை நண்பர் திரு. தமிழ்மாணிக்கம் அவர்கள் ஒரு செய்தியைச் சொன்னார். வெள்ளலூரில் காசி அப்பச்சி கோயில் என அழைக்கப்படும் ஒரு கோயிலில் நடுகல் சிற்பம் ஒன்றினை மூலவராக வணங்கிவருகிறார்கள்; அதே கோயிலில் ஒரு தனிக்கல்லில் கல்வெட்டு ஒன்று உள்ளது. அச்செய்தியின் அடிப்படையில் கட்டுரை ஆசிரியர் சென்ற 26-08-2017 அன்று, வரலாற்று ஆர்வலர்களான நண்பர்கள் பாஸ்கரன், மீனாட்சிசுந்தரம் ஆகியோருடன் காசி அப்பச்சி கோயிலுக்குச் சென்று கல்வெட்டை ஆய்வு செய்தார்.

**காசி அப்பச்சி கோயில்:**

காசி அப்பச்சி கோயில



வெள்ளலூர் ஊரின் எல்லையில், இடையர்பாளையம் சாலையில், சாலையின் ஓரத்திலேயே அமைந்துள்ள ஒரு சிறு கோயில்தான் காசி அப்பச்சி கோயில். வேப்ப மரங்களுக்கிடையில், எளிமையான சிமெண்ட் தரையுடன் கூடிய சிறு வளாகம். ஒரு புறம் மேடைமேல் வீற்றிருக்கும் பிள்ளையார். இன்னொரு புறம் ஒரு சிறிய அறையைக் கருவறையாகக் கொண்டுள்ள காசி அப்பச்சி கோயில். மூன்றாவதாக நாம் கண்டறிந்த கல்வெட்டுக் கல். காசி அப்பச்சி கோயில் கருவறையில் மூலவராக இருப்பது ஒரு நடுகல் சிற்பம்.

**புலிகுத்திக்கல்லே வழிபடு தெய்வம்:**

கோவைப்பகுதியில் கால்நடைகளின் பட்டியில் காவல் பணியில் ஈடுபட்ட வீரர்களில், கால்நடைகளைத் தாக்கவருகின்ற புலிகளுடன் சண்டையிட்டுக் கொன்று தானும் இறந்துபடுகின்ற வீரனுக்கு எடுக்கப்பட்ட நினைவுக்கற்கள் நிறைய உள்ளன. அவ்வகை நடுகல் ஒன்றை இப்பகுதியில் கோயிலாக்கியுள்ளனர்.

நடுகல் வீரன், காசி அப்பச்சி என்னும் பெயரில் வழிபடப்படுகிறான். வழக்கமாகக் காணும் புலிகுத்திக்கல் சிற்பத்தின் கூறுகளே இங்கும் காணப்படுகின்றன.

புலிகுத்திக்கல் சிற்பம் - வழிபடு தெய்வமாக



வீரன் தன் வாளைப் புலியின் வாய்ப்பகுதியில் பாய்ச்சுகிறான். புலி தன் பின்னங்கால்களில் நின்றுகொண்டு, முன்னங்கால்களால் வீரனைத் தாக்கும் நிலையில் உள்ளது. அதன் வால் உயர்ந்து நிற்கிறது. வீரன் அணி செய்யப்பட்ட தலைப்பாகை அணிந்திருக்கிறான். தலைப்பாகையில் குஞ்சலம் காணப்படுகிறது. பெரிய செவிகளும் காதணிகளும் நன்கு புலப்படுகின்றன. இடைக் கச்சையுடன் ஆடை அமைந்துள்ளது. படையலோடு வழிபாடு நடக்கிறது.

**வாதப்பிள்ளையார் கோயில்:**

மேடையையே கோயிலாகப் பெற்ற பிள்ளையார், வாதப்பிள்ளையார் என இங்குள்ள மக்களால் அழைக்கப்படுகிறார். மக்கள் தம்முடைய வாத நோய் நீங்கவேண்டி இப்பிள்ளையாரையும் அருகில் அமைந்துள்ள கல்வெட்டு எழுத்துகள் உள்ள தனிக் கல்லையும் சேர்த்து வணங்குகிறார்கள்.

**கல்வெட்டு:**

மூன்றடிக்குள் உயரம் கொண்ட ஒரு தனிக்கல். நீள் சதுர வடிவம் கொண்டது. உச்சிப் பகுதியில் மட்டும் வளைவாக வடிக்கப்பட்டுள்ளது.

எழுத்துகளின் பதினோரு வரிகள் காணப்படுகின்றன. கோடுகள் செதுக்கப்பட்டுக் கோடுகளுக்கிடையில் எழுத்துகள் எழுதப்பட்டுள்ளன. கல்லின் தரைப்பகுதியில்

கல்வெட்டு



தரைக்குக் கீழே மேலும் சில வரிகள் இருக்கவேண்டும். அந்தப் பகுதியில்தான் கல்வெட்டுச் செய்தி முடிவடைகிறது எனக் கருதலாம். ஏனெனில், வழக்கமாகக் கல்வெட்டுகளின் முடிவில் காணப்படும் "இது பந்மாகேச்வர ரக்ஷை" என்னும் இறுதித் தொடர், இக்கல்வெட்டில், கல்லின் பக்கவாட்டுப் பகுதியில் பொறிக்கப்பட்டுள்ளன. கல்லின் பருமன் சிறியது. எனவே, மூன்று சிறு வரிகளில் "பந்மாகே(ச்வ)ர இரக்ஷை" என்னும் தொடர் எழுதப்பட்டுள்ளது.

**கல்வெட்டின் பாடமும் காலமும்:**

கல்வெட்டின் பாடம் கீழ் வருமாறு. கி.பி. 12-14-ஆம் நூற்றாண்டுக் காலகட்டத்தைச் சேர்ந்த தமிழ் எழுத்துகளால் எழுதப்பட்டுள்ளது.



கல்வெட்டின் முகப்புப் பகுதி

1 **(ஸ்வஸ்தி)ஸ்ரீ**
2 **வெள்ளலூர் ஆளு**
3 **டையார் தென்**
4 **னூராண்டார் தி**
5 **ருக்குளம் பெ**
6 **ரிய நாச்சியா(ர்)**
7 **வாரம்ம் இ**
8 **(து) அன்னதா**
9 **(ந) சிவபுரியி(ல்)**
10 **பொற்கோயிற்**
11 **கைக்கோளர்**



கல்வெட்டின் பக்கவாட்டுப் பகுதி

1 பந்மாகே
2 ர இரக்
3 கைக்ஷ

**கல்வெட்டுச் செய்திகள்-ஓர் ஆய்வு:**

கல்வெட்டுகள் “ஸ்வஸ்திஸ்ரீ’ என்னும் மங்கலத் தொடருடன் தொடங்குவது வழக்கம். அவ்வாறே இக்கல்வெட்டும் தொடங்குகிறது. ஆனால், கல்வெட்டின் காலத்தைக் கணிக்க உதவும் வகையில், அரசனின் பெயரோ, ஆண்டுக்குறிப்போ காணப்படவில்லை. ”வெள்ளலூர் ஆளுடையார்” என்பது வெள்ளலூரில் கோயில் கொண்டிருக்கும் இறைவனைக் குறிக்கும் பொதுத்தொடர். ”ஆளுடையார் தென்னூராண்டார்” என்னும் தொடர், ஊருடன் இணைத்து வழங்கும் இறைவனின் சிறப்புப் பெயரைக் குறிக்கும். அந்த வகையில், தென்னூரின் இறைவன் என்பது உணரப்படும். எனில், வெள்ளலூருக்குத் தென்னூர் என்று மற்றொரு பெயரும் உண்டு என்பது புலனாகிறது. இதற்குச் சான்றாகப் பின்வரும் கல்வெட்டுகளைக் குறிப்பிடலாம்.

1 - கல்வெட்டு எண். 213 (கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்-கோயம்புத்தூர் மாவட்டம்-நூல்.)

வரி

14 ஆளுடையா
15 ர் தென்னூர்ப்
16 பதியுளாற்கு ஒரு

2 - கல்வெட்டு எண். 214 (கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்-கோயம்புத்தூர் மாவட்டம்-நூல்.)

வரி

10 ண்டு வேளிலூர்
11 த் தென்னூர் நக்
12 கனார்.....

3 - கல்வெட்டு எண். 216 (கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்-கோயம்புத்தூர் மாவட்டம்-நூல்.)

வரி

3 .......பேரூர்நாட்டு

4 வெள்ளலூர் ஆளுடையார்

5 தென்னூராண்டார் கோயிற்

கல்வெட்டில், **"அன்னதான சிவபுரியில்"** என்னும் தொடர் காணப்படுகிறது. அன்னதான சிவபுரி என்பது வெள்ளலூருக்கு வழங்கிய மற்றொரு பெயராகும். இதற்குச் சான்றாகப் பின்வரும் கல்வெட்டைக் குறிப்பிடலாம்.

4 - கல்வெட்டு எண். 212 (கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்-கோயம்புத்தூர் மாவட்டம்-நூல்.)

வரி

6 பேரூர் நாட்டு அன்

7 னதான சிவபுரியான

8 வெள்ளலூர்...

காசி அப்பச்சி கோயில் கல்வெட்டில், **"பொற்கோயிற் கைக்கோளர்"** என்னும் தொடர் உள்ளது. இத்தொடர், கைக்கோள வீரர்களைக் கொண்ட படையினரைக் குறிக்கும். கி.பி. 10-ஆம் நூற்றாண்டுச் சோழர் காலக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படும் பல்வகைப் படையினரில் கைக்கோளர் படையினரும் ஒருவர். **"பொற்கோயில்"** என்னும் ஒருவகைச் சிறப்பு அடையாளத்தை அல்லது பட்டத்தைச் சிலருக்கு அரசர் வழங்கியிருத்தல் வேண்டும். ஏனெனில், மேற்சொன்ன படையினர் அல்லாது மக்கட்குடிகள் சிலருக்கும் இந்தப் பட்டம் இணைந்து வருவதைக் கீழ்க்காணும் கல்வெட்டு வரிகள் தெளிவாக்குகின்றன.

1) செய்யாறு வட்டம்-திருவோத்தூர் வேதபுரீசுவரர் கோயில் கல்வெட்டு. (க.வெ. எண். 112/ தொல்லியல் துறை ஆண்டறிக்கை 102/1900.)

**"பொற்கோயில் கைக்கோளப் பெரும்படையர்க் குடி"**

2) திருவண்ணாமலை வட்டம்-செங்கம் ரிஷபேசுவரர் கோயில் கல்வெட்டு. (க.வெ. எண். 118/ தொல்லியல் துறை ஆண்டறிக்கை 106/1900.)

**"பொற்கொற்ற கைக்கோளரும்"**

3) காஞ்சிபுரம் வட்டம்-செவ்வல்லிமேடு கயிலாசநாதர் கோயில் கல்வெட்டு. (க.வெ. எண். 45/ தொல்லியல் துறை ஆண்டறிக்கை 42/1900.)

"இக்கோயிலில் **பொற்கோயில் ஆசாரி எழுத்து**"

கோயில், கொற்றம் ஆகிய சொற்கள் அரசு, அரசர், அரண்மனை ஆகியவற்றோடு தொடர்புடையன என்பது கருதத்தக்கது.

நமது வெள்ளலூர்க் கல்வெட்டிலும் இந்தப் "பொற்கோயில்" அடைமொழி பெற்ற கைக்கோளர் குறிப்பிடப்படுகின்றனர். முதன்மைச் சோழர் ஆட்சியில் வழங்கிய இச்சிறப்புப் பெயருடைய கைக்கோளர், கொங்குச் சோழர் ஆட்சியில், கொங்குப்பகுதியிலும் கி.பி. 12-14-ஆம் நூற்றாண்டுகளில் இருந்துள்ளனர் என்பது புலனாகிறது. சிறப்புப் படைப்பிரிவினரான கைக்கோளர் வெள்ளலூரில் இருந்துள்ளனர் என்பது, வெள்ளலூர் ஊரின் முதன்மையை, சிறப்பைக் காட்டுகிறது எனலாம். ஏனெனில், வெள்ளலூர், பேரூர் நாட்டுப்பகுதியில் சிறப்புப் பெற்ற ஒரு வணிக நகரமாக இருந்துள்ளது; வணிகப் பெருவழியில் அமைந்திருந்தது; உரோமானிய வணிகர்கள் வெள்ளலூர் வழியாக வணிகம் செய்துள்ளனர்; உரோமானிய நாணயங்கள் இங்கு ஏராளமாகக் கிடைத்துள்ளன. குறு நிலத்தலைவனான ஒரு வேளிரின் தலை நகராக இருந்துள்ளது. அதன் காரணமாகவே "வேளிலூர்" எனப் பெயர் பெற்ற இந்நகரம் "வெள்ளலூர்" எனத் திரிந்திருக்கவேண்டும் எனத் தொல்லியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

கல்வெட்டில் "தென்னுராண்டார் திருக்குளம் பெரியநாச்சியார் வாரம்" என வரும் தொடர், கோயிலைச் சேர்ந்த திருக்குளத்தால் பெறப்படும் வருவாய், நாச்சியார் என்னும் அம்மனுக்கு வேண்டிய வழிபாட்டுச் செலவினங்களுக்குப் பயன்பட்டிருக்கக் கூடும் என்பதைத் தெரிவிப்பதாகத் தொல்லியல் அறிஞர் திரு. பூங்குன்றன் கருதுகிறார்.

**தென்னூர் ஆண்டார் - தேனீசுவரர் - மாற்றம்:**

தென்னூர் என்னும் பழம்பெயர் கொண்ட ஊரில் கோயில்கொண்ட இறைவர் தென்னூர் ஆண்டார் என வழங்கப்பெற்றார். காலப்போக்கில், பழம்பெயர்கள் பெருஞ்சமயத்துத் தாக்கத்தினால் வடமொழிப் புனைவு பெற்றுத் தம் பழமையை இழந்தன. எடுத்துக் காட்டாக, தென்கொங்கில் கடத்தூரில் மருதமரத்துடனான தொடர்பால் "மருதுடையார்" என்று பெயரமைந்த இறைவன் "மருதீசர்" என்றும், பின்னர் "அர்ஜுனேசுவரர்" என்றும் மாற்றுப்பெயரால் அழைக்கப்பெற்றது வடமொழித் தாக்கத்தால்தான். "அர்ஜுனம்" என்பது மருத மரத்தைக்குறிக்கும் வடமொழிச் சொல்லாகும். இவ்வாறே, தென்னூராண்டார், தேனீசுவரர் ஆனார். அதற்கேற்பப் புனைவுகள் ஏற்பட்டிருக்கவேண்டும். **"தினமலர்"**

**நாளிதழின் இணையதளமான "கோயில்கள்" என்னும் தளத்தில், "தேன் ஈயினால் பூஜிக்கப்பட்டதால் மூலவருக்கு தேனீஸ்வரர் என்ற பெயர் வந்தது" என்னும் செய்தி காணப்படுகிறது. இது புனைவே அன்றி வேறென்ன?**

**அன்னதான சிவபுரி-பெயர்க்காரணம்:**

நமது வெள்ளலூர்க் கல்வெட்டில் அன்னதான சிவபுரி என்னும் பெயர் உள்ளது. இப்பெயர் வெள்ளலூருக்கு எவ்வாறமைந்தது என்பது ஆய்வுக்குரியது. ஆனால், "வெள்ளலூர் ஆளுடையார்" எனக் குறிப்பிடும் கல்வெட்டு, "அன்னதான சிவபுரியில் பொற்கோயில் கைக்கோளர்" என்றும் குறிப்பிடுவதால், கோயில் அமைந்திருந்த பகுதி வெள்ளலூர் என்றும், கைக்கோளர் இருந்த பகுதி (வெள்ளலூர் நகரத்தின் வேறொரு பகுதி) அன்னதான சிவபுரி என்றும் வழங்கியிருக்கவேண்டும் எனக் கருதலாம்.

தமிழறிஞர் ரா.பி. சேதுப்பிள்ளையவர்கள் தம்முடைய "ஊரும் பேரும்" நூலில்,
**"அன்னதானத்தால் அழியாப் புகழ் பெற்ற
வள்ளல் ஒருவரது ஞாபகச் சின்னமாக இவ்வூர் விளங்குகின்றது என்று கூறலாகும். "**
என்று குறிப்பிடுகிறார். எனவே, **வள்ளலூர் என்பது வெள்ளலூர் என மருவியது என்பர்.**

**வெள்ளலூருக்கு இன்னொரு பெயர்:**

வெள்ளலூருக்கு இன்னொரு பெயரும் உண்டு என்பது தெரியவந்துள்ளது. அண்மையில், இங்குள்ள கரிவரதராசப்பெருமாள் கோயிலில் திருப்பணிகள் செய்யப்பெற்றுக் குடமுழுக்கு நடந்தேறியது. அப்போது கருவறை விமானத்தின் ஜகதிப்படையில் கல்வெட்டுகள் புலப்பட்டன. அதில் ஒரு பகுதியில், வெள்ளலூருக்கு **"அதிராசராசச் சருப்பேதிமங்கலம்"** என்று பெயர் வைத்த செய்தி காணப்படுகிறது. அதிராசராசன் (அதிராஜராஜன்) என்பவன் வீரகேரள அரசன். அவனது ஆட்சிக்காலம் கி.பி. 1069-1092. அவனை அடுத்து வந்த அரசர்களின் ஆட்சிக்காலத்தில், வெள்ளலூரைப் பிராமணர் குடியிருப்பாக ஆக்கியிருக்கலாம். **பிராமணர் குடியிருப்பு "சதுர்வேதி மங்கலம்" என்று அழைக்கப்பட்டது. சில கல்வெட்டுகளில், "சருப்பேதிமங்கலம்" எனவும் பயின்றுவரும்.**

**மேற்படி கல்வெட்டின் பகுதியின் பாடம்:**

1 **ட்டு .......(ஸ்ரீ க்ருஷ்ண) பட்ட ஸோமையாஜியார்.............**
2 **க்களுக்கு .......பேரூர் நாட்டு வெள்ளலூரான அதிராசராசச்**

3 சருப்பேதிமங்கலம் என்று தங்களுக்கு (வேண்டு) பிராமண(ர்)
4 .....குளத்துக்கு நான்கெல்லை ஆவது கீழ்பாற்கெல்லை
5 ..........................................................................................................

அதிராசராசச் சருப்பேதிமங்கலம் - குறிப்புள்ள கல்வெட்டு



**காசி அப்பச்சி கோயில் கல்வெட்டின் முழுச்செய்தி:**

வெள்ளலூரில் அன்னதான சிவபுரியில் இருக்கும் பொற்கோயில் கைக்கோளர் படையினர், வெள்ளலூர் சிவன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் தென்னூர் ஆண்டாருக்குத் திருக்குளம் அமைத்துக் கொடுத்துள்ளனர் என்பதாகவும், குளத்தின் வருவாய் அம்மன் வழிபாட்டுச் செலவினங்களுக்குப் பயன்படுத்தப்படவேண்டும் எனக் கல்வெட்டு எழுதிவைத்துள்ளனர் என்பதாகவும் கொள்ளலாம். இந்தத் தன்மத்தைக் கோயிலின் நிருவாகத்தில் இருக்கும் பந்மாகேசுவரர் கண்காணித்துப் பாதுகாக்கக் கடமைப்பட்டவர் ஆவார் என்று கல்வெட்டு தெரிவிக்கிறது.

**முடிவுரை:**

வெள்ளலூர், பழங்காலத்தில் பன்முகச் சிறப்புகளைப் பெற்ற ஒரு நகரமாக இருந்துள்ளமை புலப்படுகிறது. கோவை என்னும் கோவன்புத்தூர் உருவாவதற்கு முன்னரே கிரேக்க வணிகர்கள் வந்து போன நகரமாக இருந்துள்ளது. கி.பி. முதல் நூற்றாண்டளவிலேயே வெளிநாட்டு வணிகத்தொடர்புடையதாய் விளங்கிற்று என அறிகிறோம். இங்கு, பிராமணச் சதுர்வேதி மங்கலம் ஒன்று இருந்துள்ளது என்பதையும் அறிகிறோம்.

---

தொடர்பு: து.சுந்தரம் <doraisundaram18@gmail.com>
கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
அலைபேசி : 9444939156.

## 7. தொல்லியல் தடயங்களைத்தேடி-சாலைப்புதூர்

– து.சுந்தரம்

**முன்னுரை:**

நண்பர் துரை பாஸ்கரன், தாம் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர் பார்த்திருந்த சில பழங்கோயில்களை நினைவு கூர்ந்து, அவற்றை இப்போது சென்று பார்க்கலாமா என்று அண்மையில் கேட்டிருந்தார். தொல்லியல் தடயங்களைத் தேடும் ஆர்வத்தால் ஒப்புக்கொண்டேன். நீண்ட நாள்களுக்குப் பின்னர் இக்கோயில்களின் நினைவு வந்த காரணம் பற்றிக் கேட்டபோது அதன் பின்னணியைக் கூறினார். பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர், மலையேற்றப் பயிற்சி பெற்ற நண்பர்கள் சிலர் கோவையில் ஒரு குழு அமைத்து இயங்கிவந்தார்கள். அப்போது, குழுவைச் சேர்ந்த ஒருவர், சாலைப்புதூர் அருகில் விண்ணிலிருந்து வீழ்ந்த எரிகற்கள் கிடைப்பதாகக் கூறவே, குழு நண்பர்கள் சிலர் அவற்றைப் பார்ப்பதற்காகச் சாலைப்புதூர் சென்றுள்ளனர். அந்நிகழ்வைக் குழுவினருள் ஒருவரான சின்ன சாத்தன் என்பார் தாம் எழுதிய "வனவலம்" என்னும் நூலொன்றில் "விண்கற்களைத் தேடி ஒரு பயணம்" என்னும் கட்டுரையில் எழுதியிருக்கிறார். அதில், பயணத்தின்போது பார்த்த ஓரிரு பழங்கோயில்கள் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. அந்த நூலை அண்மையில் பார்க்க நேர்ந்த நண்பர் துரை பாஸ்கரன் மீண்டும் அங்குச் சென்று பார்க்கும் விழைவால் என்னை அழைத்துள்ளார். சென்ற 11-11-2017 அன்று, நண்பரும், நானும் சாலைப்புதூர் நோக்கிப் பயணம் மேற்கொண்டோம். அதன் பகிர்வு இங்கே.

**பயணம்:**

பல்லடம்-உடுமலை சாலையில் அமைந்துள்ளது சாலைப்புதூர். அங்கே, சாலையோரத் தேநீர்க் கடையில், தொகுப்பாக இருக்கும் பழங்கோயில்களின் இருப்பிடம் பற்றிக் கேட்டறிந்தோம். சாலைப்புதூரிலிருந்து கிழக்கே பிரியும் வண்டித் தடத்தில் எங்கள் நடைப் பயணம் தொடங்கியது. நண்பர், கல்லூரியில் தாவர இயலும் படித்தவர். பறவைகளைக் கண்டறியும் முறையையும் கற்றிருக்கிறார். எனவே, பயணத்தின்போது வழியில் செடிகளைப் பற்றிப் பேசிக்கொண்டும் சில செடிகளை இனம் கண்டு காண்பித்துக் கொண்டும் வந்தார். அண்மைக்கால மழைப்பொழிவினால், வண்டித்தடம் ஒரு மண்பாதை. இரு புறமும் செடிகளும் செடிகளுக்கப்பால் சோளப்பயிரும் சூழ்ந்து பசுமை கூட்டின. நகரத்தின் ஒலி, காற்று மாசுகளினின்றும் நமக்கு விடுதலை அளித்த ஓர் அழகான சூழல்.

அழகான வண்டிப்பாதை



வேலிப்பருத்தி



நரிக்கற்களால் அமைந்த வேலிச் சுவர்



ஊதாப்பூ



சூரல் கொடி



வேலிக்கல்லில் ஓணான்



பாதையில் ஒரு சில இடங்களில், பயிர் நிலங்களின் எல்லையாக நிற்கும், கற்களாலான சுற்று வேலிச்சுவர். சிறு சிறு கற்கள்; நெருக்கமாக அடுக்கிச் சுவராக்கியிருந்தார்கள். இவற்றை "நரிக்கல்" எனக்குறிப்பிடுவர் என்று நண்பர் தெரிவித்தார். பாதையின் இரு புறங்களிலும் பல்வேறு செடிகள். நண்பர்

வேலிப்பருத்தி என்று ஒரு செடியைக் காட்டினார். இன்னொரு செடியைச் சூரல் கொடி எனச்சொன்னார். சூரல் கொடியை (செடி?) இப்போதுதான் நான் காண்கிறேன். இந்தச் சூரல் கொடி மிகுந்து காணப்பட்டதால் சூரலூர் என்று தற்போதுள்ள சூலூரின் பெயர் வழங்கியது என்று தொல்லியல்-கல்வெட்டு அறிஞர் பூங்குன்றன் அவர்கள் குறிப்பிட்டது நினைவுக்கு வந்தது. கல்வெட்டுகளிலும் சூரலூர் என்றே சுட்டப்பெறுகிறது. பெயர் தெரியாத ஒரு காட்டுச் செடியில், ஊதா வண்ணத்தில் மலர் ஒன்று பூத்திருந்தது ஓர் அழகான காட்சி. வேலிக்கல்லின் மீது ஓர் ஓணான் தலையைத் தூக்கி நின்றுகொண்டிருந்தது.

**கோயில் வளாகம்:**

பதினைந்து நிமிட நடைக்குப் பின்னர் ஒரு கோயில் வளாகத்தை அடைந்தோம். அங்கே நாலைந்து கோயில்கள் காணப்பட்டன. கோயில்கள் பற்றிக் கேட்டறிய அங்கே எவரும் இல்லை. ஒன்றில் பெரிய குதிரையின் உருவத்தின் அடிப்பகுதியில் இருந்த தற்காலத்துக் கல்வெட்டு, அது, கரையாம்பாளையம் மதுரை வீரன் கோயில் என்றது. கல்வெட்டில் காணப்பட்ட துந்துபி ஆண்டு 1982-ஐக் குறிக்கும். மற்றொரு கோயில் பத்ரகாளியம்மன் கோயில் என்று பின்னர் அறிந்தோம். இக்கோயிலின் விமானம் சாலை அமைப்பைக் கொண்டிருந்தது. இரண்டு அடுக்கு கிரீவப்பகுதியில் சிற்ப வேலைப்பாடுகள் இன்றி, வெறுமையான சுவர்களே காணப்பட்டன. உச்சியில் மூன்று கலசங்கள். கோயிலின் முன்புறத்தில் உள்ள கல்லாலான விளக்குக் கம்பம் தவிர்த்து கருவறை, மண்டபம் ஆகியன செங்கல் கட்டுமானம். முழுதும் சுண்ணம் பூசப்பெற்று வெண்மை நிறத்தில் காணப்பட்டது. பழங்கோயிலின் ஓரிரு கற்கள் மண்ணில் கிடந்தன. ஒரு மரத்தடியில், பலகைக் கல் பரப்பின்மீது மூன்று சிறு கற்கள், இரு பெரிய கற்கள் என ஐந்து கற்கள் பதிக்கப்பெற்றிருந்தன. எவ்விதச் சிற்பச் செதுக்கல்களும் இல்லாமல் இயல்பாய்க் கற்களை ஐந்து, ஏழு என வரிசையாய்ப் பதித்து வைத்து வழிபடும் வழக்கம் நாட்டுப்புறங்களில் நம் காணும் காட்சிகளுள் ஒன்று. இது பற்றி சக்தி பிரகாஷ் என்பவர் தம் முக நூலில் கீழ்க்கண்டவாறு பதிவிட்டுள்ளார்:

"கொங்குப் பகுதியில் பெருவாரியான ஊர்களில் இன்றளவிலும் மக்களால் வணங்கப்படும் ஒரு தெய்வம்தான் "பொட்டுசாமி". இந்த பொட்டுசாமி நமது தொன்ம வழிபாடான நடுகல் வழிபாட்டின் நீட்சியாகக் கருதலாம். கொங்குப்பகுதிகளில் பொட்டு சாமியை ஊர் மந்தையிலும், குலதெய்வக் கோவில்களிலும், பிள்ளையார் மாரியம்மன் கோவில்களுக்கு நடுவிலும், நடுகற்களின் அருகிலும் காணலாம்.

கோயில் வளாகம்



மதுரை வீரன் கோயில் குதிரை



பொட்டுசாமி



பொட்டுசாமியை 1,3,5,7,9 என வரிசையாகக் கூர்மையான கற்களை நட்டு வழிபடுவர் . சில இடங்களில் அதற்கு வெள்ளையடித்தும் , சிவப்பு கருப்பு இட்டும் வழிபடுகின்றனர் . பெரும்பாலும் தனிமேடை அமைத்து அதன்மீது வைக்கப்பட்டுள்ளது.”

இங்கே ஐந்து கற்களின் வழிபாட்டு வடிவமும் பொட்டுசாமியாகலாம். கோயில் வளாகத்தில் விளக்குக் கம்பத்துடனும், சிங்க ஊர்திச் சிற்பத்துடனும் கூடிய இன்னொரு அம்மன் கோயிலும், மேலும் மூன்று சன்னதிகள் கொண்ட ஒரு வரிசையும் இருந்தன. இந்த வளாகம் முழுதும் பல கோயில்கள் இருந்தும் தொன்மைச் சான்றுகளோ, கல்வெட்டுகளோ இல்லாதது எங்கள் பயண நோக்கத்துக்குப் பயன் விளைவிக்கவில்லை.

**மேற்கு சடையம்பாளையம் கண்டியம்மன் கோயில்:**

அடுத்து, ஓர் இருபது நிமிட நடையில், தென்னந்தோப்பு ஒன்றைச் சுற்றிச் சென்ற மண்பாதையில் நடந்தும் ஓர் ஆற்றுப்பள்ளத்தைக் கடந்தும் சென்ற பின்னர் நாங்கள் சென்றடைந்தது கண்டியம்மன் கோயில். இது, சடையம்பாளையம் மூவர் கண்டியம்மன் கோயில் என்றும், தலை கண்டியம்மன் கோயில் என்றும் இரு பெயர்கள் கொண்டிருக்கிறது. கோயில் வளாகத்தில் முதன்மையாக விளங்கும் கண்டியம்மன் கோயிலோடு, பஞ்சகன்னியர் சன்னதி, விநாயகர் சன்னதி என இரு சிறு கோயில்கள். கண்டியம்மன் கோயிலின் கருவறை விமானம் ஒரு தளக் கிரீவத்துடனும் சாலை அமைப்பைக் கொண்ட சிகரத்துடனும் காணப்படுகிறது.. நாயக்கர் காலக் கட்டுமானங்களுக்குப் பின்னர் 19-ஆம் நூற்றாண்டின் காலத்துக் கட்டுமானச் சாயல் எனலாம். இவ்வகைக் கோயில் விமானங்களில் தளச் சிற்பங்களின் (சுதைச்சிற்பங்கள்) வேலைப்பாடுகளிலும் உருவங்களிலும் அழகோ, திருத்தமோ காணப்படுவதில்லை. மனித உருவச் சிற்பங்களும் இயல்புக்கு ஒவ்வாத நீளங்களில் கைகளையும், கால்களையும் கொண்டு காட்சியழகு சிறிதுமின்றிக் காணப்படுகின்றன. சாலைச் சிகரத்தின் ஒரு புறம், மடியில் மனைவியை இருத்திய தோற்றத்தில் விநாயகர் சிற்பம் உள்ளது. மற்றொரு புறம் மூன்று முனிவர்களின் சிற்பங்கள். ஒரு முனிவர் புலித்தோலின் மீது அமர்ந்திருக்கிறார். புலித்தலை நன்கு புலப்படுகிறது. மற்றொரு புறம் மகரதோரணத்தின் நடுவிலும் ஒரு முனிவர் சிற்பமே காணப்படுகிறது. விமானச் சிற்பங்களில் முனிவர்களின் உருவங்களைத் தவிர கடவுளர்களின் உருவங்கள் இல்லாதது வியப்புக்குரியதாகும்.

மூவர் கண்டியம்மன் கோயில்



நடுகல் - சதிக்கல் சிற்பங்கள்



**நடுகல்லும் சதிக்கல்லும்:**

கோயில் வளாகத்தில் கண்டியம்மன் தவிர மேலும் இரண்டு சிறிய கருவறை விமானங்கள் உள்ளன. ஒன்று பஞ்சகன்னியர் சன்னதி என்று பூசையாளர் தண்டபாணி கூறினார். ஆனால், கருவறையில் ஐந்து கன்னியர் சிற்பங்கள் இல்லை. மூன்று ஆண் உருவச் சிற்பங்களும், இரண்டு பெண்ணுருவச் சிற்பங்களும் காணப்படுகின்றன. வீரர்கள் இருவரின் நினைவாக எழுப்பப்பட்ட நடுகல்லும், வீரர்களின் மனைவிகளின் சதிக்கல்லும் சேர்ந்த ஒரு தொகுதியாக இச் சிற்பங்களைக் கருதலாம். நாயக்கர்காலச் சிற்பங்கள். வீரர்களில் ஒருவர் தன் வலப்பக்கத்தில் வாளைத் தரையில் பதித்துவைத்தவாறு கைகூப்பி வணங்கும் நிலையில் உள்ளார். இன்னொரு வீரர் தம் இடக்கையைத் தொடையில் பதித்தவாறும் வலக்கையில் ஒரு மதுக்குடுவையைப் பிடித்த நிலையிலும் காணப்படுகிறார்கள். மூன்றாவதாக ஒரு வீரர் தண்டம் போன்ற ஒன்றைத் தரையில் பதித்துவைத்தவாறு கைகூப்பி வணங்கும் நிலையில் உள்ளார். இவருடைய இடைக்கச்சில் குறுவாள் காணப்படுகிறது. ஆண்கள் இடப்புறமாகவும், பெண்கள் வலப்புறமாகவும் கொண்டை முடிந்துள்ளனர். ஆண், பெண் அனைவரும் காதணிகளும், கழுத்தணிகளும் அணிந்திருக்கிறார்கள். அனைவரது ஆடை அமைப்பிலும் அழகுறக் காட்டப்பட்டுள்ளன. தொல்லியல் தடயங்களைத் தேடி வந்த எங்கள் பயணத்தில் முதன் முறையாக ஒரு நடுகல் தடயம் கிடைத்ததில் மகிழ்ச்சியும் நிறைவும் ஏற்பட்டன.

**கல்வெட்டு:**

பூசையாளர், எழுத்துகள் உள்ள இரண்டு துண்டுக் கற்களைக் காட்டினார். எழுத்துகள் இருக்கும் பக்கம் கீழ்ப்புறமாகத் தரையில் மறைந்தவாறு இருக்கவே அவற்றைப் புரட்டித் திருப்பினோம். முதலில் புதிய கல்வெட்டு கிடைத்த என் மகிழ்ச்சி மறைந்தது. காரணம், இந்தக் கல்வெட்டை நானும் நண்பர் தென்கொங்கு சதாசிவமும் 03-10-2013 அன்று ஒரு மாலை நேரத்தில் வந்து பார்த்துச்

சென்றுள்ளோம். எழுத்துகள் மிகவும் சிதைந்து போனமையால் படிக்க இயலவில்லை. இருப்பினும் பழைய ஒளிப்படங்கள், இப்போது எடுத்த ஒளிப்படங்கள் ஆகியவற்றை ஒப்பிட்டுப் பார்த்ததில் சில எழுத்துகள் அடங்கிய பாடத்தைக் கீழே தந்துள்ளேன்.

**கல்வெட்டுப்பாடம்**

முதல் துண்டுக்கல்:



1 ண்ண
2 சோழன்
3 .........
4 ஊரு (ட)
5 டையரா
6 கிய செ
7 நாயனா
8 ர் (ற்) அ
9 ண்ண
10 யனா
11 கு (ள)
12 மகன்
13 த்தொ
14 ம்

இரண்டாவது துண்டுக்கல்:



1 ........
2 ..........
3 நானா ட
4 ............ந
5 .............
6 ன
7 ற ட ய

மேற்படி கல்வெட்டுப்பாடத்திலிருந்து தெளிவான செய்திகள் எவையும் புலப்படவில்லை. எனினும், “உடைய”, “நாயனார்”, ”ஊரு” “மகன்” போன்ற சில சொற்களைக்கொண்டு யூகமாகப் பொருள் கொண்டால், சோழன் என்னும் சிறப்புப்

பெயர் கொண்ட ஒருவன் கோயிலுக்குக் கொடை அளித்துள்ளான் எனலாம். “நாயனார்” என்பது சிவன் கோயில் இறைவனைக் குறிக்கும் சொல். ஆனால் இங்கே அம்மன் கோயிலில் கல்வெட்டு உள்ளது. வேறெங்காவது இடத்திலிருந்து இக்கற்கள் பெயர்த்துக் கொண்டுவரப்பட்டனவா என்னும் ஐயமும் எழுகிறது.

கண்டியம்மன் கோயிலைப் பார்த்துவிட்டுத் திரும்பும் வழியில், ஆற்றுப்பள்ளத்தில் சிறு சிறு பானை ஓட்டுச் சில்லுகள் கிடைத்தன. ஆங்காங்கே, இரும்புக்கசடுகளின் (Iron slag) துண்டுகள் கிடைத்தன. பானையோட்டுச் சில்லுகள், வரலாற்றுக்கு முந்தைய பெருங்கற்காலத்துப் பொருள்களாக அறியப்படுவதால் இப்பகுதியில் பழங்கால வாழ்விடமோ, ஈமக்காடோ இருந்திருக்கவேண்டும் எனக் கருதலாம். இரும்புக் கசடுகள் கிடைப்பதால் இப்பகுதியில், இரும்பை உருக்கி ஆயுதங்கள் செய்யும் தொழில் நடைபெற்றிருக்கலாம் எனவும் கருதலாம். வழியில் யாரோ பிடுங்கியெறிந்த ஒரு காந்தள் செடியைக் காண நேர்ந்தது. சற்றே வாடியிருந்தாலும் அதன் அழகு மங்காத அழகு.

**அனுமந்தப் பெருமாள் கோயில்:**

அனுமந்தப் பெருமாள் கோயில் - உப்பாற்றங்கரை



பகல் இரண்டு மணிக்கு மேல் பகலுணவை முடித்த பின், தேநீர்க்கடையில் சந்தித்த சிலரிடம் பேசியதில் பெரியபட்டியில் பழங்கோயில் உள்ளதெனச் செய்தி கிடைத்தது. பெரியபட்டி சென்றோம். அங்கு ஒருவர் சுட்டிய பெருமாள் கோயிலுக்குச் சென்றோம். உப்பாற்றின் கரையோரம் கோயில் அமைந்திருந்தது. அநுமந்தப் பெருமாள் கோயில் என்பது பெயர். ஆனால், கோயிலின் பெயர் சொல்ல ஒரு பெயர்ப்பலகை கூட இல்லை. கோயிலுக்குள் குறிப்பிடும்படியாகக் கல்வெட்டுகள் இல்லை. ஒரே ஒரு எழுத்துப் பொறிப்பு எங்களுக்குக் கிட்டியது. கோயிலின் தெற்குச் சுற்றில் மேடை மீது வீற்றிருக்கும் ஒரு நாகச் சிற்பம். சற்றே பெரிதாக இருந்தது. நாகத்தின் உடல் வளைவுகள்

மூன்றுடன் தலைப்பகுதியில், காளிங்க நர்த்தனத்தை நினைவூட்டும் வகையில் கண்ணனின் ஆடுகின்ற தோற்றத்துடன் காணப்பட்டது. சதுரப் பீடத்தின் மையப்பகுதியில் ஒரு மனித உருவமும் அதனைச் சுற்றிலும் உள்ள இடைவெளியில் சில எழுத்துகளும் காணப்பட்டன. "அனுமந்" என்னும் இறுதிச் சொல் படிக்க இயன்றது. இதன் தொடர்ச்சியாக, நாகத்தின் பக்கப்பகுதியில், பீடத்தில் சில எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தன. அவற்றைப் படிக்க இயன்றது. முழுப்பாடமும் கீழ் வருமாறு:

நாகச் சிற்பம் - கல்வெட்டுடன்



**கல்வெட்டு**



**கல்வெட்டுப் பாடம்:**

1 அனுமந்
2 த ராம
3 ர் பூசாரி
4 சென்ன
5 பெருமா
6 ள் தாசன்
7 மகன் ரங்
8 கா தாசன்

கல்வெட்டின் எழுத்துகள் மிகவும் பிற்காலத்து எழுத்துகள். 20-ஆம் நூற்றாண்டெழுத்துகள். சென்னப் பெருமாள் தாசன் என்பவனின் மகன் ரங்க தாசன் என்பவன் அமைத்துக் கொடுத்த நாக சிற்பம் என்பது கல்வெட்டுச் செய்தி. இக்கோயிலைப்பார்த்த பின்னர் ஊர் திரும்ப நினத்தவேளை, பெரியபட்டி ஊருக்குள்ளேயே பாழடைந்த ஒரு கோயில் உள்ளதெனத் தெரியவந்தது. அதுவும் ஒரு பெருமாள் கோயில்.

**பெரியபட்டிப் பெருமாள் கோயில்:**

பெரியதொரு வளாகம். கல்லும் மண்ணும் கலந்து கட்டப்பெற்ற சுற்றுச் சுவர். வளாகத்தின் மையத்தில் பாழடைந்த நிலையில், கருவறை, அர்த்தமண்டபம், முன்மண்டபம் ஆகிய மூன்று கட்டுமானங்களைக் கொண்ட வெளிப்புறத்தோற்றம். நுழைவு மண்டபத்தின் (முன்மண்டபம்) கதவு பூட்டியிருந்தது. பத்தடிக்கும் மேலான உயரமுள்ள ஆறு கல் தூண்கள் முன்மண்டபத்தின் முன்புறம் நின்றுள்ளன. வடக்குத் திருச்சுற்றில் இரண்டு நிலத்தடிக் கட்டுமானங்கள் காணப்பட்டன. கட்டுமானத்தின் மூல வடிவம் முற்றாய்க் கலைந்து வெறும் செங்கற்கூடாகக் காட்சியளித்தது. ஒன்று கிணறு போலத் தோற்றமளித்தது. இன்னொன்று நிலவறைச் சுரங்கம் போலத்தோற்றமளித்தது. (பின்னால் தெரிய வந்த செய்தி என்னவெனில் அவை இரண்டும் சிங்கமுகம் கொண்ட கோயிலின் தீர்த்தக் கிணற்றின் இரு பகுதிகள்). பூட்டப்பெற்ற கதவின் வழியே பார்த்தபோது உள்ளே ஒரு விளக்கொளி தெரிந்தது.

பெரியபட்டி அரங்கநாதப் பெருமாள் கோயில்



சிங்கமுகக் கிணறு



கோயிலைப்பற்றிய செய்திகளைத் தெரிந்துகொண்ட பிறகே ஊர் திரும்பவேண்டும் என்னும் ஆவலில் அருகே கேட்டறிந்து கோயிலின் பரம்பரைப் பூசையாளரைக் காணச் சென்றோம். பெரியபட்டிக்கருகில் உள்ள கள்ளப்பாளையத்தில் அவரது இருப்பிடம். ஐம்பத்தொன்பது அகவையுள்ள

பூசையாளர் ஸ்ரீநிவாச ஐயங்கார். இவரது முன்னோர்கள் ஆதித்திருவெள்ளறை சோழியர் வழி வந்தவர்கள். திருவெள்ளறையிலிருந்து இடம் பெயர்ந்து வந்தவர்கள். அவர் கூறிய செய்திகள் இங்கே. கோயிலின் பெயர் அரங்கநாதப் பெருமாள் கோயில். கோயிலுக்கு நிறைய மானிய நிலங்கள் இருந்துள்ளன. தற்போது மிகக் குறைந்த அளவில் நிலம் உள்ளது. அருகில் உள்ள ஆமந்தக்கடவு ஜமீன் நிலக்கொடை கொடுத்துப் புரந்துகொண்டிருந்தது. கோயிலின் அன்றாட வழிபாடுகள் எவையும் நடைபெறுவதில்லை. மேற்படி ஸ்ரீநிவாச ஐயங்காரின் தந்தையார் காலத்திலிருந்தே பூசைகளின்றியும் தக்கப் பேணுதலின்றியும் கோயில் அதன் அழகை இழந்து நிற்கிறது.

கோயிலின் உள்ளே கருவறை முதலிய இடங்கள் பெரும்பாலும் மரத்தால் ஆன கட்டுமானங்களைக் கொண்டவை. கோயிலின் உள்ளே யாரும் செல்வதில்லை. சிதிலமடைந்த மரக்கட்டுமானங்களால், எந்நேரத்திலும் அவை கீழே வீழும் அச்சச் சூழ்நிலை. இருப்பினும், பூசையாளர் சிறுவயது முதற்கொண்டே உள்ள பழக்கம்கொண்டு நாள்தோறும் காலையில் கோயிலின் உள்ளே விளக்கேற்றி வருகிறார். கோயில், புதுப்பிக்க முன்வரும் புரவலரை எதிர் நோக்கிக் கோயில் காத்திருக்கின்றது.

**ஆங்கிலேயர் காலத்து ஆவணம்:**

ஸ்ரீநிவாச ஐயங்கார் 1863-ஆம் ஆண்டு ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தைச் சேர்ந்த ஒரு நில ஆவணத் தாளைக் காட்டினார். இனாம் ஆணையம் (INAM COMMISSION) வழங்கிய நிலமானியம் பற்றியது. மேற்படி அரங்கநாதர் கோயிலுக்கு வழங்கப்பட்டது. TITLE DEED என்னும் தலைப்பில் வழங்கப்பட்ட இவ்வாவணத்தில் கோயில் என்பதற்குப் "பகோடா" (PAGODA) என்னும் சொல் ஆளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. 1919-ஆம் ஆண்டு பதிவு செய்யப்பட்ட சொத்துப்பத்திரம் ஒன்றையும் காட்டினார்.

இனாம் ஆணையத்தின் முத்திரை




அரசு முத்திரை



இனாம் ஆணையத்தின் ஆவணம் - 1863


TITLE DEED

1919-ஆம் ஆண்டுப் பத்திரம்



**முடிவுரை:**

பெருமாள் என்றாலே செல்வமுள்ள கடவுள் என்னும் சூழலில், புதுக் கோயில்களை எழுப்ப நினைக்கும் பெரும் செல்வர்கள் ஒன்றிணைந்து இது போன்ற கோயில்களுக்குப் புத்துயிர் வழங்கலாம்.

---

தொடர்பு: து.சுந்தரம்
கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
அலைபேசி : 9444939156.

## 8. கோவை கிழாரின் காலடித்தடத்தில்

– து.சுந்தரம்

**முன்னுரை:**

நண்பர் துரை.பாஸ்கரன் ஒரு வரலாற்று ஆர்வலர்; பசுமை பேணும் சூழலியலாளர். அவர் அண்மையில் பேசியில் அழைத்து, "தொல்லியல் தடயங்களைத் தேடும் பயணங்களில் கோவையின் புறவூர்ப் பகுதிகளில் சுற்றிக்கொண்டிருக்கிறீர்களே, கோவையின் நகரப் பகுதியிலேயே தொல்லியல் எச்சமான புலிகுத்திக்கல் என்றழைக்கப்படும் ஒரு நடுகல் சிற்பம் பார்க்கப்படாமல் உள்ளது தெரியுமா?" எனக் கேட்டபோது மிகுந்த வியப்பு ஏற்பட்டதோடல்லாமல் அதைப் பார்க்கவேண்டும் என்னும் ஆவலும் மிகுந்தது. அவரையும், இதழியலாளர் நண்பர் ஒருவரையும் உடன் அழைத்துக்கொண்டு கட்டுரை ஆசிரியர் நடுகல் சிற்பம் இருக்கும் இடத்துக்குச் சென்றார். நடுகல் சிற்பத்தை ஆய்வு செய்து மேலும் பல தரவுகளைத் துணையாகக் கொண்டதில் புலப்பட்ட செய்திகள் இக்கட்டுரையில் பதிவு செய்யப்படுகின்றன.

**கோவை நகரத்தின் மையப்பகுதியில் ஒரு புலிகுத்திக்கல்:**

கோவை. மக்கள் கூட்டமும், வண்டிகளின் நெரிசலும் கலந்த ஆரவாரம் நிறைந்த தொழில் நகரம். நகரத்தின் மையப்பகுதியைத் தொட்டு அமைந்திருக்கும் பகுதி உக்கடம். இங்கு அமைந்துள்ள ஒரு குளம் வாலாங்குளம். இக்குளத்தின் தென்கரையை ஒட்டியுள்ள புறவழிச்சாலையில் தென்கரைச் சரிவில்தான் நாங்கள் பார்க்க விரும்பிய நடுகல் சிற்பம் அமைந்துள்ளது. சாலையின் சரிவில் கீழிறங்கிச் சென்றதும் ஒரு சிறிய திடல் காணப்பட்டது. திடல் அல்லது வெளி என்னும் அப்பகுதி ஒரு பெரிய அரசமரத்தைச் சூழ்ந்திருந்தது. மரத்தடியில் அந்தப் புலிகுத்திக்கல் இருந்தது.

**புலிகுத்திக்கல்-நடுகல்:**

ஏறத்தாழ நாலரை அடி உயரத்தில் மூன்றடி அகலத்தில் முக்காலடிப் பருமன் கொண்ட தடித்த பலகைக்கல்லில் வடிக்கப்பட்டிருந்த புலிகுத்திக்கல் சிற்பம் ஒரு மேடையில் நிறுத்தப்பட்டிருந்தது. மேடையை அணுக இரண்டு படிக்கற்களும் இருந்தன. மேடையைச் சுற்றிலும் நான்கு பக்கங்களில் கற்றூண்களை நட்டு அவற்றை வலைக்கம்பி வேலியால் இணைத்து அரண் செய்திருந்தனர். ஒரு செவ்வக வடிவில் நின்றிருந்த அப்பலகைக்கல்லின் சுற்று விளிம்புகள் புடைப்பு நிலையில் அமைக்கப்பட்டுச் சிற்பத்தொகுதிக்குச்

சட்டமிட்டாற்போலச் செதுக்கப்பட்டிருந்தது. உச்சிப்பகுதியின் இரு முனைகள் சற்றே வளைவாக வடிக்கப்பட்டிருந்தது. பலகைக்கல்லின் உட்பரப்பு இரு அடுக்குகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. பிரிவுப்பகுதியிலும் சட்டம் போன்ற விளிம்பு உள்ளது. கீழடுக்கில், வீரன் ஒருவன் ஈட்டியால் புலியைக் குத்திக்கொண்டிருப்பதுபோல் ஒரு சிற்பம். வீரனின் முகம் முன்புறமாக நம்மை நோக்கியவாறு அமைந்துள்ளது. முகத்தில் கண்கள், மூக்கு போன்றவை தெளிவாகப் புலப்படவில்லை. மழுங்கியிருக்கிறது. அவனுடைய கால்களின் நிலை முன்புற நோக்கில் இல்லாமல் பக்கவாட்டில் புலியை எதிர்கொள்ளும் கோணத்தில் உள்ளது. வீரன் தன் தலை முடியை அவனது வலப்புறத்தில் கொண்டையாக முடிந்துள்ளான். செவிகளில் காதணிகள் உள்ளன. கால்களில் கழல் அணிந்திருப்பதாகக் காணப்படுகிறது. இடையில் அரையாடை அணிந்துள்ளான். இடைக்கச்சில் குறுவாள் காணப்படுகிறது. கீழாடை முழங்கால் வரை உள்ளது. எதிரில் புலியின் உருவம், அவனது உயரத்துக்குச் சமமாகத் தன் பின்னங்கால்களைத் தரையில் ஊன்றி நின்று, முன்னங்கால்களால் வீரனைத் தாக்கியவாறு காணப்படுகிறது. புலியின் வால் மேற்புறமாக உயர்த்திய நிலையில் உள்ளது. பெரும்பாலான புலிகுத்திக்கல் சிற்பங்களில் புலியின் வால் உயர்த்தியவாறு காட்டப்பெறுவதே வழக்கம். இந்த அமைப்பு, புலியின் சீற்றத்தைக் குறிக்கவந்தது. புலியின் உடல் நீளமாகக் காணப்படாததும், அதன் தலை சற்றுப் பெரிதாகக் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கது. தொடர்ந்த எண்ணெய்ப் பூச்சின் காரணமாகச் சிற்பங்களின் நுணுக்கமான வடிவமைப்பு புலப்படவில்லை.

புலிகுத்திக்கல் - கோயிலின் தோற்றம்



புலிகுத்திக்கல் - அண்மைத் தோற்றங்கள்





பெண்களின் சிற்பம்



நடுகல்லின் மேலடுக்கில், இரண்டு பெண்கள் கைகளைக் கூப்பி வணங்கிய நிலையில் நின்றுகொண்டிருக்கும் சிற்பம் காணப்படுகிறது. இருவரும் தங்கள் தலை முடியை இடப்புறமாக முடிந்திருக்கின்றனர். காதில், கழுத்தில், கைகளில், காலில் அவர்கள் அணிந்திருக்கும் அணிகள் தெளிவாகப் புலப்படவில்லை. அவர்களது ஆடை அமைப்பும் புலப்படவில்லை. காரணம் முன்னரே குறித்தவாறு, சிற்பங்களின் மேல் தொடர்ந்து பூசிய எண்ணெய்ப்பூச்சே. வணங்கிய நிலையில் உள்ள இரண்டு பெண்களின் சிற்பம், வீரன் மேலுலகம் சென்றதைக் குறிக்கும். இவ்வகை அடுக்குநிலை நடுகல் சிற்ப அமைப்பு, நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கருநாடகத்திலிருந்து பின்பற்றிய பாணியாகும். தமிழகத்தில், தமிழகப்பாணியில் நிறுவப்பட்ட நடுகற்களில் இந்த அடுக்குகள் இரா.

**நாட்டார் வழிபாடும் நடுகல்லும்:**

நடுகல் வழிபாடு தொன்றுதொட்டு இருந்து வருகின்றது. போரில், பூசலில் இறந்து படும் வீரனுக்கு வீரக்கல் என்னும் நடுகல் எடுக்கப்படுவது வழக்கம். சங்ககாலப் பாடல்களில் நடுகல் பற்றிய செய்திகள் நிறையக் காணப்படுகின்றன. கால்நடைகளே செல்வமாகக் கருதப்பட்ட காலங்களில், கால்நடைகளைக் காத்தல் பெரும்பணியாயிருந்தது. கால்நடைகளைக் கவர்வதிலும், அவற்றைக் காத்தலிலும் வீரர்கள் போரிடுதல் இயல்பான சமூக நிகழ்வாயிருந்தது. அது போலவே, கால்நடைகளைக் காட்டு விலங்குகளினின்றும் காப்பதற்காகக் காவல் வீரர்கள் விலங்குகளோடு சண்டையிட்டு விலங்குளைக் கொல்லுதலும், சண்டையின்போது வீரர்கள் இறந்துபடுதலும் மிகுதியாக நிகழ்ந்தன. இவ்வகை வீரர்களுக்கும் நடுகல் எடுப்பித்து நாட்டார் வழிபடும் மரபு நாயக்கர் காலம் வரை தொடர்ந்தது.

**மதுரை வீரன் சாமி:**

உக்கடம் நடுகல்லும், இவ்வகையில் வழிபட்டுவந்துள்ளதாகக் கருதலாம். ஒரு வகையில், வழிபாடு காரணமாகவே இந்த நடுகல் இதுவரை அழிவுக்குட்படாமல் ஒரு தொல்லியல் எச்சமாகப் பாதுகாக்கப்பட்டுவந்துள்ளது. நடுகல்லின் அமைவிடத்தில் ஒரு குடியிருப்புப் பகுதி உள்ளது. இங்கிருந்த ஒரு இசுலாமியப் பெண்மணி ஒருவர், இந்த நடுகல் சிற்பம் மதுரை வீரன் சாமி என்னும் பெயரால் வழிபடப்பட்டு வருவதாகவும், அருகிலேயே இருப்பதால் நாள்தோறும் அப்பெண்மணி அவ்விடத்தைப் பெருக்கித் தூய்மை செய்து, ஒரு கற்பூரத்தையும் ஏற்றி வைப்பதாகவும் கூறியது அவரது நல்லெண்ணத்தையும், மத நல்லிணக்கத்தையும் நமக்கு உணர்த்தியது.

**கோவையும் கோவன்புத்தூரும்:**

கொங்குநாட்டின் கோவைப்பகுதி பண்டைய நாள்களில், மலை சார்ந்த குறிஞ்சி நிலத்தை அரணாகக் கொண்ட காடு சூழ்ந்த முல்லை நிலமாக இருந்த காரணத்தால், கால்நடை வளர்ப்புச் சமுதாயமே மேலோங்கியிருந்தது. வளமான வேளாண்மை இல்லை. இடைக்காலக் கொங்குச் சோழரின் ஆட்சியின் கீழ் இப்பகுதி வந்த பின்னரே வேளாண்மை செழிப்புற்றது. கொங்குச் சோழர் ஆட்சிக்கு முன்புவரை கோவைப்பகுதி முன்னிலையில் ஒரு நகரப்பகுதியாக் இருந்திருக்கவில்லை. கோவைக்கருகில் அமைந்துள்ள பேரூரே பெரியதொரு நகரமாக இருந்தது. கொங்குநாட்டின் இருபத்து நாலு நாட்டுப்பிரிவுகளில் பேரூர் நாடும் ஒன்றாக இருந்தது. கோவைப்பகுதி, காடுகள் சூழ்ந்த பகுதியாகவும், கால்நடை வளர்ப்புப் பகுதியாகவும் இருந்துள்ளது. பின்னரே, கொங்குச்சோழர் காலக்கல்வெட்டுகளின்படி, கி.பி. 10-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் கோவன்புத்தூர் என்று புதியதாக ஓர் ஊர் அமைக்கப்பட்டதாகவும், அது பேரூர் நாட்டில் இருந்ததாகவும் செய்தி காணப்படுகிறது. காடழித்து ஊராக்கப்பட்ட கோவன்புத்தூர், நாயக்கர் காலத்திலும், காடுகள், கால்நடை வளர்ப்பு, கால்நடைகளை விலங்குகளிடமிருந்து காத்தல் ஆகிய கூறுகளைக் கொண்டிருந்தது. எனவே, மேற்படி உக்கடம் புலிகுத்திக்கல் நாயக்கர் காலத்தில் எழுப்பப்பட்ட நடுகல்லாகும்.

**உக்கடம் புலிகுத்திக்கல்லின் காலம்:**

இந்த நடுகல்லின் காலத்தை, இதைப் பார்வையிட்ட வரலாற்றுப்பேராசிரியர் திரு. இளங்கோவன் அவர்கள், இந்நடுகல் நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது எனத்தெரிவித்துள்ளார். எனவே இந்நடுகல், கி.பி. 16-17 -ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

**கோவை கிழாரும் உக்கடம் புலிகுத்திக்கல்லும்:**

மேற்படி உக்கடம் புலிகுத்திக்கல் பற்றிக் கோவை கிழார் என்னும் பெயரில் அறியப்படுகிற கோவையின் வரலாற்றினை ஆய்வு செய்த சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் தம்முடைய "இதுவோ எங்கள் கோவை" நூலில் குறிப்பிட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்க செய்தி. அவர் கூற்றிலேயே அக்குறிப்பைக் காணலாம்:

"ஊராரின் பாதுகாப்பிற்காகப் புலியுடன் போர்புரிந்த வாலிபனுடைய உடலைக் கிராமப் பொது இடத்தில் புதைத்துவிட்டு அவனைப்போல் ஒரு கல்லுரு அமைத்து ஊர்ப்பொது இடமான அக்குளக்கரையின் தென்சரிவில் நட்டுப் பூசை செய்தார்கள். இப்போது அவ்வீரனின் கல் அதே இடத்தில் நிற்கிறது. இப்போதும் சில தடவைகளில் அதற்குப் பூசை நடப்பதுண்டு. ஒரு வாலிபன் புலியுடன்

போர்புரிந்ததும் அவன் அடக்கமானதும் அடங்கிய சமாதிக்கருகில் இரண்டு பெண்கள் கும்பிடுவதும் அக்கல் சிலையில் செதுக்கப்பட்டிருக்கிறது."

களப்பணியாளர்கள்



**முடிவுரை:**

பல ஆண்டுகளுக்கு முன்பே, கோவை கிழார் உக்கடம் நடுகல்லை அறிந்துவைத்திருக்கிறார். ஆனால் அது, வரலாறு தெரிந்துகொள்ள விரும்புபவர்களுக்கு இதுவரை புலப்படாமல் இருந்துள்ளது. அதன் அமைப்பு, இருப்பிடம் ஆகியவை அவர் பார்த்தவாறே இருப்பதும் அவருடைய காலடித் தடத்திலேயே நாங்கள் கோவை நகர மையப்பகுதியில் இந்தப் புலிகுத்திக்கல்லைக் கண்டறிந்ததும் ஒரு வியப்பான நிகழ்வே.

---

தொடர்பு: து.சுந்தரம் <doraisundaram18@gmail.com>
கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
அலைபேசி : 9444939156.

## 9. தூங்கானை மாடம்

**– நூ த லோ சு., நரசிங்கபுரத்தான்**

**— நூ த லோ சு**

**முன்னுரை:**

தமிழகத்தில் உள்ள கோயில்களின் தோற்ற அமைப்பில், சில கோயில்கள் **தூங்கானை விமானம் / கஜப்பிரஷ்டம்** என வழங்கப்படும் இவை யானையின் பின்பகுதி போன்ற அமைப்பு உடைய கோயில்கள். தூங்கானை மாடம் அமைப்பு பிற்காலத்ததாகத்தான் உள்ளன.

இவ்வகை பெரும்பாலும் வட தமிழ் நாட்டில் உள்ளன. தொண்டை நாட்டிற்கே உரியது எனக்கூறும் அளவிற்கு மிக அதிகமாகத் தமிழகத்தின் வடபகுதியில் காணப்படுகின்றது இந்தத் தூங்கானைமாடம் அமைப்பு. ஏறக்குறைய 400 ஆண்டுகளுக்கு முற்பட்டாத பணிகளாகத் தெரிகின்றது. அதாவது ஏறக்குறைய 400 ஆண்டுகளுக்கு முன் அமையவில்லை என்பேன். கிட்டத்தட்ட 100 கோயில்கள் இவ்வகையில் காணலாம். சென்னையிலேயே 7 க்கு மேல் உள்ளன.

இதனில் மிகப்பழமையானது திருத்தணி வீரட்டேசுவரர் கோயில். மற்றும் சிறிய அமைப்பு வேறுபாட்டுடன் காண்பது காஞ்சியில் உள்ள சுரஅரேசுவரர் கோயில். இக்கோயிலும் இவ்வகை அமைப்பைக் கொண்டுள்ளது. அதாவது காவித்துளை போல் (கிட்டத்தட்ட STATE BANK அடையாளம்).

தூங்கானை மாடம் எனில் இங்கு படுத்து தூங்குகின்ற யானை எனும் பொருள் கிடையாது.

தூங்கு = உயரத்தில் உள்ள (தூக்கு >> தூக்கணாங்குருவி>> தொங்கல்)

குலோத்துங்கன் = குலத்தை உயர்ச்சி செய்தவன்

அநேக(து) தங்காபதம் = இமயமலைத்தொடரில் உள்ள தேவாரப் பாடல்பெற்றத்தலம்

கயிலாயமலையே வணங்கப்படுவதுபோல் அந்தத் தொடரில் உள்ள பலவேறு (அநேகம்) மலையுச்சிகளும் கடவுளாகக் கொள்ளப்படும் நிலை (ஏகம் ஒருமை, அநேகம் பன்மை). காஞ்சியில் கயிலாய நாதர் கோயில் அருகேதான் கச்சி அனேகதங்காபதம் எனும் தேவாரப் பாடல்பெற்றத்தலம் உள்ளது.

**கோயில் கட்டிட அமைப்பு பற்றி சில கருத்துக்கள்:**

வானத்திலிருந்து பார்த்தால் சிவலிங்க வடிவில் தோற்றம் கொள்ளும் வகையில் இக்கோயில்களின் கருவறைக் கட்டப்பட்டுள்ளது. இவை யாவும் மேலிருந்து பார்க்கும் பொது சிவலிங்கவடிவில் தோன்றும் சிவன் கோயில்களாகும் (இதற்கு இணையாக மயிலையில் உள்ள கிருத்துவ தேவாலயத்தினை கழுகுப் பார்வையில் மேலிருந்து பார்த்தால் சிலுவையாகத் தெரியும் என்பதையும் நினைவில் கொள்ளலாம்).

கேரள கோயில்களிலும் கழுகுப்பார்வை சிவலிங்க கருவறைகள் அமைப்பில் பல கோயில்கள் உள்ளன. அதான்று கருநாடகத்தில் உள்ள சாரதா பீட கோயிலமைப்பும் இவ்வைகத்ததே. தூங்கானை மாடக்கோயில்கள் அமைப்பில் இன்னும் நிறையக் கோயில்கள் உள்ளன.

**முன்குடுமிஈசுவரர், பொன்விளைந்த களத்தூர்**

இக்கோயில் தொல்லியல் துறை மேற்பார்வையில் உள்ளது .



**வீரட்டேசுவரர் கோயில்+ திருத்தணி**

மிகப்பழைய கடைநிலை பல்லவர்கள் காலத்துப்பணி தொல்லியல் துறை மேற்பார்வையில் உள்ளது, விமானமே கருங்கல்லால் ஆனது.



**பொழிச்சலூர் கோயில்**

சென்னை பல்லாவாராம் மேற்கு, சென்னை விமான தளம் தென் கோடிக்கும் தெற்கு.



**திருக்கள்ளில் கோயில்**

தேவாரப் பாடல்பெற்றத்தலம், தமிழ்நாட்டில் வட கோடி பெரியபாளையம் அருகு (மேலும் வடக்கு ஆந்திரத்தில் காளத்திதான் தொண்டை நாடு)



---

**தூங்கானை மாடக் கோயில்களின் இருப்பிடங்கள்**

**— நரசிங்கபுரத்தான்.**

மாமல்லபுரத்தில் பஞ்ச பாண்டவர் ரதம் என தற்பொழுது வழங்கப் பெரும் இடத்தில் உள்ள யானை சிற்பம் அனைவரும் அறிந்ததே. இவற்றில் நகுலன் / சகாதேவன் ரதம் தூங்கானை விமானம் கட்டுமானத்தை உடையது.



பல்லவர் கால முதல் கட்டுமான கோயில் எனப்படும் கூரம் சிவன் கோயில் கூட கஜப்பிரஷ்டம் தான்.

தமிழகத்தில் உள்ள கோயில்களின் வரலாறு தேடும் முயற்சியில் தூங்கானை விமானம் / கஜப்பிரஷ்டம் என வழங்கப்படும் யானையின் பின்பகுதி போன்ற அமைப்பு உடைய கோயில்களை பட்டியலிட்டு google map ல் குறித்துள்ளேன்.







**https://www.google.com/maps/d/u/0/viewer?mid=1yYKNNBSGo1a0sB7dCfzC5w4DYegjnnPl&ll=13.387569980678185%2C83.19741252292829&z=6**

---

தொடர்பு:

நூ த லோ சு (மயிலை நூ.த.லோக சுந்தரம்) <selvindls61@gmail.com>

நரசிங்கபுரத்தான் <jaisureshkumar@gmail.com>

## 10. நேமி என்ற சொல்லின் பொருள் விளக்கம்
**– முனைவர் நா. கணேசன்**

"நிலந்தவ உருட்டிய நேமி யோரும் சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே" என்று புறநானூற்றுப் பாடல் ஒன்று வேந்தரின் ஆட்சிச் சக்கரத்தையும் ;

"பூண்வனைந் தன்ன பொலஞ்சூட்டு நேமி" என்று குறுந்தொகைப் பாடலொன்று பொன்னால் ஆகிய விளிம்பை உடையத் தேரின் சக்கரத்தினையும்;

"பொன் அணி நேமி வலங்கொண்டு ஏந்தி" என்று பரிபாடல் பாடலொன்று திருமால் தனது வலது கையில் ஏந்திய சக்கரத்தையும் குறிக்கும்.

பொதுவாக, நேமி என்பது வட்டவடிவம் கொண்டவற்றைக் குறிப்பதுடன் பூமி, கடல், கணையாழி, சக்கரவாகம் எனும் பறவை, சக்கராயுதனாகிய திருமால், தீர்த்தங்கரர் இருபத்துநால்வருள் ஒருவரான நேமிநாதரையும் குறிக்கவும் பயன் கொள்ளப்படுவதுண்டு.

நேமி என்ற சொல்லின் தோற்றம் அதன் பெயர்ச்சொல், வினைச்சொல் பொருள் குறித்து முனைவர் நா. கணேசன் கொடுக்கும் விளக்கம்தனை இனி காண்போம்.

---

### நேமி

~ முனைவர் நா. கணேசன் ~

முறம் அல்லது சுளகைக் கொண்டு உமி, பதர், கல் போன்றனவற்றைப் பிரிப்பதில் பல வினைகள் உள்ளன. **கொழித்தல், புடைத்தல், தெள்ளுதல், நேம்புதல்** போன்ற செயல்பாடுகள் அடங்கும் (https://ta.wikipedia.org/wiki/முறம்).

புடைத்தல் = அடித்தல். புடைத்தல் என்றால் தானிய மணிகளைத் தூக்கி மேலே வீசி, கீழே முறத் தட்டில் வீழுமாறு செய்தல். ஒருபுடை புடைத்தான் என்பதுபோன்ற உலகியல் வழக்கங்களை நோக்குக. புடைத்தல் = அடித்தல்.

தெள்ளுதல் = தெறித்தல். பிரிந்த பதடு, சிறுகல், குப்பை போன்றவற்றை வெளியே தெறித்து அகற்றுதல். தெள்ளுதல் = தெறித்தல்.

பொன்னினும் வெள்ளி யானும் பளிங்கினும் புலவன் செய்த
நன்னிறக் கலத்திற் கூர்வா ணட்டென வாக்கிச் சேடி
மின்னனா ரளித்த தேறற் சிறுதுளி விரலிற் றெள்ளித்
துன்னிவீழ் களிவண் டோச்சித் தொண்டையங் கனிவாய் வைப்பார்.

http://www.tamilvu.org/slet/l41d0/l41d0sn3.jsp?x=82

புலவன் செய்த நல் நிறக் கலத்தில் - கம்மப் புலவனாற் செய்யப்பட்ட நல்ல ஒளியையுடைய கலங்களில், கூர்வாள் நட்டென வாக்கி அளித்த - கூரிய வாளை நட்டாற்போல வார்த்துக் கொடுத்த, தேறல் - மதுவில், சிறு துளி விரலில் தெள்ளி - சிறிய துளியை விரலாற்றொட்டுத் தெறித்து, துன்னி வீழ் களிவண்டு ஓச்சி - நெருங்கி வீழும் மதுமயக்கத்தையுடைய வண்டுகளை ஓட்டி, கள்ளுண்பார் அதனை விரலாற்றொட்டுப் பூச்சி, வண்டுகளை தெறித்து நீக்கிப் பின் குடித்தலுக்கான அழகான வர்ணனையைப் பரஞ்சோதி முனிவர் மரபுச்செய்யுளில் பதிந்துள்ளார்.

**தெள்ளு-** (1) To sift, as grain; கொழித்தல். Colloq. (2). [M. te!!uka.] To sift gently in a winnowing fan; புடைத்தல். (3) To waft, as the sea; to cast upon the shore; அலைகொழித்தல். கரிமருப்புத் தெள்ளி நறவந் திசைதிசை பாயும் (திருக்கோ. 128).

**நேம்புதல்**: தமிழில் நேம்பு- என்னும் வினைச்சொல் தெலுங்கில் நேமு- எனப்படுகிறது. Ref. MTL. சேந்துகிணற்றில் நேமி மீது கயிற்றை இட்டு குடமோ,வாளியே கீழே செலுத்தி, நீரை மொண்டு மேலே நீர் சேந்துகின்றனர். நீர் இறைக்கும்போது, உருள்நேமி தன் அச்சில் வலம்புரியாகவும், இடம்புரியாகவும் சுழலும். இச் செயல்தான் த்ராவிட மொழிகளில் நேம்புதல்/நேமுதல் என்ற வினைச்சொல் ஆகும் (https://www.youtube.com/watch?v=_afbxTenEzc).



படம் உதவி- நன்றி: பழமைபேசி

முறத்தில் பெண்கள் தானியம் நேம்பும்போதும், மேல் இருந்து பார்த்தால், சேந்துகிணத்து நேமி போலவே, வலம்புரியாகவும் (clockwise), இடம்புரியாகவும் (anti-clockwise) சற்றெ மாறிமாறிச் சுழற்றுவது காணலாம்.

குதிரை பூட்டிய தேர்களின் சக்கரத்தில் நேமி (felloe or felly)




Dimensions of the Buffalo Bayou Wagon Wheel




Max Sparreboom, Chariots in the Veda, 1985, E. J. Brill, Leiden

pg. 130

"The spoked chariot-wheel consisted of a felloe (nemi) with a rim (pavi), with spokes (ara) fitted in holes of the nave (naabhi) and it was secured in its place by a linch-pin (aaNi)."

தியானத்தில் ஆழ்ந்த தீர்த்தங்கரர்களுக்குக் கல்வெட்டுகளில் முதலில் ஆழ்வார் என்று பெயர். ஆழ்-தல் "to sink" > ஆணி (=lynch pin) என்னும் தமிழ்ச் சொல் வேதத்தில் இருக்கிறது. ஆர், அர- = தண்டு. தாமரைத்தண்டு = ஆர், அர-. தாமரைத்தண்டின் மேல் பூ விரிகிறது. அர-விரிந்த > அரவிந்த. எனவே, இவுளிச் சாரட்டுகளில் ஆணி போலவே, அர 'spoke' தொல்தமிழ் என்க. நேம்பு-/நேமு- வினைச்சொல் (உ-ம்: ) தானியத்தை நேம்புவதும், அதே போல கிணற்றில் நேமியின் செயல்பாடும் பார்த்தோம். எனவே தான், நேமி = framework for well-rope (pulley).

குவி/குமி, சவரி/சமரி(=கவரி/கமரி, சாமரை), கோமணம்/கோவணம், உமணர்/உவளம், கமலை/கவலை (ஏற்றத்தின் சால்) ... போல நேம்பு-/நேமு- > நேவு- > நாவுதல் (அ) நாம்புதல் என்றும் வழங்குகிறது.

> "உமியும் தவிடும் நீக்கிய பின்னர் சுளகின் அடிப்பாகத்தில் தங்கியிருக்கும் அரிசியை இடதுபக்கமுள்ள இன்னொரு சாக்கில் தட்டுவார்கள். பட் பட்-என்று சுளகைத் தட்டி அனைத்து அரிசியையும் ஒன்று சேர்த்து மிக லாவகமாக அவர்கள் சாக்கில் கொட்டும் அழகே தனி. இப்படியே அடுத்தடுத்து குற்றப்பட்ட அரிசி-உமிக் கலவையை எடுத்து, உமி தவிடு நீக்கி அரிசியை எல்லாம் தனியே சேர்த்துவைப்பார்கள்.
>
> இதற்குள் நெல்குத்திய அக்காமார் தம் வேலையை முடித்து, முந்தானையால் முகத்தை அழுத்தித் துடைத்துக்கொண்டே அத்தை பக்கத்தில் வந்து அமர்வார்கள். அவர்களுக்குச் செம்பு நிறைய தண்ணீர் கொண்டுவந்துகொடுப்பார் அம்மா. இருவரும் மடக் மடக்-என்று குடித்துச் செம்பைக் காலிசெய்வர். “அடுத்து என்ன செய்ய” என்றும் கேட்பர். “நான் பொடச்சுப்போட்ட அரிசிய நல்லா நேம்பி வையி. ஒத்தக் கல்லு இருக்கக்கூடாது" என்று ஒரு அக்காவிடம் அத்தை கூறுவார். அடுத்தவரிடம், “நீ அவ நேம்பிக்கொடுக்கறதக் கொழிச்சுப்போடு” என்பார். அப்பப்ப நாவிக்க. எல்லாக் குருணையையும் அந்தச் சட்டியில கொட்டிவையி. பொடிக்குருணை கோழிக்கு ஆகும். என்பார். நேம்புதல், கொழித்தல், நாவுதல் எல்லாம் சுளகைக் கையாளுவதில் வெவ்வேறு வழிகள். அரிசியினின்றும் கல்லைப் பிரித்தெடுக்க, குருணை எனப்படும் குறு நொய்யைத் தனியே பிரிக்க என்று பல்வேறு முறைகள். இறுதியில் மணிமணியாக முழு அரிசி ஒரு பக்கம், குருணை ஒருபக்கம், கல்லும் கழிவும் ஒருபக்கம், தவிடு ஒரு பக்கம், உமி ஒரு பக்கம் என அந்தப் பகுதியே நிறைந்துவிடும்.” (பேரா. ப. பாண்டியராஜா, 3/31/2015).

நேம்- என்ற தாதுவில் இருந்து நேமு-/நேம்பு- என்றும், நேமி என்ற பெயர்ச்சொல்லும் தோன்றியுள்ளன.

எழுத்தோசைகளை உருவாக்குவதற்காக நாக்கு அலைகொழித்துக் கொண்டிருக்கும் வாயுறுப்பு. ஆதாவது, நேவிக்கொண்டே/நேமிக்கொண்டே > நாவிக்கொண்டே இருக்கும் நாவு.

நவ்வி என்றால் மான், முக்கியமாகப் பெண் மான். ஏனெனில், தன் இனநிரைக்கு ஆபத்து வருகிறதோ என தலையைத் தூக்கி நேம்பிக்கொண்டே/நாவிக்கொண்டே அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு புல்மேயும் பண்பினதால், நவ்வி என்பது பண்பாகுபெயர். (கோவை:கொவ்வைக்காய், ... போல, நாவிக்கொண்டிருப்பது நவ்வி. எப்பொழுதும் வெளியே தெரியுமாறு நாவு(நாக்கு) இருப்பதால் நாய் (நாஇ - தொல்காப்பியம்) என்கிறோம். நாயாட்டு என்றால் வேட்டையாடல்.

ஆகவே, நேமி என்பது வட்டவடிவில் சுழலும் பண்பை, சுழலும் தன்மை கொண்டவற்றைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

---

தொடர்பு: முனைவர் நா. கணேசன் <naa.ganesan@gmail.com>

## 11. இறையில்

– நூ த லோ சு

உயரத்தில் யானைகள் நெருங்கமுடியாமல் கட்டப்பட்ட கோட்டைகள் காட்டினர் அக்காலத்து அரசர்கள். பகைவர் நாட்டினைப் பிடித்தவன் அவர்களில் அரண் அமைப்பினை இடித்துத் தள்ளி விடுவான். அத்துடன் அப்போதெல்லாம் கட்டிட அமைப்பும் கூட கிடையாது. காட்டு விலங்குகளுக்காக இயற்கையாக வேலிகளை வளர்த்து அதனுள் இருப்பர். மாற்றான் (ஆநிறை கொள்ளுதல் மீட்டல்) போர்த்தொடுத்தால் அவனது அரணை அழித்து எள்ளும் கொள்ளும் விதைத்து விடுவானாம். பிற்காலத்துக் கட்டிடங்களை யானைகளைக் கொண்டு இடித்துத் தள்ளாமல் இருக்க, யானைகள் ஏறமுடியாத சிறு சிறு குன்றுகள் மீது மிக உயர்ந்த மதில்களும் அதனை நெருங்க முடியாத அமைப்புகளும் தோன்றின.

போரிற்குப் பயன்படும் யானை ஏறமுடியாதபடி பாதுகாப்பிற்காக கட்டப்பட்ட இறையில்; இறை இல் =மன்னன் இருப்பிடம்
ஏயில் (எயில்) =கோட்டை (ஏ எனும் சொல் உயரம் தொடர்புடைய சொல் (ஏணி, ஏனாதி, ஏகம்பம் , ஏனுகு (யானை தெலுகு)

கோச் செங்கணான் எனும் சோழ மன்னன் காவிரிக்கரையில் யானை எளிதில் ஏற்கமுடியாத கோட்டைகளை = அதாவது கோயில்களை (கோ = இறைவன் மற்றும் தெய்வம்) கட்டிக் கொண்டதாக வரலாறு உண்டு. திருப்பனந்தாள் போன்று பனை மரத்தினடியிலோ ஆரூர் அறநெறி தண்டலை நீள் நெறி போன்று நாட்டின் பெருவழிகளில் வழிபடும் இடங்கள் அமைந்தன என்பதை அவற்றின் பெயர்களே காட்டும்.

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து"

எனும் தேவாரத்தில் பலவகை கோயில்களை அமைந்தமை காணப்படுகின்றது (பொது ஆண்டு 650 பாடல்). பின்னாளில் கட்டிட அமைப்பு அகழி என்றெல்லாம் பெருகி உள்ளது. ஒன்றுக்குள் ஒன்று என சிதம்பரம் ஸ்ரீரங்கம் போல் 4- 5 பிரகாரங்கள் எனவும் வளர்ந்தது (அமெரிக்காவின் பாதுகாப்பு அமைப்பான பெண்டகன் இதன் பிரதி). வெறும் மன்னன் இல்லமாக இருந்தால்தானே இடிக்கின்றனர். அதனால் கோட்டையும், எல்லோரும் வணங்கும் இறைவன் கோயிலாக மாற்றினர். ஆனால் தேவைப்படும் படைகள் தங்கும் (BARRACKS) கொட்டில்களாகிவிடும். வெறும் கருங்கல்லாலான தெய்வத்துக்காக உயர்ந்த மதில்கள் மிக உயர்ந்த கதவுகள் கட்டப்படவில்லை. கொடிமரமும் அரசனது கொடிகட்டி அறிவிக்கும் முயல்வு அவ்வளவே. யோகநிலை குண்டலினி முதுகுத்தண்டுபோல் காண்பது எல்லாம் வெறும் ஏமாற்று வேலையாக (கப்சாலாஜி) மடை மாற்றிக்காட்டும் கற்பனை முயற்சி நிலை.

இராசராசன் காலத்து இருந்த தனித்துவம் பெருமைபற்றி எழுந்த தஞ்சைக்கோயில் இறைவன் கருவறையில் மேலாகக் கட்டப்பட்டது. பின்னாளில் பாண்டியர்கள் விசய நகரத்தார் நாயக்கர் காலத்தில் வெளிமதிலில் நாற்புறமும் உயரத்திலிருந்து வேவுபார்க்கக் கட்டப்பட்டன (மேற்கத்திய நாடுகளில் உயரத்தில் bunkers அமைத்து நோட்டம் விடுவார் என்பதன் முன்னோடி). எங்கெல்லாம் கோயிலால் உள்ளனவோ அவையெல்லாம் குறு மன்னர்களின் கோட்டைகளே. இவை அமைக்கப்பட்டுள்ள இடம் startegic location ஆக இருப்பதைத்தான் காண்கின்றோம். அதாவது பெரும் ஆற்றினைக் கடக்கும் பெருவழியில் மலைக்கணவாய் வாயிலில் (திருவண்ணாமலை) அமைப்பர். திருவரங்கம் காவிரியின் தீவில் உள்ளது.

---

தொடர்பு: நூ த லோ சு (மயிலை நூ.த.லோக சுந்தரம்) <selvindls61@gmail.com>

## 12. சங்கம்

– இராம.கி.

— 1 —

மொழிவளர்ச்சி என்பது, ஒரு சிக்கிலா நூற்கண்டை நீளவலிப்பதுபோல் எண்ணுற்று (quantify) நிகழ்வதில்லை. காலமாற்றத்தில் மொழிபேசுவோர் எண்ணிக்கை கூடக்கூட எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி போன்றவற்றில் மொழிமாற்றம் ஏற்படலாம். ஓரிட விதப்பு (specialized) வழக்கு இன்னோரிடத்துப் புரியாது போகலாம். ஒருசொல்-பலபொருள், பலசொல்-ஒருபொருள் தன்மை மொழியில் மிகுத்து வரலாம் இதுவரையிலாத பொருட்பாடுகள் கூட ஒரு சொல்லிற்கு ஏற்படலாம். ('நாற்ற'ப்பொருள் இற்றைத்தமிழில் மாறியதே?) மொழிவளர்ச்சி தெரியா விடில் சொல்தோற்றம் எப்படியென முடிவுசெய்வதில் முரண்வரலாம். மொழித்தொனியும் இடத்திற்கிடம் மாறும். (ஈழம், தென்பாண்டி, கொங்கு, வடதமிழகத் தொனிகள் வேறானவை). மொழிக்கிளைகளின் இத்தகைய இயல்பு வேறுபாட்டைத் தான் இயல்மொழிக் கிளைப்பென்றும் முரணியக்க மொழிவளர்ச்சி (dialectic language development) என்றுஞ் சொல்கிறார்.

20ஆம் நூற்றாண்டிலெழுந்த ”சங்கவிலக்கியச்” சொற்கூட்டின் தோற்றம்பற்றி சில மாதங்கள்முன் மின்தமிழ்க்குழுவில் ஓர் உரையாட்டெழுந்தது. சொற்கூட்டை முதலில் யார்சொன்னார் என்பது ஒரு விதயமெனில் ”சங்கச்”சொல்லிற்கு மரபுப் பின்புலத்தில் தமிழ்வேர் சுட்டுவது இன்னொரு விதயம். தமிழ் போலும் மொழிகளில் சொல்லின் பொருட்பாடுகள் ஒன்றிலிருந்து இன்னொன்றென வெவ்வேறு காலங்களில் சரம்போல் எழும். (சில பொருட்பாடுகள் சரத்தில் விலகித் தோன்றின, ஒன்றிற்கு மேலும் சரங்கள் உண்டென்றோ, செய்யப்படும் அலசலில் தவறென்றோ பொருளாகும். "சங்கப்" பின்புலம் தெரிந்துகொள்ளுமுன் தமிழ், பாகத, சங்கத மொழிகளின் ஊடேவரும் இடையாற்றத்தைத் தெரிந்துகொள்வது தேவையானது.

தமிழிற் பயனுறும் சில சொற்களின் மேலோட்ட வடமொழித்தோற்றங் கண்டு, அவற்றின்வேர் சங்கதத்தில் உள்ளதெனத் தமிழரிற் பலரும் கருதுகிறார். இக்கருதுகோளின் பின்னுள்ள தரகுவருக்கப்புரிதல், தமிழர் பண்பாட்டுத்தளத்தை அவ்வளவு ஆள்கிறது. ”மெய்யியலா? அறிவார்ந்த உரையாடலா? பழைய அறிவியற் கருத்தா? சங்கதத்திலிருந்தே மாநிலங்களுக்குப் போகும்” என

இந்தியாவெங்கணும் சொல்லப்படுகிறது. இதைமறுப்போர் குமுகாயத்தில் ஒதுக்கப்படுகிறார். மாநில மொழிகளுக்கும், சங்கதத்திற்குமான இருவழிப் போக்குவரத்தைப் பலருமுணர்வதில்லை. இத்தனைக்கும் பழங்கலைஞர், தொழில்முனைவோர் மாநிலமொழிகளிலேயே தத்தம் வித்தைகளை மாணவர்க்குச் சொல்லிக்கொடுத்தார். பல கலைச்சொற்களின் வேர்கள் வட்டாரமொழிகளிற்றான் உள்ளன. ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேல் பரிமாற்றமொழியாய் (exchange language) வேலைசெய்த சங்கதம் இவற்றைத்தான் பல்வேறு இந்திய வட்டாரங்களிலிருந்த படித்தமக்களிடையே பரப்பியது. இருந்தாலும் பல சொற்களின் ஊற்று சங்கதமென்றே சொல்லப்படுகிறது. ஒருமுறை மின்தமிழ் மடற்குழுவில் “வடமொழி என்பது சங்கதமா?” என்ற கேள்வியை திரு.பானுகுமார் கேட்டு குழுமக்கருத்தறிய விழைந்தார். அவர்கேள்வி கீழே:

---------------------------------------

தொல்காப்பியத்தில் “வடமொழி” என்பதற்கு சங்கதம் (சமஸ்கிருதம்) என்றே நிறைய உரையாசிரியர் எழுதிச்சென்றுள்ளார். ஆனாலும் சில அறிஞர் (குறிப்பாக, கார்த்திகேசு சிவத்தம்பி, தெ.பொ.மீ) அதைப் பிராகிருதமென்றே பொருள்கொள்வார். http://tamilvu.org/courses/degree/a051/a0514/html/a051452.htm. ”தொல்காப்பியர் காலத்திருந்தே தமிழோடு மிகநெருங்கிய தொடர்பு கொண்ட மொழி சமஸ்கிருதமெனப்படும் வடமொழியாகும். தொல்காப்பியர் வடக்கிலுள்ள மொழிபற்றிப் பொதுவாக வடசொல்லெனக் குறிப்பிடுவார். அதனால் இச்சொல் பிராகிருதம், பாலியாகிய மொழிகளையும் குறிப்பதாக வேண்டுமெ”ன்று தெ.பொ.மீ. குறிப்பிடுவார். 1. உண்மையில் வடமொழியென்பது சங்கதம் மட்டும் தானா? அல்லது பாகதம் சேர்த்தே, பொருள் கொள்ள வேண்டுமா? 2. அப்படிச்சேர்த்தே பொருள்கொள்ள வேண்டுமெனில், கிடைத்த கல்வெட்டுகளின்படி தமிழுக்கும், பாகத்திற்கும் மட்டுமே கி.மு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. சங்கதக் கல்வெட்டோ, மிகப்பிந்தியது. தொல்காப்பியமெழுந்த காலம் கி.மு.என்றால், அக்காலத்தில் சங்கதக் கல்வெட்டுக்களில்லை. அதிகாரப்பூர்வ சங்கதக் கல்வெட்டின் காலம் கி.பி.150ஆம் நூற்றாண்டு. எழுத்தில்லாத மொழிக்கு இலக்கணம் படைக்கமுடியுமா?"

---------------------------------------

பலருக்கும் இக்கேள்வி எழலாம். சங்கதக் கட்சியார் பலருங் கவனமாய், பாகதச்சங்கத ஊடாட்டம் ஒதுக்கி, ”சங்கதம் தாய் பாகதம் மகளெ”னத் தலைகீழ்ப்பாடம் படிப்பார். பொ.உ.மு. 1000-200 இல், குறிப்பாய், சனபதக்காலத்தில் (பொ.உ.மு.1000-600), வடக்கே பாகதமே பரந்தது. கத்துவதைக் கத்தம்>கதம். ஈழப்பேச்சில் கதைத்தல், பேசுதலைக்குறிக்கும். பா+கதம்= பரவற்பேச்சு. இதைப் பெருகதம் (prakrit), மாகதம்/மாகதி என்றுஞ் சொல்வார். தமிழைத் தனித்துச்சொல்வதில் எத்தனை அருகதையுண்டோ, அது பாகதத்திற்குமுண்டு.

அகண்ட மகதப்பேரரசின் கிளை வழக்குக் கலவையாய் (முகலாயப் பேரரசிலெழுந்த இந்துத்தானி போல்) சம்+கதம் எழுந்தது. சங்கதத்தின் திருந்திய மொழி செங்கதம் (செம்+கதம்). இந்துத்தானியில் எழுந்த சர்க்காரி இந்திபோல் இதைக்கருதலாம். சங்கதமும் செங்கதமும் ஒரே மொழியின் 2 வழக்குகள். இன்றோ பேச்சுமொழியின்றி, ஏட்டுச்செங்கதத்தைச் சங்கதமாய்க் கொள்கிறார். அதிற்றான் குழப்பமே! (பேச்சுத்தமிழின்றிச் செந்தமிழ் மட்டும் எஞ்சினால் எப்படி?)

ஒருமொழிக்கிளைகள், கால இடைவெளியால், வட்டாரப்போக்குவரத்து இல்லாததால், நுட்பியல் பரிமாறாததால், பொருளியல், வணிக, ஆட்சித் தாக்கங்களால், அரசியல் குமுக நடைமுறையால், தனித்தனி மொழிகளாகலாம். 2000/3000 ஆண்டில் தமிழுக்கும் அதுநடந்தது. அருவத்தமிழ் தெலுங்காகி. கொங்கணத்தமிழ் துளுவாகி. கங்கர்தமிழ் கன்னடமாகி, சேரலத் தமிழ் மலையாளமாகி, எழுத்து/சொல்/பொருளில் சிச்சிறிதாய்மாறிப் பங்காளிமொழிகளாயின. ”இவ்விடங்களிற்புழங்கிய தமிழிலிருந்தே, இவைதோன்றின” என்பதைமறுத்து, நொதுமலாய்ச் (neutral) சில ஆய்வாளர் முந்து / தொடக்கத் திராவிடம் (proto-/early Dravidian) என்றாலும், நான் அப்படிச்செய்யேன். தயங்காது திராவிடத்தைத் தமிழியமென்பேன். நானறிந்தவரை முந்து திராவிடம் 95/98 % தமிழே. இதை ஏற்கமறுப்போரே முந்து திராவிடக் கதைபடிப்பார். [அதேபொழுது, அறிவுப்புலப்போட்டியில், கல்விச்சாலை அரசியலால் (academic politics) எழும் ’முந்து திராவிடம்’ புரிந்துகொள்கிறேன். மொழித்தொடர்ச்சி, விதப்பு, நுணுக்கம் போன்றவற்றில் நமக்கெவ்வளவு உரிமையுண்டோ, அதேயுரிமை பழந்தமிழ்ச் சேய்களான மற்ற திராவிட மொழிகளுக்குமுண்டு.]

பாகதத்திலும் பாஷை (இதுவும் ’பேச்சு’ம் ஒன்றே; பொ.உ.மு.1500-1200 களில், வேதமொழி, வழக்குமொழிப் பங்களிப்பில், இற்றை இலாகூர் சுற்றி சந்தசு/பாஷை மொழியெழுந்தது. பொ.உ.மு.500 இல் இதற்கே பாணினி இலக்கணஞ்செய்தான்), மராட்டி (படித்தான-Paithan மொழி.), மாகதி (2500 ஆண்டுகள்முன் பிம்பிசாரன் தொடங்கி நந்தர், மோரியர், சுங்கர், கனகரெனப் பலர்புரந்த, பேச்சுமொழி. தேரவாத இலக்கியப்பாலி இதிற்கிளைத்தது. மகாயானமோ பொ.உ.500களில் சங்கதங்கலந்த பாலியில் தொடங்கி முடிவில் சங்கதத்திற்கே வந்தது), அருத்தமாகதி (மகததின் வடக்கே வச்சிரம் புழங்கிய, மகாவீரர் பேசிய, மொழி. திகம்பரச்செயினம் இன்றுமிதைக் காப்பாற்றும். சுவேதாம்பரம் சங்கதங்கலந்த அர்த்தமாகதிக்கு மாறியது), அங்கமொழி (வங்கத்தின் முந்தைமொழி), கூர்ச்சரி (குசராத்தியின் முந்தைவடிவம்), சூரசேனி [வடமதுரையின் பேச்சுமொழி. இதன்கீழ்வந்த காடிபோலியின் (அங்காடிப்பேச்சின்) திரிந்தவடிவமே நடுவணரசின் முற்றாளுமையாற்பரவும் இந்தி, மைதிலி (பீகார் மிதிலையிற் பரவிய பேச்சு.

இந்தித் தாக்கத்தில் குன்றியது), அவந்தி, காந்தாரி போன்ற வழக்குகளும் வடக்கேயுண்டு. இவற்றைத் தனிமொழிகளென்று சொல்லவிடா அளவிற்கு ஆங்காங்கே ஏமாற்றும் நடக்கிறது.

2500 ஆண்டுகளுக்கு முன் வடக்கே பாகதர், தெற்கே தமிழரெனக் கிடந்த நாவலந்தீவில், விண்டம்>விந்தம்>விந்தியம் வரையில் தமிழாட்சியிருந்தது. (விள்ளல்>விண்டல்=பிரித்தல். விண்டமலை தமிழ் வரலாற்றோடு தொடர்புற்றது. அதுவே வெள்ங்+கடம்>வெங்கடம்>வேங்கடம் (வெள்+து=வெட்டு; கடம்=மலை) என்றானது. (வேங்கடத்தையே வேங்குன்றம்>வேகுன்றம்> வைகுண்டமென்று தெலுங்கின்வழி வைகுண்டமாக்கினார். விண்டம், வேங்கடத்தின் பழைய அடையாளங்களை வெங்காலூர்க் குணாவின் “தமிழரின் தொன்மை” என்ற பொத்தகவழி அறியலாம். அந்நூலின் எல்லா வரைவுகளையும் நான் ஒப்பாவிடினும் படிக்கவேண்டிய நூலென்றே சொல்வேன். இதையே ”வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகமெ”ன்று தொல்காப்பியர்காலப் பனம்பாரனார்பாயிரங் குறிக்கும். அப்புறம் என்ன முந்து திராவிடம்? ஆழ்ந்துநோக்கின், தமிழாட்சி, மூவேந்தர் எல்லைகளைவிடப் பெரியது. (இன்றுந் தமிழின் ஆட்சியெல்லை, தமிழ்நாட்டைவிடப் பெரியது.)

பழவிலக்கியத்தை அலசின், விண்டத்தின் தெற்குநாடுகள் பற்றி வடவருக்கு நெடுங்காலந் தெரியாதது புரியும். விண்டப்பிரிப்பை பொ.உ.மு.500-200களில் மோரியரும், பொ.உ.மு. 230-பொ.உ..220 களில் (இற்றை ஔரங்காபாதின் அருகே கோதாவரிப் படித்தானத்தில் எல்லையதிகாரிகளாய் அரசாண்ட) நூற்றுவர்கன்னருமே முதலிலுடைத்தார். ’மொழிபெயர் தேயமெ’ன்ற மாமூலனாரின் சங்கச்சொற்றொடர் மூலமும், நாணய இருபுறங்களில் இருமொழிகளில் அச்சடித்ததாலும், கன்னராட்சியில் தமிழும் பாகதமும் ஆண்டது புரிபடும். இந்தியவரலாற்றில் வடபுல/தென்புல நாகரிக, பண்பாட்டு ஊடாட்டமறியக் கன்னராட்சியை உறுதியாக ஆயவேண்டும். இதையறியாத தனித்தமிழ் ஆர்வலர், நூற்றுவர் கன்னரைக் குறைத்துப்பேசுவார். “வடுகரெனும்” கண்ணோட்டம் நம் கண்ணை மறைத்துவிடக்கூடாது.

தாய்வழி உறவுற்ற அவர்நாட்டில் அகநானூறு போலவே ’அகம்எழுநூறு (கஹசத்தசை; ’கதாசத்தசை’ என்றுஞ்சொல்வர்.)’ என்ற நூலெழுந்தது. தமிழரிடை பரவிய பெருங்கதை (உஞ்சை உதயணன் கதை) கன்னரவையில் எழுந்தது. வேதநெறி/மறுப்புநெறிகளை ஒருசேரப்புரந்ததும் கன்னர் கல்வெட்டுக்களிற் புலப்படும். இவர்நாட்டின் வழிதான் செயினமும், புத்தமும் தெற்கு நுழைந்தன. தென்னக அற்றுவிகம் (ஆசீவிகம்) வடக்கே சென்றது. தமிழகம்போல்

சமயப்பொறை இங்குமிருந்தது. மகதம்போகும் தென்னகச் சாத்துகள் படித்தானம்வழி சென்றன. தவிரக் கன்னர், சேரரின் மேலைத் துறைமுகங்கள் மேலை வணிகத்திற்கும், சோழ, பாண்டிய, கலிங்க, மகதரின் கீழைத் துறைமுகங்கள் தென்கிழக்காசிய வணிகத்திற்கும் கால்கோலின. பல்வேறு ஒற்றுமைகள் கொண்ட கன்னருக்கும் தமிழர்க்குமான நட்பைச் சிலப்பதிகாரம் பேசும். (இச்சான்றுகளை மறுத்துத் தமிழர் வரலாற்றைக் குலைக்க முற்படுவோரே சிலம்பைப் புதினமென்பார். கூடவே கொங்குவஞ்சியை குடவஞ்சியோடு குழப்புவார்)..

கன்னராட்சியின் தென்கிழக்கிற் பாகதமும், அருவத்தமிழும் ஊடிப்பிறந்தது பழந்தமிழருக்கு வடுகாயும், பாகதர்க்குத் தெலுகு/தெனுகாயும் ஆனது; [தெல்/தென்/தெற்கு) இதைத் தக்கணம் என்றுஞ் சொல்வர். 'திரிகலிங்கின்' திரிவு 'தெலுங்கெ'ன்பதற்கு ஆதாரமில்லை.] வடுகு/தெலுகுப் பெயர் விளையாட்டே மொழியுண்மை காட்டும். கன்னர், பிந்தைச்சளுக்கர் தொடர்பால், ஒருகாலத்தில் கன்னடமும் வடுகெனப் பட்டது. தமிழ்ப்பலுக்கின்படி படகரும் வடகரே. சிலம்பிற்பயிலும் 'கொடுங்கருநாடர்' என்பது, "கொடுகிய (தமிழ்)பேசும் கருநாடரைக்" குறித்தது. [கொடுகு = வளைவு, திரிவு. எதிலிருந்து கொடுகியது?- என்றுகேட்டால், பொ.உ.மு.80களில் உருவான பழங்கன்னடத்தின் தொடக்கம் புரியும். இப்படிக் கேள்வி கேட்க நாம் தயங்குகிறோம்.] ஒருகாலத்தில் மலையாளிகள் தமிழ்த்தொன்மை பேசத்தயங்குவர். இன்றோ சங்கப்பின்புலத்தை அவருஞ் சொல்கிறார். நாம் கேள்விகேட்கக் கேள்விகேட்கக் கன்னடரும் இதை ஏற்றுக்கொள்வார். இந்தியெதிர்ப்பை இப்பொழுது புரிந்துகொள்கிறாரே?

வரலாற்றோட்டத்தில், தெற்கே தமிழர் சுருங்க, தெலுங்கரும்/கன்னடரும் விரிய, வேங்கடப்பொருள் சிச்சிறிதாய் மாறியது. முதற்பொருளான விண்டமலையைக் குறியாது, வடபெண்ணை ஒட்டி வெய்யில் கொளுத்தும் இராயலசீமையை இரண்டாம் பொருளாய்க் குறிக்கத்தொடங்கியது. வேம்+கடம்=வேங்கடம்= வெய்கடமென்பார் ந.சுப்புரெட்டியார். இன்று இதுவும் மாறி மூன்றாம் பொருளில் திருமலையை வேங்கடமென்கிறார். ஏற்கனவே கடத்திற்கு மலைப்பொருள் உண்டெனில் (காடு, பாலைநிலவழி என்ற பொருள்களுமுண்டு) வேங்கடாசலமென இன்னோர் அசலம் (மலை) எப்படிவந்தது? இந்த.அசலச்சேர்ப்பே, திருமலை=வேங்கடம் என்பதைப் பிந்தைப்புரிதலாய்க் காட்டும். (விண்டமலையில் விண்டுகோயிலுண்டா?- ஆயவேண்டிய கேள்வி.) தமிழக வடகிழக்கின் உள்ள ஓரமலை சங்ககாலத்தில் எப்படி நமக்கு முழு வடக்கெல்லையாகும்? காலங்காலமாய்த் தமிழ்நிலமும், சிந்தனையுஞ் சுருங்கி, காலப்பிறழ்ச்சியிட் பொருட்பிறழ்ச்சியாகி இதுவே உண்மையென நாம் மயங்கிக்கிடக்கிறோம்.

சங்ககாலத்தில் கடற்பக்க ஆந்திரம் பெருங்காடு. (அதனுள் சாலைபோட்டு வடக்கேபோனது, பேரரசுச்சோழர் காலத்தில்.) சங்ககாலத்தில் வடக்கேகிய சாத்துகள் இராயலசீமையின் வேங்கடங் கடந்து படித்தான (>பைத்தான்) வழி, தக்கணப்பாதையில் மகதம் போயின. சங்கநூல்களில் நூற்றிற்குப்பாதி பாலைப்பாட்டுகளே. (தக்கண, உத்தரப் பாதைகளறியாது இந்தியத் தொன்மை புரியாது. தமிழாய்வும் விளங்காது. தமிழறிஞர் என்றிதை உணர்வாரோ அன்றே முன்நகர முடியும். இல்லாவிடிற் குண்டுசட்டிக்குள் குதிரையோட்ட வேண்டியது தான்.) பாலை தாண்டி வடக்கே மகதம் போகாது, தென்கிழக்கு, மேற்கு நாடுகளுடன் கடல் வாணிகஞ் செய்யாது, தமிழகம் வளரவில்லை, நம் 'அகமும் புறமும்' ஆழ்ந்துசொல்வதை எப்போது புரிந்து கொள்வோம்.? பொருளியல் புரியாது வரலாறு புரியுமா?

பல்வேறு கிளைமொழி கலந்து பாணினிக்கப்புறம் கி.மு.300களில் வடமேற்கின் பாஷாவை (சந்தஸ்) அடிப்படையாக்கிச் சங்கதம் (கலப்புமொழி) எனும் எழுதாக்கிளவியைப் படிப்பாளிகள் உருவாக்கினர். பாணினி சங்கதப்பெயரைப் பகரவில்லை. பிற்காலத்தில், குப்தரின் ஆட்சிமொழியாகிச் சங்கதம் செங்கதமானது. குப்தவரசு பெற்ற அகல்வளர்ச்சியில் வட்டார இலக்கியங்கள் சங்கதம் பெயர்க்கப்பட்டன. (பஞ்சதந்திரம், பெருங்கதை போன்றவை குப்தர்காலத்தில் சங்கதம்வந்த மொழிபெயர்ப்புகள்.) வட்டாரமொழிகளைச் சிச்சிறிதாய்ச் சங்கதம் விழுங்கிப் பரவியது. காளிதாசன்முதல் பல்வேறுபுலவர் குப்தர் அவையிற் சங்கதவிலக்கியம் படைத்தார். (குப்தரும், ஓரளவு பல்லவரும் இல்லாது போயிருந்தால் இன்று சங்கதம் இல்லை.) பொ.உ.150களில் பாகத எழுத்தால் (பெருமி; brahmi) இதை எழுதினார். பொ.உ.9-10 ஆம் நூற்றாண்டில் பெருமி நகரியானது. வெவ்வேறு அரசுகளின் எழுத்துமுறைகள் வெவ்வேறு காலங்களில் இதுபோல் தோன்றின.

சாதவாகனரின்கீழ் அதிகாரிகளான பல்லவர் இராயலசீமையிலிருந்து இறங்கிவந்து வடதமிழக ஆட்சிகொண்டார். இவராட்சியில் பாகதம் கொஞ்சங் கொஞ்சமாய் வெளியேறிச் சங்கதப் புழக்கங் கூடியது. தமிழெழுத்திலிருந்து கிரந்தம் உருவாக்கிச் சங்கதமெழுதினார். கிரந்தம், நகரியெழுத்திற்கும் முந்தியது. இவ்வரலாற்றைக் கூடத் தமிழர் மறந்தார். கிரந்த ஆர்வலரும் பேசக்காணோம். இதுபோன்ற நம் உரிமைகளை ஒருபக்கம் விட்டுக்கொடுத்து, இன்னொருபக்கம் "கிரந்தத்திலிருந்து தமிழெழுத்துப் பிறந்ததெ"ன்று தலைகீழ்ப்பாடம் ஓதுவார். வேறொன்றுமில்லை இருக்க இடங்கொடுத்தாற் படுக்க இடங்கேட்பது வாடிக்கை. வெற்றிபெற்றோர் வரலாறெழுதுவதுபோல் எல்லாவற்றிற்கும் சங்கதமே ஊற்றென

இன்று மாறி உரைக்கிறார். (மீண்டும் குப்தர்காலத்தைக் கொண்டுவர எண்ணுகிறார் போலும்.)

வடமொழி என்பது இடத்தைவைத்துப் பெயரிட்ட சொல். வடபுலத்தின் தொலைவிலுள்ள நமக்கு அது "வடக்கிருந்த/இருக்கும் மொழி" அவ்வளவு தான். குப்தர் காலத்தில் மட்டுமே இது சங்கதம். சங்க காலத்தில் இது பெரிதும் பாகதம்; படித்தோர்வழிச் சிறுபான்மையிற் பாஷா/சந்தஸ். வரலாற்றுப்பொருள் காலத்திற்கேற்ப மாறியது. நாளாவட்டத்தில் பல்லவர் தாக்கத்தில் பாகதப்புரிதல் குறைந்தது. பின் ஏற்பட்ட கருத்துமாற்றத்தைச் சங்ககாலத்திற் கொண்டுபோய் வலிந்துபொருள்கொள்வது தவறு. அக்காலத் தென்னகமொழி, தமிழே. இன்றுள்ள மற்ற தென்மொழிகள் அக்கால வட்டாரக் கிளைமொழிகள் ஆக இருந்தன. (இன்றோ, தென்மொழியெனத் தமிழைப் பொதுப்படச் சொல்வது தவறு.)

**— 2 —**

ஒருசொல் தமிழெனில், "சங்கவிலக்கியத்தில் இதுவுண்டா?" எனக் கேட்கும் விந்தைப்பழக்கஞ் சிலரிடமுண்டு. அப்படிக் கேட்பது தவறில்லை. ஆனால் "நாலுவேதங்களிற் குறிப்பிட்ட சொல்லுண்டா?" எனச் சங்கதம் நோக்கிக் கேட்டு நான் பார்த்ததில்லை. இருக்குவேதந் தொடங்கி பொ.உ.400வரை வந்த சங்கிதை (ஸம்ஹித); ஆரணம் (ஆரண்யக), பெருமானம் (ப்ராஹ்மண), உள்வநிற்றம் (உபநிஷத) என எல்லாவற்றையும் வேத இலக்கியம் என்றாக்கி, பொ.உ.1400 வரையுள்ள மகாபாரதம், இராமாயணம், காளிதாசம், புராணங்களையுஞ் சேர்த்துக் "குறித்த சொல்" எங்கு வந்தாலும் அதைச் சங்கதம் என்பது எப்படிச் சரியாகும்? பெரும் 'பக்தி'யில் சங்கத இலக்கியக் காலத்தை இப்படி அகட்டுவது பற்றிக் கேள்வியே எழாது. சங்கவிலக்கியங்களுக்கு மட்டும் மனத்தடையெழும். எவ்வளவு முடியுமோ, அவ்வளவிற்குச் சங்க இலக்கியப் பரப்பைக் குறைத்துக் காலத்தைப் பின்நகர்த்துவார்; கல்வெட்டு, பானைப்பொறிப்புக்களையும் உடனழைப்பார். ஒப்பிலக்கிய ஆய்வு பார்க்கலாமெனில் அந்தப் பருப்பும் இவரிடம் வேகாது. சங்கதத்திலிருந்தே தமிழ் copy எனக் காரணமின்றிச் சொல்லிச் சண்டித்தனமும் செய்வார். ஒரு கண்ணிற் சுண்ணாம்பு; இன்னொரு கண்ணில் விளக்கெண்ணெய். அவ்வளவு தான்.

(இத்தனைக்கும் தமிழிற் பானைப்பொறிப்பு பொ.உ.மு.490 இல் தொடங்கியது; இதையுஞ் சிலர் பூசி மெழுகிச் செயினத்தைத் துணைக்குக் கூப்பிடுவர். (செயின நூல்கள் எழுத்தானது பொ.உ.மு. 200 க்கு அப்புறமே. பார்க்க: The Jaina sources of the History of Ancient India - Jyotiprasad Jain. Munshirm Manoharlal publishers. அதுவரை அவரும்

மனப்பாடமே செய்துவந்தார்.) செயினத் துறவிகளால் தமிழகத்தில் எழுத்துப் பரவியதென்பது உரையாசிரியரால் நெடுநாள் பரவிய தொன்மம். உருப்படி ஆதாரம் அதற்கில்லை. இத்தொன்மம் 20 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டியலுக்குஞ் சென்றது. அற்றுவிக (ஆசீவிக) இயலுமைகளை முற்றவொதுக்கி, எல்லாம் செயினமென்பது ஒருவித முன்முடிவே. (பேரா.க.நெடுஞ்செழியனும், குணாவும் விடாது வினவ, கல்வெட்டாளர் சற்று செவிமடுக்கிறார்.) என்னைக் கேட்டால், சங்ககாலக் கல்வெட்டுக்களில் மீளாய்வு தேவை. (செயினத் தாக்கத்தை யாருங் குறைக்கவில்லை.) இதுவரை கிடைத்த தரவுகளடிப்படையில் தமிழியே முதலானது. பெருமிக் கல்வெட்டுக்கள் பிந்தையன. தமிழியும், பெருமியும் (Brahmi) ஒன்றெனச் சொல்ல முற்படுவதும் குழப்பவாதமே. எல்லாநேரமும் வறட்டுத்தனம் பேசினாலெப்படி? சங்கதக்கல்வெட்டோ பொ.உ.150 இல் தான் எழுந்தது.)

இன்னொரு சிக்கலுமுண்டு. சங்கதக் காப்பிய மரபுகளையும், பரதநாட்டிய சாற்றத்தையும் முன்னோடியாக்கி, அதன்வழி தமிழ்த்திணைகள் எழுந்ததாய்ச் சொல்லி, 9ஆம் நூற்றாண்டில் பிற்றைப்பாண்டியர் ஆணையில் 5/6 plagiarist புலவர் room போட்டு ஓர்ந்து, "மாமூலனார், கபிலர், பரணரெ"ன்று கற்பனையில் புலவர்பெயர் உருவாக்கி, பெருத்த ஏமாற்றுத் திட்டமொடு சங்கதநூல்களைப் படியெடுத்துச் சங்கநூல் படைத்ததாய் நெதர்லாந்துப் பேரா. எர்மன் தீக்கன் ஆதாரமில்லாது 'ஞானங்' கூறுவார். உடன் தமிழருந் தண்டனிட்டு "சாஷ்டாங்கமாய்க்" கீழே விழுவார். இதற்கு உறுதுணையாய், சங்கத ஆடி விழும்பமே (mirror பிம்பம்) தமிழென நம்மூர் இரா.நாகசாமியுங் கூறுவார். அவருக்குஞ் சிலர் "ததாஸ்துப்" போடுவார். இவற்றை மறுத்துச் சொன்னால், சற்றும் வாதச் சமமற்று (assymmetrical), "தமிழ் ஓதிகளா? தாழ்வு மனத்தர், வெறியர்" எனும் உளத்தாக்கலும் அவ்வப்போது நடக்கும். "யார் வெறியர்?" என்பதில் அறிவு தடுமாற வைத்துவிட்டால், அதிகார வருக்கம் ஆர்ப்பாட்டமிடலாமே? சங்கதம்-தமிழ் அறிவுய்திகள் (Intelligentia) இடையே வாதாடுவதென்பது (அதன்பகுதி 'சங்கச்'சொல் பற்றிய வாதம்) இப்போதெல்லாம் சென்னையில் நடக்கும் நீர்க்குழாய்ச் சண்டைபோல் ஆகிவிட்டது.

இன்னொரு வேடிக்கை தெரியுமோ? சங்க இலக்கியங்கள், தமிழுக்காக முன்னோர்படைத்த அகரமுதலிகளல்ல. அற்றைத்தமிழில் 100 சொற்களெனில் அத்தனையும் சங்க இலக்கியத்துள் வருமா, என்ன? (சங்க இலக்கியங்கள் பலவற்றைப் பலவாறாய் அழித்தோமே?) அவை சொல்லா நிகழ்வுகள், நடைமுறைகள், சொல்லாட்சிகளுண்டு. (காட்டாகச் சங்கிற்கிணையான பிறசொற்களே சங்க இலக்கியத்தில் பெரிதும் பயின்றன. தொடக்க இலக்கியங்களில் 'சங்கு' குறைந்தே வரும். ஆனாற் பேச்சுவழக்கிலோ சங்கே

இன்றுள்ளது. மற்ற “இலக்கியச்சொற்கள்” பழகவேயில்லை. விந்தையல்லவா?) பல சொற்கள் பிற்கால இலக்கியங்களிற் பதிவாகலாம். (பெயர், வினை, இடை, உரி என) எவற்றைப் பெய்யவேண்டுமோ அவற்றைக்கொண்ட சங்கப்பாடல்களில் உள்ளடக்கம் பெரிதே தவிர, அவற்றின் சொற்றொகுப்பு அவ்வளவு பெரிதல்ல. தாமறிந்த சொற்களைக் கொணர்ந்து கொட்டுவதும் சங்கப்புலவர் குறிக்கோளல்ல. பாடல் தொகுத்தோரும் அவற்றை நாடித் தொகுக்கவில்லை. (சங்க இலக்கியத்தில் ஒருசொல் வந்துள்ளதா?- என்ற கேள்விக்கு விடைதரும் முகமாய், பேரா. பாண்டியராஜாவின் sangam concordance போல இன்று தான் சிலர் சொவ்வறை/software மூலஞ் செய்கிறார்.)

ஒருசொல்லின் சங்கவிலக்கியப் புழக்கத்தை ஏரணத்தோடு தமிழ்க்கிடுக்கியரிடம் (critics) நிறுவுவதிலுஞ் சிக்கலுண்டு. பொது இயலுமைகளைப் (possibilities) பார்க்கமாட்டார். குறிப்பிட்ட வட்டாரப்புழக்கம் பிடித்துக்கொண்டு, மற்றவற்றை ஒதுக்குவார். பேச்சையும், எழுத்தையும் பொருத்திக்காணார். ஒருபொருள் குறிக்க 4 சொற்களிருந்தால் மரபுகருதி ஒருசொல் பாடல்களில் திரும்புவதை “stock phrases" என்று கேலிசெய்து ’மற்றவை கடன், குறிப்பாய்ப் பாகதம்’ என்பார். (சங்கதப்பேச்சு சிலரிடம் அருகிவிட்டது.) தமிழிலிருந்து பாகதம் ஏன் கடன்வாங்கக்கூடாது?- என்பதற்கு இவரிடம் விடைகிடையாது. வினைச்சொல் இருப்பின் அதன்வழி உருவான பெயர்ச்சொல்லை ஏற்கார். பெயர்ச்சொல்லிருப்பின் உள்ளிருக்கும் ஊற்று வினைச்சொல்லை ஏற்கார். இடை, உரிச்சொற்களுக்கும் இவரிடஞ் சிக்கலுண்டு. விகுதி -பெயர்த்தொடர்பு சொன்னால் அதை ஏற்கமறுப்பார். ஆண்பாற் பெயரிருந்தால் பெண்பாற் பெயரில்லையென்பார். மொத்தத்தில் ”வேண்டாத மருமகள் கைபட்டாற் குற்றம், கால்பட்டாற் குற்றம்.”

நான் விளையாட்டிற்குச் சொல்லவில்லை. ஒருசமயம் ctamil மடற்குழுவில் பேரா. செல்வக்குமார் ”அச்சி” என்ற சொல் தமிழில் அம்மாவைக் குறிக்குமென்றார். நானும் அதையேற்று ”தமிழ்மன்றம்” மடற்குழுவில் ”அத்தன்/அச்சன் இருந்தால் அத்தி/அச்சியென்று பெண்பாற்சொல் இருக்குமே?” என்றேன். ”ctamil" குழுவிலோ சிலர் ‘கிடையாதெ’ன்று சாதித்தார். அதேபொழுது புருஷவெனுஞ் சங்கத ஆண்பாற் சொல்லிற்கு புருஷியென்ற பெண்பாற்சொல்லைப் பொதுவானதென இவரே ”மின்தமிழ்” மடற்குழுவிற் கற்பித்துச்சொன்னார். (சங்கதம் நன்குதெரிந்த இன்னொருத்தர் ”புருஷி” என்ற சொல் சங்கத இலக்கியத்துள் இல்லையென்றார்.) எங்கே ஒருவனுக்கு ஒருவளென்று சொல்லிப்பாருங்களேன்? புருஷியைப் பரிந்துரைத்தவரே ஏற்கமாட்டார். ’ஒருத்தி மட்டுமே’ என்று அடம்பிடிப்பார். தமிழ் இவருக்குத் தெரிந்ததல்லவா? அப்படியானால் ’ஒருத்தன்’ என்னாவது?

மொத்தத்தில் தான்பிடித்த முயலுக்கு மூன்றே கால். இப்படித்தான் தமிழ்-சங்கத முன்னுரிமை வாதங்கள் நடக்கின்றன.

2000 ஆண்டுகள்முன் பெரிதான பாகதமும் தமிழும் பல கலைச்சொற்களைச் சங்கதத்திற்கு அளித்துள்ளன. சொற்பிறப்பியல் பலருக்கும் தெரியாக்காரணத்தால், பல சங்கதச் சொற்களினடியில் தமிழ்வேர் இருப்பதும். அவை வடபூச்சுப் பெற்ற இருபிறப்பிகள் என்பதுந் தெரிவதில்லை. (காட்டாகத் தமிழ் உணவும், சங்கத அன்னமும் தமிழ் வேரால் தொடர்புற்றவை.) தெரியாததை ஏற்க உறுதி வேண்டும். அறிவியற்புலமை பெற்றதாலேயே அறிவியற்சொல்லின் வேர் எங்கெனச் சொல்லமுடியுமோ? அகழாய்வுபோலமையும் சொற்பிறப்பியல் ஒரு தனித்துறை. பலகாலம் ஆழ்ந்தவரையும் வழுக்கிவிடும். புதுப் பழஞ்செய்திகள் தெரிகையில் இதுவரைகட்டிய கோட்டை சீட்டுக்கட்டாகும். அண்மையில் "தமிழிற்கையாளும் பிரபஞ்சம், சக்தி, அக்கினி, உஷ்ணம், பூமி, சூரியன், சந்திரன், வாயு, விஞ்ஞானம் போன்ற சொற்களின் வேர் வடமொழி" என ஒரு பெரியவர் அடம்பிடித்தார். ஆழ்ந்துபார்த்தால், பெருவியஞ்சம்>பிரபஞ்சம், சத்தி>சக்தி, அழனி>அக்னி, உருநம்>உஷ்ணம், பும்மி>பொம்மிக் கிடப்பது பூமி (புடவி போன்ற சொல்), சுள்>சுர்>சூரன்>சூர்யன் = சுள்ளென எரிப்பவன், சாந்து>சந்து>சந்தன்>சந்த்ரன் = குளிர்ச்சியானவன், வாயில்வருங் காற்று வாயு, ஞாதலில் வருவது ஞானம்" என்று புலப்படும். "தமிழ் விஞ்ஞானம் கையாளும் இச்சொற்கள் தமிழ்வேர் கொண்டவை" என்பதும் பெரியவருக்குப் புரிந்திருக்கும். ஆனால் சங்கதத்தின் மேலுள்ள பற்று அவர் போன்றவரைச் சிந்திக்கவிடாது செய்கிறது.

இதேபோற் பூருவ நுண்ணாய்ந்தை (நுண்ணாய்ந்தை>நூணாய்ஞ்சை>mimaamcai=investigation), உத்தர நுண்ணாய்ந்தை, சார்ங்கம்(>சார்ங்க்யம்>சாங்க்யம்>caankyam=எண்ணியம்), ஓகம்(>யோகம்>yoogam), யாயம்>ஞாயம்(>ஞ்யாயம்>ந்யாயம்>nyaayam), விதத்திகம் (>விதேத்திகம்>விதேஷிகம்>விஷேஷிகம்>visheeshikam), என்ற 6 தெரியனங்களைச் (தெரியன>தெரிசன>தர்சன> dharsana) சங்கதம் பெரிது என்போர் விதந்துபேசுவார். கொஞ்சம் பொறுமையும், நீண்டநேரமும், பரந்தமனப்பான்மையும் இருந்தால் இவற்றின் அடியிலுள்ள தமிழ்ப்புலங்களை விளக்கமுடியும். அதற்கு மாறாய், எல்லாஞ் சங்கதம் என மூடுமனங்கொண்டால் அப்புறம் என்செய்வது? "சரி, எல்லாமே பின் தமிழா?"- என்றுகேட்டால் "அதுவுமில்லை. (இப்படி நான் சொல்வதால் தனித்தமிழார் கவலுறுவார்.) இரண்டிற்கும் கொடுக்கல் வாங்கலுண்டு. சற்று ஆழக்கவனியுங்கள்" என்பேன். 2 செம்மொழிகளில் சங்கதமே மேடு, தமிழ் பள்ளமெனும் ஓரப்பார்வை சரியில்லை. இரண்டிற்கும் இடையே ஒரு சமநிலம் வேண்டும்.

"தமிழ்ச்சொற் பிறப்பை பலரும் பலவிதங் காட்டுகிறாரே? இவற்றில் நெல்லெது? பதரெது? ஏரணமுறை எது?" என நண்பர் நா.கண்ணன் ஒருமுறை கேட்டார். எளிதில் மறுக்கக்கூடிய உலகு தழுவிய உன்னிப்புச் சொற்பிறப்பு (folk etymology), 'கதா காலாட்சேபப் பௌராணிகர்' போல் சொற்களைப் பொருளிலா ஒற்றசைகளாய்ப் பிரித்துப் பொருள்சொல்லல் ஆகியனவற்றைக் கண்டு அரண்டுவிட்டார் போலும். நெல்லின் இறுகியபால்பிடிப்பைக் கண்டுகொள்ள வெறுஞ் சொல்லொலிப்புப் பற்றாது, மரபு, வரலாறு, இலக்கியம், இலக்கணம், ஏரணமெனப் பல்வேறு கோணங்களில் சொல்லை அலசவேண்டும். ஆழப்பார்த்தால், சொற்பிறப்பாய்விற்கு செயினத்திற் சொல்வது போல் 'அநேகாந்தப்' பன்முனைப் பார்வை கட்டாயந் தேவை. இவ்வளவு நீண்ட பின்புலப் புரிதலோடு 'சங்கத்திற்கு' வருவோம்.

**— 3 —**

'சங்கத்'திற்குச் சங்கதமூலங் காட்டுவதிலுஞ் சிக்கலுண்டு. மோனியர் வில்லியம்சின் படி, அதர்வண வேதம் [அருத்த சாற்றம் (Arthasastra) வேதங்களைத் த்ரயீ என்பதால் அதர்வணக் காலம் பொ.உ.மு. 300க்கு அப்புறமே], மகாபாரதம் [பொ.உ.300/400இல் எழுத்துற்றது. http://en.wikipedia.org/wiki/Mahabharata], பாகவத புராணம் [https://en.wikipedia.org/wiki/Bhagavata_Purana பொ.உ 800-1000. சிலர் ~பொ.உ.600 என்பர்] ஆகியவற்றிற்கு முன்னால் தேடினால் "சங்கத்"திற்குச் சங்கதத்தில் நேரடிப்பொருளில்லை. இருக்குவேத (~பொ.உ.மு.1200) வழியிற் பார்த்தாலும் சுற்றிவளைத்தே பொருள்வரும். ஆயினும், தமிழ் - சங்கதப் பரிமாற்றங்களுக்குச் சங்கத மூலங் காட்டச் சிலர் விழைகிறார்; ஒரே நிலத்து 2 மொழிக்குடும்பங்களிடையே எழுதா வரலாற்றின் முன்னும் சொற்கள் பரிமாறியிருக்கலாமே? அவற்றை எப்படிக் கணக்கிடுவது? எழுத்துப் பயன்பாட்டை மட்டும் வைத்து 'இது இம்மொழி' என்று சொல்ல வலுத்த ஆதாரம் தேவையில்லையா? அவையின்றிச் 'சங்கம்' சங்கதவழி எழுந்து, தமிழிற் கடனென்று சொல்வது எப்படி? 2 மொழிக்குடும்பங்களுக்கும் இது பொதுவாகலாமே?. ஆய்வு வலுப்படும் வரை இதுபோன்ற சொற்களைத் தொகுப்பதைத் தவிர்த்து வேறு ஏதேனும் வழியுண்டா?

தமிழ்வழி பார்த்தால், 'சங்கத்திற்கு' 3 பொருட்களுண்டு. முதலாவது வளைவுப் பொருள். இதன்வழி உருவான சொற்கள்: சங்கு, 9 குபேர நிதிகளுள் ஒன்று, கைவளை, நெற்றி, குரல்வளை, கைக்குழி, கணைக்கால், அழகு ஆகியவை. இரண்டாவது கூட்டப் பொருள். இதன்வழி ஈறாறு கூடுமிடம், ஆறு கடலோடு

கூடுமிடம். சேர்க்கை, அவை, புலவர்கூட்டம், முச்சங்கங்கள், செயின புத்த சங்கங்கள், அன்பு, புணர்ச்சி முதலிய சொற்களமையும். மூன்றாவது கூட்ட நீட்சியான எண்ணிக்கைப் பொருள். இதன்வழி எழுந்தவை: இலக்கங்கோடி, படையிலொரு தொகை என்பன. இனி நெய்தல் வழி வந்த வளைவுப் பொருளைப் பார்ப்போம். சொற்பிறப்பினுள் நேரே செல்லாது, பலவிடங்களிலிருந்து தொகுத்த பழைய நெய்தற் செய்திகளையே முதலிற் சொல்கிறேன். சற்று நீளம்தான். பொறுத்துக் கொள்க!

70000 ஆண்டுகளுக்குமுன் ஆப்பிரிக்காவிலிருந்து அரேபியா, இரான் வழி, பழங்குடி மாந்தர் (Homosapiens Sapiens) இந்தியாவினுள் நுழைந்ததாய் இசுபென்சர் வெல்சின் (Spencer wells) ஈனியலாய்வு சொல்லும். Y குருமிய (Chromosome) அடையாளப்படி இவரை M130 என்பார்; 1,50,000 ஆண்டுகள் முன் இந்தியா நுழைந்த அத்திரம்பாக்க நிமிர்ப்புமாந்தனிலும் (Homo Erectus) இவர் வேறுபட்டவர். ”இந்நெய்தலார் (coastal people) பேசியது தமிழா?” என்பது தெரியாது. ஆனால் உறுதியாக ஏதோவொரு மொழியை இவர் பேசினாரென்றே இற்றை அறிவியல் சொல்கிறது. (தமிழ் இங்கே உருவாகி இருக்கலாம். அதையெல்லாஞ் சொல்லச் சரியான தரவுகள் நம்மிடமில்லை. ஆனாலும் இன்று தமிழ்பேசுவோரின் மரபுகள் பல பழங்குடிக் கூறுகளைக் கொண்டுள்ளது உறுதி.) இந்தியாவுள் நுழைந்து இவர் குமரிசேர்ந்தது ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்குள் இருக்கலாம். இவரிருப்பை உறுதிசெய்யும்படி இற்றைக்கு 35000 ஆண்டுகள் முந்தைய தொல்லியலடையாளம் இலங்கையிற் கிடைத்தது.

இந்தியாவிலும் இவரிருப்பை உறுதிசெய்வதாய், 2001 அக்தோபரில் விழுப்புரம் மாவட்டக் கடற்கரையில் 1 கி.மீ தள்ளிய ’ஓடை’யெனுமூரில் இரும்புக்காரை மத்திகைக்குள் (ferricrete matrix; ferruginous and concrete matrix.-இரும்பு மண்ணூறலும் காரையுஞ்சேர்ந்து கற்காரைபோல் அமையும் மத்திகை) புதைந்துகிடக்கும் குழந்தையின் தலைப்படிமம் (fossil) கிடைத்தது. பாறையுடைத்து, மண்டையோட்டை எடுக்கவியலாக் காரணத்தால் நேராத (indirect) முறையில் ஆய்வுகள் நடந்தன. தலைப்படிமத்தின் காலம் பெரும்பாலும் மீப்பெரும் பனிக்காலத்தின் (Pleistocene epoch) நடுவில் அமையலாமென்றே இவ்வாய்வின் முடிவு சொல்கிறது. அப்படியெனில் ஏறத்தாழ இற்றைக்கு 70,000 ஆண்டுகளுக்கு முந்தைய தலைப்படிமம் இதுவாகும். ஆக ஈனியல் முடிவிற்கும், தொல்லியல் ஆய்விற்கும் முரணில்லை.

இப்பழங்குடிமாந்தரே, ஏறத்தாழ 55000 ஆண்டுகள்முன் (பர்மிய, தாய்லந்திய, கம்போடிய, இந்தொனேசியா சேர்ந்த) சுந்தாலந்து (Sundaland) வழி

உதிரிக்குடும்புகளாய் (100 கி.மீக் கடற்பயணந் தவிர) நடையாய் நகர்ந்து, வடக்கு ஆத்திரேலியாவரை போய்ச்சேர்ந்தார். இவரே இற்றை ஆத்திரேலியப் பழங்குடியாரின் முன்னோராவார். ஒருவகையிற் பார்த்தால் ஈனியல்வழி தமிழருக்கும், ஆத்திரேலியப் பழங்குடிகளுக்கும் பெருத்த உறவுள்ளதாம். (தேனியைச் சேர்ந்த நம்மூர் விருமாண்டி பற்றிப் பலரும் அறிந்திருப்பார்.) இற்றைக்கு 9000 ஆண்டுகள் முன்னுங்கூட ஆத்திரேலியப் பழங்குடிகளுக்கும் தமிழருக்கும் இடையே இரண்டாவது முறை கலப்பு ஏற்பட்டிருக்கலாமென்று அண்மை ஈனியலாய்வுகள் சொல்கின்றன. இதுவரை நம்மூர் அறிவியலார், மொழியியலார் யாரும் இந்த ஆய்வுகளைத் தொட்டுப் பார்க்கவில்லை. குமரிக்கண்டம் என்ற, அறிவியற் சான்றுகள் அதிகமில்லாத, 19ஆம் நூற்றாண்டுத் தேற்றத்திலே ஆழ்ந்துகிடக்கிறார். (நானும் ஒருகாலத்தில் அப்படியிருந்தேன். இப்பொழுது மாற்றுக் கோணத்தை நாடுகிறேன். அழிந்துபோன குமரிநிலம் என்பது வேறுசெய்தி. அது உறுதியாய் நடந்தது.) ஆப்பிரிக்காவில் நெய்தலார் விட்டுவந்த தொடர்புகளையும் எத்தியோப்பியா, சோமாலியா போன்ற இடங்களில் தேடவேண்டும். மாந்தவியல் (anthropology) வழியான ஆய்வுகளும் தொடரவேண்டும்.

அடுத்தசெய்தி இந்தியப்பெருங்கடலின் ஆழம்பற்றியது. 16500 ஆண்டுகள்முன் 130/140 மாத்திரிகள் (metres) கடலாழங்குறைந்து இந்தியக்கடற்கரை இன்னுந்தள்ளிக் கடலுளிருந்தது. வெதணமாற்றத்தில் (climate change) பனிப்பாறைகளுருகிக் கடலுயர்ந்தது. அப்போது சிலவிடங்களிற் கூடவும், சிலவற்றில் குறைந்தும், இந்தியநிலம் அழிந்தது. குமரியின்தெற்கே 250 கி.மீவரை நிலமழிந்ததுண்டு. இதுபோல் கடலுயர்ந்ததால், பழங்குடிமாந்தன் இந்தியத்துணைக்கண்டத்துள் வந்துசேர்ந்த தடயங்கள் பெரிதும் அழிந்துபோய், முன்சொன்ன 'வரலாற்றிற்கு முந்தைய' தமிழக, இலங்கைத் தடயங்கள் தொடர்பின்றி உள்ளன. எண்ணிக்கையிற் கூடுமுன் இந்தியப் பழங்குடிகள் நெடுங்காலம் நெய்தலில் வாழ்ந்திருக்கலாம் என்றே சொல்ல வேண்டியுள்ளது. தவிர, தீவக்குறையின் திணையொழுங்கால் நருமதைக் கழிமுகந் தாண்டித் தெற்கே வந்தால், நெய்தலும், குறிஞ்சியும், முல்லையும் சில அயிரமாத்திரிகள் (கி.மீ.) அகலத்திலேயே நெய்தலையடுத்து இருப்பதால், ஒரு திணையிலிருந்து இன்னொரு திணைக்குத் தாவிப் போதலும், மாறி மாறி நகர்வதும் அவ்வளவு கடினமல்ல. தென்னிந்திய மேற்குக்கரையின் பூகோள அமைப்பு அப்படியிருக்கிறது. இது இயற்கை நமக்குக் கொடுத்த வரம்.

ஒவ்வொரு திணையாக மக்கள் நகர்ந்தாரென இடதுசாரி ஆய்வாளர் சொல்வர். ஆனால் எல்லாத் திணை வாழ்க்கைகளும் சமகாலத்தில் இருந்திருக்கலாமென இப்பொழுது சிந்திக்க வேண்டியுள்ளது. இசுபென்சர் வெல்சின் தேற்றஞ்சொல்லும்

நெய்தல் முகன்மை, (குறிஞ்சி. முல்லை, மருதம், நெய்தலென்று படித்துவளர்ந்த) நம்மூர் ஆய்வாளருக்கு, குறிப்பாகக் குமரிக்கண்டமெனும் ஒருமுனையாருக்கும், வேதம், சங்கதமெனும் மறுமுனையாருக்கும் பேரதிர்ச்சி தரலாம். ஈனியலாய்வை முடிந்தமுடிவாய்க் கொள்ளாவிடினும் அறிவியல் அடிப்படையில் இதைநான் பெரிதாய்க் கருதுவேன். திராவிடமொழியார் 8000 ஆண்டுகள்முன் இரான், பலுச்சித்தான், சிந்துசமவெளி வழி தெற்கே வந்தாரெனும் Dravidian Descent தேற்றத்தை விட Coastal Descent and subsequent Dravidian Ascent எனும் மாற்றுத்தேற்றம் மாந்தவியல், தொல்லியல் தடயங்களுக்குப் பெரிதும் சரியாய்ப் பொருந்துகிறது. இதன் நெளிவு சுழிவுகளையும் என் புரிதலையும் வேறொரு கட்டுரையில் விளக்குவேன்.

ஆயிரமாண்டுகளில் மேற்கிலிருந்து தெற்கு சுற்றிக் கிழக்குக்கடற்கரை வழிநடந்த மாந்த நகர்ச்சியில் நெய்தலாருக்கு கடலோடலோடு கூடிய நெய்தற் பட்டறிவு சிச்சிறிதாய்க் கூடியிருக்கலாம். அதனால், புணை, கலம், ஓடமெனப் பல்வேறு ஏந்துகள் வடிவெடுத்தன. இத்தனை வடிவுகள் இக்கடற்கரைப் பகுதியிலெழ, மேற்சொன்ன திணைகள் அருகிருந்ததும் காரணமாகும். காட்டாய், ஆற்றுக் கழிமுகத்தில் விளையும் கோரைப்புற்கட்டைக் கடலிலிட்டால் மிதந்ததுகண்டு, பிணை>புணை செய்யமுற்பட்டார். [கொடு>கோடு>கோரை எனச் சொல்லெழும். தமிழ்நாட்டிற் பலவிடங்களில் - சென்னைப் பள்ளிக்கரணை, சிதம்பரம்-சீர்காழிவழி கொள்ளிடந்தாண்டிய தைக்கால், திருநெல்வேலி-செங்கோட்டைச் சாலையில் சேரன்மாதேவிக்கு முந்தையப் பத்தமடை- எனப் பலபகுதிகளிற் கோரை செழித்துவளர்கிறது. மேற்குக் கடற்கரையிலும் கோரைகளுண்டு. சிந்தாறு கடலிற் சேருமிடத்திலும் இவை வளர்ந்தன. கனம், கோல், சன்னம், நாணல் எனக் கோரைகளிற் பல விதப்புகளுண்டு. உலோத்தல் போன்ற சிந்துவெளித் துறைமுகத்தில் இதுபோன்ற புணைகள் செய்யப்பட்டிருக்கலாம். நம்மூர்க் கோரைகளை வைத்து ஆழமான ஆய்வுகளும், செய்துபார்த்துப் பிழைதவிர்க்கும் முயற்சிகளும் எழவேண்டும்.]

கோரைக்கட்டுகளைப் பிணைத்தது புணை. அகம் 186-12 இல் கொழுங்கோல் வேழத்துப் புணையை பரணர் சொல்வார். கொழுங்கோல் வேழம்= கொழுத்த கொறுக்கம்புல் தட்டை (கரும்பிற்கும் வேழம் என்றதாற் குழம்புகிறோம் வெள்ளைநார்த் தட்டை வேழமாகும்.) 38 இடங்களுக்கு மேல் புணைபற்றிய சங்கக் குறிப்புகளுண்டு. (எகிப்து, சுமேரியா, சிந்து, அசிரிய, பாபிலோனிய. பொனீசிய, அசுடெக், மாய, இங்க்கா, ஈசுடர்தீவு, பாலினீசியப் பழம்நாகரிகங்களிற் புழங்கிய) கோரைப்புற் கட்டுகளாலான. reed-ship, read boat போன்றதே நம்மூர்ப் புணை. அழகன்குளத்தில் கண்டெடுத்த ஓட்டுச்சில்லிற் கீறிய ஓவியமும் இப்புணையைக்

காட்டியது. மேற்சொன்ன நாடுகளிலெல்லாம் புணைநுட்பியல் தனித்தனியாய் எழ வாய்ப்பில்லை. அதேபொழுது முதலில் எங்கெழுந்தது? அறியோம். இவற்றைக் கட்டும் நுட்பம் இன்று சிலநாடுகளில் மட்டுமே எஞ்சியுள்ளது. எகிப்திய, சுமேரிய, இங்கா சான்றுகளைக் காண்கையில் 100பேர் பயணஞ்செய்யவும், பெருஞ்சுமை கொண்டுசெல்லவும் புணைநுட்பியல் உதவியது புரிகிறது. ஒருகாலத்தில் இவற்றைக்கொண்டு மாந்தர் பெருங்கடலையுங் கடந்திருக்கலாம். இற்றைக்கப்பல் நுட்பியல்கூடப் புணையிலிருந்தே வளர்ந்திருக்கலாம்.

அடுத்தது கல்லப்(=தோண்டப்)பட்ட கலம்/ dug-out canoe. கடற்கரையில் உயர்ந்துவளர்ந்த மரந்தோண்டி உருவாகிய தொள்ளையும், தொண்டலும், தோணியுங்கூடத் ”தோண்டற்” பொருளின. குயவன் தோண்டியதும் தோண்டியே. களிமண்தோண்டிக் குடஞ்செய்யவும், மரந்தோண்டி கலஞ்செய்து நீர்கடக்கவும் முடிந்தது. உண்கலன், கொள்கலன், அணிகலன், படைக்கலன், அறைகலன், மென்கலன் என்று பொருட்பாடு விரிந்தது. கலமென்ற சொல் வளர்நிலையிற் dug-out canoeவை மட்டுங்குறியாது, பல்வகைக் கடலோடங்களைக் குறித்தது. தோணியும், புணையும் கலந்துசெய்த ஓட(raft) நுட்பியல் வந்தது. அதற்கப்புறம் அடித்தண்டோடு (நெஞ்செலும்புகளைப் போன்று) இருபக்கம் மரச்சட்டம் பொருத்திக் குவியும் கூட்டுச்சட்டம் வந்தது. (கூட்டிற்கும் hull ற்கும் சொற்பொருட் தொடர்புண்டு. நம்மூர் சீரை> சீலையே sail ஆனது. கப்பல் நுட்பியல் பற்றிய உலகின் பல்வேறு சொற்களுக்கும் தமிழுக்குமான ஆழ்தொடர்பைப் பாவாணர் சொல்வார்: இச்சொற்களை விரித்தால் அவை தனிக்கட்டுரையாகும்.)

முடிவாக (நெஞ்சாங் கூட்டைத் தசைகளாலும், தோலாலும் மூடுவது போல்) நீர்நுழையாத படி மரப்பலகைகளை இழைத்துப் பொருத்தி, கயிறு, மர ஆணிகளாற் (இரும்பாணிகள் அப்புறம்) கூட்டை மூடி/ கவ்வி/கப்பிச் செய்யும் கப்பல் நுட்பியல் உலகெங்கும் பரவியது (”கப்பல்” என்ற சொல் எழுந்தவகை இப்போது புரிகிறதா?) பொதுவாக மரத்தில் கல்லியதென்றும், விதப்பாக மரச்சட்டங்களின் மேற் கப்புகளை வைத்துமூடும் நுட்பியலாற் கப்பல் செய்யப்பட்டது. குறைக்கொண்மையால் (carrying capacity), மரத்தோணி நுட்பியல் பெரிதும் வளரவில்லை. தமிழருக்கும் கப்பல்நுட்பியலுக்குமான தொடர்பு வரலாற்றில் பலவிடங்களில் வெளிப்பட்டது. பொ.உ.1421 இல் சீனவேந்தர் ஆணையால் உலகைச்சுற்ற முற்பட்ட சீன மாநாய்கன் செங்ஃகோ தன் கலங்களுக்கான ஏவலை (order) கோழிக்கோட்டிற் கொடுத்து, ஓராண்டு அங்கு தங்கி தனக்கு வேண்டியபடி கப்பல்செய்து போனானாம் ஏன் இங்குவந்து கப்பல் செய்யவேண்டும்? திறமை கருதித் தானே? (வாஸ்கோடகாமாவும் இங்கே வந்திறங்கினான்.)

சாலியாற்றங்கரையும் அதனருகு சேரர் தொண்டியும் தெளிந்த கப்பல் நுட்பத்தால் சிறப்புற்றன போலும். (சேரலர்>கேரளர் அப்போது வட்டாரத்தமிழே பேசினார்.) தொண்டி>தோண்டியும், தோணியும், கப்பலுஞ் செய்ததால் தொண்டி என்றபெயர் அத்துறைக்கு ஏற்பட்டிருக்கலாம். (ஒருசிலர் தொள்ளப்பட்ட நிலமெனப் பொருள்கொள்வர். அச்சிந்தனை பொருத்தமில்லாதது.) பல்வேறுவிதமாய் ஆய்ந்து பார்த்தால், சேரரின் பழந்தொண்டி, பெரும்பாலும் கோழிக்கோட்டிற்கு மிக அருகில் இருந்திருக்கலாம். பன்னாட்டுக் கடல்நுட்பக் கலைச்சொற்கள் தமிழ்மூலம் காட்டுமென்று முன்சொன்னேன். (நுட்பந் தெரிந்தோரின் சொல் உலகெங்கும் பரவாதா? இந்தையிரோப்பிய மொழிகளின் "ship" நம் கப்பலோடு s சேர்த்துத் தமிழ்த்தொடர்பு காட்டும். Old English scip "ship, boat," from Proto-Germanic *skipam (cognates: Old Norse, Old Saxon, Old Frisian, Gothic skip, Danish skib, Swedish skepp, Middle Dutch scip, Dutch schip, Old High German skif, German Schiff), "Germanic noun of obscure origin" [Watkins]. Others suggest perhaps originally "tree cut out or hollowed out," and derive it from PIE root *skei- "to cut, split.")

## — 4 —

கப்பல் நுட்பத்திற்கும் நெய்தல் வாழ்க்கைக்குமான இடையாற்றம் ஒருபக்கமிருக்க, கடற்கரைகளிற்கிடக்கும் தொல்பழங் கடலுணவு எச்சங்களின் அகழாய்வுச்செய்திகளை இன்னொரு பக்கம் பார்ப்போம். கடலுணவின் பரிமானம் அகன்றது. .ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவழி ஆத்திரேலியா போய்நகர்ந்த நெய்தலார் ஆயிரமாயிரம் ஆண்டுகள் முதலுயிரி (Protozoa), புரையுடலி (Porifera), குழிக்குடலி (Coelentterata), மெல்லுடலி (Mollusca), கணுக்காலி (Arthropoda), தண்டுடை (Chordata) ஆகிய பொலியங்களைச் சேர்ந்த பல்வேறு உயிரிகளையுண்டார். (Phylum; பொலிதல்=தோன்றிமிகுதல். கணமும் பொலியமும் ஒரேபொருளன.) இவற்றில்தான் மீன், நண்டு, இறால், கடல்நத்தை போன்ற உயிரிகளுண்டு.

கடல் நத்தைகளும் நில நத்தைகள் போன்று முதுகிற் கூடுகளைக் கொண்டவை [அகட்டுக்காலி (gastropoda; அகடு=வயிறு) வகுப்பிலுள்ள நிலநத்தைகள் தம் வயிற்றையே கால்போல் ஆக்கி முன்தள்ளி நகர்வதால் நத்தைப்பெயர் ஏற்பட்டது. நுந்துவது தமிழில் முன்தள்ளைக் குறிக்கும். ) இவற்றின் கூடுகள் வீடுகளாய்த் தோற்றமளிக்கும். மெல்லுடலி வகையில் துருவலைக்(Turbinella) குடும்பஞ் சேர்ந்த துருவலைப் புருவமெனும் (Turbinella pyrum) கடல்நத்தையும் (sea snail with a gill and an operculum, a marine gastropod mollusk in the family Turbinellidae. இதையே சங்குயிரி என்கிறோம்), இன்னும் நால்வேறு கடல்நத்தைகளும்

(நத்திலிகள் எனும் nautilusகள் அவற்றிலொரு வகை) கூடவே இறாலும் தென்னிந்தியக் கடற்கரையில், குறிப்பாகத் தமிழகத்தில், இணைந்தே வளர்கின்றன.

இந்தியாவில் கச்சு (130கி.மீ நீளம்), கேரளம் (65கி.மீ), தமிழகம் (720கி.மீ), ஆந்திரம் (கோதாவரிக் கழிமுகம்) வரை சங்குயிரி வளர்கிறது. (ஆந்திரத்தில் சங்குயிரியின் வளர்ச்சி குறைந்தது.) குறிப்பாக, வழுவழுப்பான, ஆழமில்லாத, வண்டல்கலந்த கடல்மணற்பகுதியில் (கடலுள் ஏறத்தாழ 16 கி.மீ அகலம்வரை), பவளப்பாறை/கடற்பாசிப் பகுதிகளில் சங்குயிரி வளர்கிறது. கடந்த 5000 ஆண்டுகளில் மேற்சொன்ன பகுதிகள் தவிர்த்து வேறிடங்களில் இது வளர்வதாய்த் தெரியவில்லை. கடலிற் கரைந்த உப்புச் சுண்ணாம்பே திரைந்துபோய் பீங்கான் படிகமாகிச் சுரித்துச் சங்குக்கூடாகிறது. The shell surface is strong, hard, shiny, and somewhat translucent, like porcelain. இந்தச் சங்குக்கூடுகளும், சிப்பிகளும், கிளிஞ்சல்களுமே நெய்தற்பகுதியில் சுண்ணாம்புத் தேவைக்கான இயல்பொருட்கள் ஆகும்.

2 பரிமானத்தில் புரிச்சுருவை (spiral curve) எப்படியமையுமோ, அதுபோல் முப்பரிமானத்தில் 3 சங்குப்புரிகள் ஒன்றிற்குள் இன்னொன்றாயமையும். நத்தை, புரிகளுள் பதுங்குவதும் வெளிவருவதுமாய் தன் சேமத்தை (safety) நிலைநிறுத்திக் கொள்ளும் .(கடல்நந்தையின் குறுக்குவெட்டைப் புரி>spiral என்பார். தோற்றம் புரியாது நாமும் ஆங்கிலச்சொல் கையாளுவோம்.) சங்கில் இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், ஐஞ்சுன்னமென 4 வகையுண்டு. புரியும் சலமும் (சுல்>சல்>சலம்), சுன்னமும் (சுல்+நம்=சுன்னம்) சுற்று, சுரி, சுழிகளைக் குறிக்கும். (சொற்பிறப்புத் தெரியாது சிலர் சலஞ்சலம், ஐஞ்சுன்னத்தைச் சங்கதம் என்பார். ஐஞ்சுன்னத்தைப் பாஞ்சசன்யமெனச் சங்கதத்தில் மொழிபெயர்ப்பார்.)



புரி/புரியத்திற்கே (pyrum) சங்குப்பொருளுண்டு. (கடிகைச் சுற்றாய்) வலமிருந்து இடமாகப் புரிகளெழுந்தால் இடம்புரியென்றும். (எதிர்க்கடிகைச் சுற்றாய்) வலமெழுந்தால் வலம்புரியென்றுஞ் சொல்வர். இடம்புரிகளே எளிதிற் கிட்டும். பெருதகைப் (Probability) படி, 1000 இடம்புரிகளுக்கு 1 வலம்புரி கிட்டும். (ஒரு வலம்புரிக்கு 1000 இடம்புரி விலையுண்டு.) சலம்புரி = சங்கு. சலம் = நீர்வட்டம்; முத்துக்குளிக்கும் துறை. சலஞ்சலம் 4 புரிகளானது; வலம்புரியினும் அரிது. 1000 வலம்புரிகளுக்கு 1 சலஞ்சலம் கிட்டும். 5 புரிகள் கொண்ட ஐஞ்சுன்னம் இன்னும் அரிது. 1000 சலஞ்சலங்களுக்கு 1 ஐஞ்சுன்னம் கிட்டுமாம். சலஞ்சலம், ஐஞ்சுன்னம் இன்று கிடைப்பதாய் யாருங் கூறுவதில்லை.

கம்பு>கம்புள், கவடு>கோடு, சுரிமுகம், நத்து>நத்தை, நந்து>நந்தம், நாகு, பணிலம், வளை போன்ற சொற்களும் சங்கைக்குறித்தன. கொற்கையருகே கடலுளழிந்த, சங்குநிறையக் கிடைத்தவூர் கவாடபுரம் ஆகும். (மேற்குறித்த இலக்கியச் சொற்கள் பேச்சுவழக்கின்றி சங்கே இன்று வழக்குள்ளது.) ”விளங்குகொடி நந்தின் வீங்கிசை” என்ற சிலம்பு 26:203 வரியால் நந்தென்ற சொல் சங்கிற்கு இணையாய்ப் பயன்பட்டதும், சங்கோசை தமிழர்வாழ்வில் இருந்ததும் விளங்கும். நுகும் (முன்தள்ளும்) வினை, நுகு>நுகல்>நகலென விரியும். நகல்தல் நகர்தலாகி move ற்கு இணையாய்ப் பயன்படுத்துகிறோம். நகலும் உயிரி நகலியாகும். நாகு>நாவு>நாவாய் = துடுப்பால் முன்தள்ளும் கப்பல். நாகுதல்>நாவுதலை ஒட்டிப் பல சொற்கள் தமிழிலுள்ளன. அவற்றை இங்கு விரிக்கின் பெருகும்.

ஆங்கில snail என்பது நகலியின் திரிவே. snail (n.) Old English snægl, from Proto-Germanic *snagila (source also of Old Saxon snegil, Old Norse snigill, Danish snegl, Swedish snigel, Middle High German snegel, dialectal German Schnegel, Old High German snecko, German Schnecke "snail"), from *snog-, variant of PIE root *sneg-"to crawl, creep; creeping thing" (see snake (n.)). The word essentially is a diminutive form of Old English snaca "snake," which literally means "creeping thing." Also formerly used of slugs. Symbolic of slowness since at least c. 1000; snail's pace is attested from c. 1400.

வளர்ச்சிபெறாச் சங்குகளைச் சங்குப்பூக்களென்றும் இளநாடுகளென்றுஞ் சொல்வர். கடல்நீரில் முக்குளித்துச் சங்குபரட்டி எடுத்துவருவது சலம்பல்>சலப்பலாகும். சலம்புமிடம் சலாபம். பரந்து கிடக்கும் சங்கு, முத்து விளையிடங்கள் ”பார்” என்றுஞ் சொல்லப்படும். கடல்நத்தைக் கறியை அதன் மென்தசை காரணமாய்ப் பச்சையாகவும், சமைத்துஞ் சாப்பிடுவர். மிஞ்சும் கழிவுகளும், கடல்தாவர வழிப் பெற்ற பொருள்களுமான சங்கு, மீனெலும்புகள்,

பல்வேறு உயிரியோடுகள், சிப்பிகள், கிளிஞ்சல்கள், முத்து, பவளம், போன்ற பொருள்களையும் தூக்கிப் போடாது, செய்துபார்த்துத் பிழைதவிர்க்கும் (trial and error) முறையில் படைக்கலன், உண்கலன், கொள்கலன், அணிகலனெனப் புதுப்பயன் வடிவுகொண்ட பொருள்களை பழங்குடிமாந்தர் செய்தார்.

அப்படிச் செய்ததின் முதற்படியாக்கமே, ஓய்வுநேரத்தில் சங்கின் உச்சிவழி துளையிட்டு [by cutting a hole in the spire of the shell near the apex] ஓசையெழுப்பி மற்றோரை அழைத்ததாகும். இன்றும் நாட்டுப்புற வாழ்வில், பிறப்பு, திருமண, பிறவிழா, இறப்பு நிகழ்வுகளில் மற்றோரையழைக்கச் சங்கு பயன்படும். பழங்காலக் குடியிருப்புகளில் நாட்டுப்புறங்களில் 6 மணிக்குச் சங்கூதுவதும் உண்டு. இன்றும் பலவூர்களில் மின்சங்கூதுவர். (தமிழரோடு ஈனியலுறவுகொண்ட ஆத்திரேலியப்பழங்குடிகளின் நடுவிலும் சங்கூதும் பழக்கமுண்டு.) ஒரு காலத்தில் கப்பலோட்டத்திலும் ஒருங்குமுயற்சிக்குக் கடலோடிகளை அழைக்கச் சங்கே பயன்பட்டது. போர்தொடங்கவும் சங்கே பயன்பட்டது. இற்றை வீளைக்கு (whistle) மாறாய்ச் சங்கு பயனாகியது. ”சங்கே முழங்கு” என்ற கூவல் வெற்றானதல்ல.

நெய்தல்வாழ்க்கையிற் சங்கு மட்டுமல்ல முத்தும் பவளமுங்கூடக் கிடைத்தன. சிப்பியில் மட்டுமின்றி, கடல்நத்தை போன்ற மெல்லுடலிகளிலும் முத்து பிறக்கும். இவ்வுயிரிகளுக்குள் ஒரு நுண் குருணை புகுந்து உறுத்துகையில் உமிழ்நீர்சுரந்து குறுணைமேல் தொடர்ந்துபடிந்து சுண்ணாம்புப்படிகமாகி உருள்முத்தாய் (முள்>முட்டு>முத்து) மாறி வளரும். மு>நு திரிவில் முத்தை நுத்தென்றுஞ் சொல்வர். நுத்து> நித்து>நித்தில் ஆகும். வரலாற்றுவளர்ச்சியில் நித்தில்>நிதில்>நிதியாகிச் செல்வத்தைக் குறித்தது. அக்காலத்தில் முத்தே சங்க நிதியானது. (பாண்டியர்க்குப் பெரிதாயும் சேரர்க்குச் சிறிதாயுங் கிடைத்தது.) பவளம் பதுமநிதி ஆயிற்று. (சோழநாட்டில் பவளம் அதிகம் கிடைத்தது.) கடலிற் சோழி/கவரி/கவறு போன்றவையே 3 நாடுகளிலும் சிறுநாணயங்களாயின. மாழை கிடைத்து நாணயம் அச்சடித்தது நெடுநாட்கள் கழித்தேயாகும். (நாணயம் என்ற சிந்தனைகூட நெய்தலில் தொடங்கியிருக்கலாம்.) இதுபோக மேற்குத்தொடர்ச்சி மலையின் கிழக்குச் சாரலில் பல்வேறு வகைக் கனிமங்கள் கிடைத்த கதை இன்னும் பெரியது. (பாண்டியர்/சேரரின்) முத்து, (சோழரின்) பவளம், (கொங்கின்) மணிகள், (கோலாரின்) தங்கம், (சேர்வராய மலையின்) கனிமமெனத் தமிழகத்தில் வளமான பொருளியல் வளர எல்லா வாய்ப்புக்களும் அமைந்தன. நாகரிகம் எழுமளவிற்குப் பழங்குடி மாந்தர் இங்கேயே நெடுங்காலம் தங்கியிருந்தார். ஆனால் நாகரிகம் என்றெழுந்தது என்பது சரியாய்த் தெரியாது.

நெய்தல் நாகரிகம் படிப்படியாக வளர்ந்து மற்ற திணைகளுக்கும் பரவியது. பெருத்த ஆமையோடே குடிசைக் கவிப்பாயிற்று. பெருமீன்களின் தோல்கள் பல்வேறு ஆடைகளுக்குப் பயன்பட்டன. கடற் பாசிகள் சாப்பாட்டிற் சேர்ந்தன. பெருமீனின் விலாவெலும்பைத் தூக்கி எறிந்தால் சக்கரம்போற் சுழலும் வளைதடியானது. (மாலவன் கைச் சக்கரமென்றவுடன் ஓவியர் கொண்டையராஜு வரைந்த சக்கரப் படிமையை நம்மிற் பலரும் எண்ணிக்கொள்கிறோம். ஆய்வுநோக்கிற் பார்த்தால், கடிதோச்சி மெல்ல எறியும் கைக்கு வாகாயும், தூக்கியெறிந்தால் பார்ப்போருக்குச் சக்கரம்போல் தோற்றந்தருவதும் வளைதடியே. இவ்வியலுமையை யாரும் எண்ணாதுள்ளோம். பெருமாளின் கைச்சக்கரம், பெரும்பாலும் வளைதடியாக இருக்கலாம்.) பெருத்த எலும்புகளே நெய்தலிற் குண்டாந்தடிகளாயின. ஈட்டிகளும் சூலங்களும் எலும்பின் ஒடிப்பாலும் கல்லுடைப்பதாலும் பெறப்பட்டன. வாள்தவிர்த்து நம்மூரில் சொல்லப்பட்ட எல்லாக் கொலைக்கருவிகளுக்கும் முதன்மை இயல்பொருள் (raw material) எலும்பாக இருந்ததிருக்கலாம். கல்லையும், இரும்பையும் பின்னர் பழகியிருக்கலாம்.

நெய்தல் நாகரிகத்திற் கிளைத்த அடுத்த ஆயுதம் வில்லாகும். பெருமீன்களின் (ஒல்லியான) மார்பெலும்புகளை (கற்றாழைக்கயிறு போன்ற) நரற்கயிற்றாற்கட்டி கல்முனை அம்புகளைப் பொருத்தி இதைச் செய்திருக்கலாம். எளிதிலொடியும் இவ்வகை வில்களிலிருந்து சிலகாலங்கழித்து ஆற்றுக்கழிமுகங்களில் வளரும் பிரம்புத்தடியால் (Calamus rotang; முன்கூறிய பள்ளிக்கரணை, தைக்கால், பத்தமடை போன்றவற்றில் இதுவும் வளர்கிறது. கேரளத்திலும் வளரலாம்.) புதுவகை வில்களைச்செய்தார்; இன்னுங்காலஞ்செல்ல மலையில்வளரும் திண்மூங்கில்கள் (solid banboos; கேரளம்/தமிழ்நாடு எல்லையில் உள்ள ஆனைமுடியில் வளரும் Arundinaria densifolia and Arundinaria walkeriana. எல்லா மூங்கில்களும் திண்மூங்கில்கள் அல்ல. பல மூங்கில்களின் கணுக்கள் (nodes) கூடானவை) கொண்டுசெய்தார்.

மேலுங் காலங்கழித்து ஞெமை (Anogeissus latifolia. இதற்கு Dhavala என்ற சங்கதப் பெயருண்டு.) மரக்கிளைகளை நேராக்கிச் செய்தார். (சங்கநூல்களில் 9 வெள்ஞெமைக் குறிப்புகளுண்டு). அடுத்து வில்லைச் செய்யக் குங்கிலியமரத்திற்கும் (Shorea robusta. இதை யா/ஆச்சாவோடு சிலர்குழப்புவர். யா/ஆச்சா = Hardwickia binata) தாவினார். தெற்கே குங்கிலியம் வளர வாய்ப்புக் குறைவு. வடக்கு வணிகத்திற்றான் அது வரவேண்டும். வடக்கிலிதைச் சாலமரமென்பார். மகதத்தின் வடபகுதிகளில் நன்றாகவே வளர்ந்தது.) முடிவில் உள்ளூர் வெண்மருதிற்கும் (Terminalia arjuna; சங்கதத்தில் Kukubha என்பர்) வந்துசேர்ந்தார். நெய்தலையொட்டி மற்ற திணைகளில் இத்தனையும் கிடைத்த

காரணத்தால், எண்ணிக்கை கூடுமளவிற்கு நெய்தலில் பழங்குடிகள் நெடுநாள் வாழ்ந்திருக்கலாம்.

கத்தி/வாள் எனும் ஆயுதம் நெடுநாட் கழித்து, இரும்பைக் கண்டுபிடித்த பின்னர் முல்லைவாழ்க்கையில் நுழைந்தபின் எழுந்து குமுகமாற்றத்திற்குக் காரணமானதுபோல் தெரிகிறது. (செம்பு சிலவிடங்களிற் கிடைத்தது. செம்புக்குப் பின்தான் இரும்பு வந்ததென்பது தமிழகத்தைப் பொருத்தவரை ஒருவகை வறட்டுவாதமே. இக்காலத் தொல்லியலார் பலருமிதைக் கேள்வி கேட்கிறார்). ஆயுதங்கள் போக, பேச்சிற்குப்பின் எழுந்த எழுத்தையும் கூட நெய்தல் நிலத்தாரே முதலிற் பழகியிருக்கலாம். (எல்லாமே குறிஞ்சி என்பதை நாம் கேள்விகேட்க வேண்டும்.) தாழை, கடற்கரைப் பனையோலை வழியாகப் எழுத்துப்பழகுவதற்கும் நெய்தலில் வழிகளுண்டு. இவ்வளவு தொலைவு நான்சொல்லக் காரணம் நெய்தல்நிலத்தாரை வெறும் மீனவரென நம்மிற்பலர் குறைத்துமதிப்பிடுவதே. குறிஞ்சி/முல்லை/.மருதத்தின் பெருமையே நம்மூரில் பலவிடங்களில் பேசப்படுகின்றன. ஆனால், நெய்தலின் இயலுமையைக் காணும் மாற்றுக்கோணம் ஏன் உண்மையாய் இருக்கக்கூடாது?

## — 5 —

இனிச் சங்கென்ற சொல்லின் சொற்பிறப்பிற்கு வருவோம். வரலாற்றுக் கண்ணோட்டத்திற் பார்த்தால் சங்கின் வளைவுப் பொருளே முதலிலெழ வாய்ப்புண்டு. வளைவுப்பொருள் கொண்ட சுல்லெனும் வேர்ச்சொல்லில் கிளைத்த நூற்றுக்கணக்கான சொற்களை இன்றும் நாம் பயன்படுத்துகிறோம். சுல்>சுள்>சுழி, சுழி>சுரிதல்>சுரித்தல்; சுரிகுழல், சுரிகை, சுரிதகம், சுரிந்து, சுரிப்புறம்=சங்கு, நத்தை, சுரிமுகம்= சுழித்தமுகமுடைய சங்கு, சுரிகுழல், சுரியாணி, சுருங்கு, சுருக்கு, சுருட்டு, சுருணை, சுருள், சுலவுதல், சுழல், சுளுக்கு, சுறட்டுக் கோல், சுறு> சுற்று> சுத்து எனப் பல சொற்கள் நினைவிற்கு வருகின்றன. சங்கையும் அதன் தொடர்பான சக்கு, சக்கரம், சகடம் தவிர்த்த மற்றவற்றை இங்கு நான் விளக்கவில்லை. அப்படிச்செய்தால் கட்டுரை நீளும்.

சுல்க்கு> *சல்க்கு> சக்கு என்பது வட்டப் பொருளையும், உருண்டைப் பொருளையுந் தரும். சக்கு>செக்கு= வட்டமாய்ச் சுற்றி எள்நெய் பிழிவிக்கும் இயந்திரம். (அகரச்சொற்கள் எகரத்தில் தெரிவது பல சொற்களில் நடந்துள்ளது. பரு>பெரு.) வட்டப் பொருளே இச்சொல்லில் முகன்மை. வட்டமாய்ப் பூக்கும் பூஞ்சாளம்/பூஞ்சணமும், உருண்டைக்கண்ணும் சக்கெனப்படும். (முகத்தின்வழி பார்ப்பதற்குக் கண், மீன்போல் தோற்றமளித்தாலும், கண்ணுறுப்பைத் தனியே

எடுத்துப் பார்த்தால் அது உருண்டையே.) சக்கான பலாப்பழம் சக்கைப்பழம். மலையாளத்தில் இதுவே பரவலாய்ப் புழங்கும். (நீளுருண்டை ஆயினும் சக்கையின் பெயர் அப்படித்தான்.) குண்டுமுல்லை சக்கைமுல்லை எனப்படும். உடல்வலியற்றுக் குண்டாய்ப் பருத்தவன் சக்கையன் எனப்படுவான். (யாழ்ப்பாண அகராதி). உருண்டையில் இருந்து மிகுதிப் பொருள் வரும். "மழை சக்கையாய்ப் பெய்கிறது."

சக்கிற் பெரியது சக்கம். இதற்கும் வட்டப் பொருளுண்டு. சக்கத்தின் நீட்சி சக்கடம். சக்கடவண்டி என்பது மேற்கூடில்லாத கட்டைவண்டி. நாட்டுப்புறங்களில் வேளாண் ஊடாக இன்றும் சக்கடவண்டி புழங்குகிறார். சக்கடவண்டி சக்கரவண்டியாகவும் திரியும். சக்கரத்தைச் சங்கதம் உள்வாங்கிச் சக்ரமாக்கும். (சக்ரமே முதலென்போர், மேலே சொன்ன மற்றசொற்களை ஒதுக்கிவிடுகிறார். சிக்கலே இங்கு தான் உள்ளது. வெறுமே ஒற்றைச்சொல்லைப் பார்த்து முன்னுரிமைகளைச் சொல்லமுடியாது. மொத்தக் கூட்டத்தையும் பார்த்தே சொல்ல வேண்டி யுள்ளது. அதனாற்றான் இராம.கி.யின் கட்டுரைகள் நீளமாயுள்ளன.) சக்கு>சக்கம்>சக்கடம்>சக்கரம்>சக்ரம். சக்கடமிருந்தால் "*சக்கடு" இருந்திருக்கலாம். ஆனால் அதன்பயன்பாடு நமக்குத் தெரியவில்லை. அதன்தொகுதியான சகடும், சகடமும் "சக்கரம், வண்டி"யென்ற பொருட்பாடுகளில் இன்றும் பயிலப்படுகின்றன. சக்கு>*சக்கடு>சகடு>சகடம். அம் ஈற்றிற்கு மாறாய் ஐ எனும் ஈற்றைச்சேர்த்து சகடை என்ற சொல் உருவாகி, வண்டியைக் குறித்தது.

[சகடு-சகடை-சகடம் என்ற சொல்லிணை போலவே உருள்-உருளி-உருளம் என்ற இணையுமுண்டு. இங்கும் முதற்சொல் சக்கரத்தையும், 2,3 ஆம் சொற்கள் வண்டியையும் குறித்தன. எப்படிச் சோளம்> சோழம் என்பது தெலுங்கில்போய் டகரம் ஆகி (சோடம்; தெலுங்குச் சோடர்) இன்னும் வடக்கேபோய்த் தகரமாய்த் திரிகிறதோ, அதுபோல் உருளம்>உருடம்>(உ)ருதம் என்றாகி உகரவொலி மறைந்து அகரவொலியேறி ரதமாகும். (தமிழரில்பலரும் ரதமும் தேரும் வேறானவை என்றெண்ணுகிறார். இரண்டும் ஒருபொருட்சொற்கள் தாம்.) ரதத்தை ஒட்டி இந்தையிரோப்பியச் சொற்கள் பலவிருக்கின்றன. இன்னும்பார்க்கின், சக்கரத்திற்கும் மேலைமொழிகளின் chariot, car க்குங்கூட ஆழ்தொடர்புண்டு. (மூலந்தெரியாது சிந்தனை மயங்கிய நிலையில், முரணைப் பேசாது, car ஐச் சகடை/சகடம் என்றழைக்க நம்மில் எத்தனைபேர் முன்வருவர்? மரபோடு இவற்றைப் பொருத்தாவிடின், சுற்றிவளைத்துக் காலகாலமும் மகிழுந்தைப் புழங்கவேண்டியதுதான்; அன்றேல் காரைக் கடன்வாங்கி எழுதவேண்டியதுதான்.]

சக்கின் மெல்லோசைச் சொல் சங்கு. சங்கிற் பெரியது சங்கம். சக்கு>சங்கு>சங்கம். வடிவியலில் 360 பாகையில் சுற்றிவரும் போது ஒரே நீள ஆரங் கொண்டிருந்தாற் கிடைக்கும் வடிவம் வட்டமாகும். சக்கரம் வட்டவடிவம். இதில் வளைச்செலுத்தம் (turning process) மட்டும் நடைபெறுகிறது. மாறாக ஒவ்வொரு பாகைக்கும் வளைச்செலுத்தமொடு ஆரநீளமும் சீராகக் கூடுமெனில், வளைச்செலுத்தம்+ ஆரநீட்டம் ஆகிய செலுத்தங்களால் புரிச்சுருவை (spiral curve) உருவாகும். சங்கு என்பது முப்பரிமானப் புரிச்சுற்றில் எழுந்தது. அடிப்படையில் வட்டம், மூடிய சுற்று. புரிச்சுருவையோ மூடாச் சுற்று. உயிரியலில் சங்குயிரியின் அஃகில்நெக்காடியைப் (DNA; Deoxytibo Nucleic Acid/ அஃகிலரப நெற்றுக் காடி) பொறுத்து, இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், ஐஞ்சுன்னம் என்று பல்வேறு வகைச் சங்குகள் விளையும். நம் விரலிற் காணும் வரிகளில் [வரிகையே சங்கதத்தில் (வ்)ரேகையானது.] கூட ஒருவகை சங்காயும். இன்னொன்று சக்கரமாயும் அமையலாம்.

இதுவரை சங்கின் வளைப்பொருள் பார்த்தோம். குபேரநிதிகளைச் சேர்ந்த சங்கநிதி (முத்து), பவளநிதியும் சங்கோடு தொடர்புற்றவை தான். சங்கை அறுத்துப்பெற்ற கைவளையும், சங்கு போல் வளைவு கொண்ட நெற்றியும், சங்கைப் போல் ஓசையெழுப்பும் துளைகொண்ட குரல்வளையும், சங்கு போல் வலக்கை, இடக்கைகளைப் பிடித்துக்காட்டுவதால் அமையும் உள்ளடங்கிய கைக்குழியும், காலிற் சங்கு பொருத்தியதுபோல் அமையும் கணைக்காலும் என எல்லாமே சங்கோடு மரபு வரிதியாய்த் தொடர்புற்றன. முடிவில் அழகெனும் பொருளும் சங்கின் வெண்மை கருதி ஏற்பட்டது. சங்கு நிறையக் கிடைத்த இடங்களில் நிலவிய வட்டார மொழிச்சொல் இந்தியா எங்கணும் பரவி நிலைக்குமா? சங்கதப்பெயர் நிலைக்குமா? சங்கு தமிழில்லையென்பது எப்படிச் சரியாகும்? கடலை விட்டுப் பெரிதும் தள்ளிவளர்ந்த, படித்தவரிடையே மட்டுமிருந்த, சங்கதத்திலா "சங்கென்று" பெயரிடுவார்? இனிச் சங்கு பற்றிய, பொ.உ. 6 ஆம் நூற்றாண்டிற்கு முந்தைய, இலக்கியச் சொல்லாட்சிகளைப் பார்ப்போம்..

**பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணாது**
**இருங்கடன் மூழ்குவார் தங்கை - இருங்கடலுள்**
**முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே**
**ஒத்தனம் யாமே யுளம்.**

என்ற கணிமேதாவியாரின் திணைமாலை நூற்றைம்பதில் 33.ஆம் பாடலே நானறிந்தவரை சங்கின் நேரடிப் பயன்பாட்டிற்கு முதற்சான்று. சிலப்பதிகாரத்தின்

காலம் பொ.உ.மு.75 என்று என்' சிலம்பின் காலம்" நூலில் நிறுவினேன். அதில், "பகையணங்காழியும் பால்வெண்சங்கமும், பணில வெண்குடை" என்று வரும் (11:43). சிலம்பு பொ.உ. 5 ஆம் நூற்றாண்டென்பதை நான் ஒப்புவதில்லை.

**"தத்துநீர் அடைகரைச் சங்கு உழு தொடுப்பின்**
**முத்துவிளை கழனி முரிசெம் பவளமொடு"**

**என்ற பொ.உ.400 களைச் சேர்ந்த மணிமேகலையின் 8: 3-4 ஆம் வரிகள் சங்கின் தொடர் பயன்பாட்டை உறுதிசெய்யும்.**

**'சங்கறுப்ப தெங்கள் குலஞ்சங் கரர்க்கங் கேதுகுலம்**
**பங்கமுறச் சொன்னால் பழுதாமோ - சங்கை**
**அரிந்துண்டு வாழ்வோம் அரனாரைப் போல**
**இரந்துண்டு வாழோ மினி'**

என்பது நக்கீரர் பாடியதாகச் சொல்லப்படும் பாடல். இதன்காலம் தெரியாது. பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானுக்கும் சங்கரனெனும் பெயருண்டு. ஏனையக்கடவுளர் எதோவொரு தாய் வயிற்றில் பிறந்தவராம். பிறவாயாக்கைப் பெரியோனுக்குக் குலமில்லையாம். சுடலைப்பொடி பூசிப் 'பிச்சாஞ்தேகி'யாகிக் கபாலத்தில் பிச்சையெடுத்து உண்பதாகப் புராணங்கள் சொல்லும். நக்கீரர் பின்னிரண்டு அடிகளில் சிவனின் இரந்துண்டுவாழும் செயலைக் குறிப்பிட்டு "நாங்கள் சங்கை அரிந்துண்டு வாழ்வோமேயன்றி உம்போல் இரந்துண்டு வாழோமெ"னச் சொன்னதாய் இப்பாடல் கூறும்.

**— 6 —**

70000 ஆண்டுப் பழங்குடிகளின் மிச்சசொச்சமாய்த் தமிழர் இருந்திருக்கலாம் என்று எண்ணுவதற்கு இன்றுமுள்ள சங்குப்பயன்பாடும் விளக்கங்களும் ஒரு காரணமாகும். கூட்டம் பெரிதானபின், சங்கின் பயன்பாடு ஓசையெழுப்புவதற்குப் பயன்பட்டிருக்கலாம். ஒருவேளை கூட்டக்கருத்தே கூட இதன்வழி தான் எழுந்ததோ, என்னவோ?. விரைந்த நகரவாழ்வில் இன்றிது அரிதாகினும், தென்பாண்டியின் நாட்டுப்புற வீடுகளில் பொங்கல் நாளில் தங்கள் வீட்டிற் "பால் பொங்குவதைச்" ஊராருக்குத் தெரிவிக்கச் சங்குமுழங்குவது நம்மைச் சிந்திக்க வைக்கிறது. ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்குக் குறுஞ்செய்தி தெரிவிக்கச் சங்கூதுவதும் முரசறைவதும் வெள்ளைக்காரன்காலம் வரையிலும் இங்கிருந்த பழக்கம். கட்டபொம்மன் காலையுணவு அருந்துமுன் திருச்செந்தூரில் முருகனுக்கு

பூசையாயிற்றா என்று நாளும் அறிய விழைவானாம். ஒரு கல்லிற்கு ஒருக்காய் செந்தூரிலிருந்து பாஞ்சாலங்குறிச்சிக்கு முரசறைவித்துச் சங்கும் ஊதுவராம். இது போன்ற செயற்பாடுகள் தமிழகத்தில் ஏராளம். "குழந்தை பிறந்தபோது ஊதப்படும் முதற் சங்கம், திருமணத்தின்போது ஊதப்படும் இரண்டாஞ் சங்கம், வாழ்நாள் முடிகையில் ஊதப்படும் மூன்றாஞ் சங்கம்" பற்றிப் பட்டினத்தார் பாடுவார்.

**முதற்சங் கமுதூட்டும்; மொய்குழலார் தம்மை**
**நடுச்சங்கம் நல்விலங்கு பூட்டும் - கடைச்சங்கம்**
**ஆம்போ ததுவூதும்; அம்மட்டோ? இம்மட்டோ?**
**நாம்பூமி வாழ்ந்த தலம்.**

இதுபோன்ற செயல்கள் வழக்கிலிருந்தவை தாம். பிறந்த பிள்ளைக்கு சங்கின்வழி மருந்தூட்டுவதும் கூட அண்மைக்காலம் வரை நாட்டுப்புறங்களிலிருந்த பழக்கமே. நெய்தலிலிருந்து மற்ற திணைகளுக்கு இதுபோன்ற சங்குப் பயன்பாடுகள் விரிந்தன போலும். ஆனால் சங்கின் கூட்டப்பொருள் சொற்பிறப்பின்வழி ஏற்பட்டதாவென்பது வேறுகேள்வி. அடிப்படையில் இரு வேறு சொற்பிறப்பில் உருவாகி ஒரே மாதிரி ஒலிக்குஞ் சொற்களாகவே இவை தோன்றுகின்றன. விரிவாய்ப் பார்ப்போம்.

உம்முதலெனில் பொருந்துதல், கூடுதலென்று பொருள் கொள்ளும். "அவனும் நானும், இனியனுமாய் பள்ளிக்கூடம் சென்றோம்." இங்கே உம் எனும் உருபு கூட்டப்பொருளைக் குறிக்கிறது. உம்>அம் என்றாகி, அம்முதலுங் கூடப் பொருந்தலைக் குறிக்கும். அம்>அமை; அமைதல் = பொருந்தல். தெலுங்கில் அம்முதல் என்பது "ஒருபொருளின் மதிப்பில் உடன்பட்டு விற்றல்" என்று பொருள்கொள்ளும். அம்முதலில் வந்ததே தமிழிலுள்ள சிறப்புச்சொல்லான அங்காடி. தெலுங்குச்சொல் தெரியாது போயிருந்தால், அங்காடி எப்படி வந்ததென நமக்குத் தெரியாமலே இருக்கும். உம்முதலின் முன்னே சகரம் சேர்த்தமையலாம். சும்>சும்மை என்பது மிகுதியைக் குறிக்கும். சும்மைக்கு முந்திய 'சும்முதல்' எனும் வினைச்சொல் (கும்முதலைப் போல்) மிகுத்தலைக் குறித்திருக்க வேண்டும். [மிகுத்தலில் இருந்து கூட்டப்பொருளும் பருத்தற் பொருளும் இயல்பாக வரும்.] சும்முதல் தொடர்பான பெயர்ச் சொற்களைப் பதிந்த அகரமுதலிகள் வினைச்சொல்லைப் பதிவாக்கவில்லை. வியப்புறுகிறோம்.] சும்மையொட்டி, சுமை, சுமடு, சும்மாடு, சுமத்தலென்று பல்வேறு சொற்களும் அகரமுதலிகளிற் பதிவாகியுள்ளன.

சம் என்ற சொல்லிலிருந்து சமமென்ற சொல்லுமெழும். சமம்போன்ற அடிப்படைச் சொல்லைத் தமிழ் கடன் வாங்கியிருக்க வழியில்லை. சம்முதல், சமத்தல், சமலுதல் = ஒன்றைப் போல் இன்னொன்றாய் ஒருங்கிருத்தல் என்பதற்கான வினைச்சொல் இந்தையிரோப்பியனிலும் நேரடியாயில்லை. same என்ற பெயர்ச்சொல் மட்டுமே சுற்றிவளைத்துக் கூடுதல், உடனிருத்தல் பொருளில் எழுந்துள்ளது. உடன் இருப்பன ஒன்று போல் இருக்க வேண்டுமென்று புரிந்து கொள்கிறோம்.

.

perhaps abstracted from O.E. swa same "the same as," but more likely from O.N. same, samr "same," both from P.Gmc. *samon (cf. O.S., O.H.G., Goth. sama; O.H.G. samant, Ger. samt "together, with," Goth. samana "together," Du. zamelen "to collect," Ger. zusammen "together"), from PIE *samos "same," from base *sem- "one, together" (cf. Skt. samah "even, level, similar, identical;" Avestan hama "similar, the same;" Gk. hama "together with, at the same time," homos "one and the same," homios "like, resembling," homalos "even;" L. similis "like;" O.Ir. samail "likeness;" O.C.S. samu "himself"). O.E. had lost the pure form of the word; the modern word replaced synonymous ilk (q.v.).

இதே கருத்தைச் சமமென்ற சொல்லை மட்டுமின்றி, இன்னும் பல சொற்களைச் சேர்த்து ஒட்டு மொத்தமாக 'சமயம்' என்ற தலைப்பில் நண்பர் ஆசீப்பின் வேண்டுகோளுக்கிணங்கி அவர்களின் கானல் சிறப்பிதழில் எழுதினேன். பின் அதை என் வலைப்பதிவிலும் பதிந்தேன். கீழே சுட்டிகள் கொடுத்திருக்கிறேன்.

http://valavu.blogspot.com/2006/03/1.html

http://valavu.blogspot.com/2006/03/2.html

http://valavu.blogspot.com/2006/03/3.html

http://valavu.blogspot.com/2006/03/4.html

http://valavu.blogspot.com/2006/03/5.html

http://valavu.blogspot.com/2006/03/6.html

இக்கட்டுரைத் தொடரிற் சொல்லியிருப்பதை மீண்டுஞ் சொல்வதிற் பொருளில்லை. எனவேதான் சுட்டிகள் கொடுக்கிறேன். சமமென்ற சொல்லிற்கு இணையாகத் திராவிட மொழிகள் பலவற்றிலும் [சமம் - மலையாளம், சம- கன்னடம், படகர், சமமு-தெலுங்கு] சொற்களுள்ளன. சமத்தை ஒட்டிய பல சொற்களும் மற்ற திராவிடமொழிகளிலுண்டு. அவற்றில் சிலவற்றை பர்ரோ-எமெனோவும் பதிவுசெய்துள்ளார். வெறும் ஒற்றைச்சொல்லை மட்டும் பார்க்கும் பழக்கத்தை அருள்கூர்ந்து நிறுத்தித் தொடர்புடைய பல்வேறு சொற்களைத்

திராவிட மொழிகளிற் பார்க்கப் பழகுங்கள். இத்தனை மொழிகளில் இக்கருத்தும், கருத்தின் வளர்ச்சியும் இருந்தால் அது முந்து திராவிடத்திலும் இருந்திருக்குமென அறிவூகம் (intuition) சொல்லும். [முந்துதமிழென நான்சொன்னால் முன்சொன்னதுபோல் பலரும் ஏற்கார்.. பொதுவாகப் புகர் நிறத்தார், கருப்பர் சொல்லை மற்றதமிழர் கேட்பதில்லை :-)))] அப்படிப்பட்ட முந்துதிராவிடக் காலத்தில் வேதமொழி இந்தியாவினுள் நுழையவில்லை என்றே வரலாற்று மொழியியல் சொல்கிறது.

அப்படியும் மீறி முந்துதிராவிடத்திலும், இந்தையிரோப்பியத்திலும் ஒரேபொருளில் ஒருசொல் அமையுமானால் அது பழஞ்சொற்களின் மிச்சசொச்சம் என்பதே அறிவிற்குகந்தது. திராவிடமொழிகளுக்கும், இந்தையிரோப்பிய மொழிகளுக்கும் இடையே ஏதோ உறவு முந்து பழங்காலத்தில் நாகரிகந் தோன்றுங் காலத்தில் இருந்திருக்கிறதென்று கருதுகோள் கொண்டால் இதுபோல் ஒப்புமைகளை ஆராயலாம். [நான் அப்படியொரு கருத்துக்கொண்டவன்.] மாறாக ஒப்புமைப்பொருள் சொல்லத் தமிழருக்குச் சொல் கிடையாதென்று அச்சடித்தாற்போல் வேதமோதி, "வடமொழிமேடு, தமிழ்பள்ளம், மேட்டிலிருந்து பள்ளத்திற்கு நீர்பாய்ந்தது" என்று கிளிப்பிள்ளைபோல் கூச்சலிட்டு முட்டுச்சந்திற்குள் முன்னும்பின்னும் போய்வந்து கொண்டிருக்கலாம். I take சமம் as common stock of Dravidian and Indo-European. Period. Such common stock is to be ascertained over a long period of research. முடிவாக same = சம என்றே நான் கொள்ளுகிறேன்.

சமம், சமன், சமல் என்பவை பல்வேறு ஈறுகளில் முடியும் ஒருபொருட் சொற்களில், சமம் என்பதையே பெருவாரியாகப் பயன்படுத்தி மற்ற இரண்டையும் இக்காலத் தமிழில் துறந்து கொண்டுள்ளோம். கும்முதல் = கூடுதல் போலவே சம்முதல் = கூடுதல் என்பதும் பிறந்தது. கூடும்பொருட்கள் ஏதோ ஒருவகையில் ஒரேமாதிரி இருக்கவேண்டிய காரணத்தால், "ஒன்று போலிருந்தல்" என்ற வழிப்பொருள் பிறந்தது. முதற்பொருள் கூடுதலே. இரண்டாம் பொருளே ஒன்றுபோலிருத்தல். சம்மோடு தொடர்புடைய செம்முதலையும், அதையொட்டி செ, செம், செவ், செய் போன்ற முன்னொட்டுக்களையும், அவை உருவாக்கிய சொற்களையும் இங்கே எண்ணிப்பார்க்கலாம்.

அம்முதல் = பொருந்துதல்; அம்>அங்கு>அங்கம் = பொருந்திய உறுப்பு; கும்முதல் = குற்றுதல்; கும்>குங்கு = குன்றியது; கும்முதல்>கொம்முதல் = குவிதல்; குங்கு>கொங்கு = குவிந்த மேடான பகுதி; மலைகளையும், குன்றுகளையும் ஒதுக்கி நிரவலாய்ப்பார்த்தால் தமிழகத்தில் கொங்குப் பகுதியே மேட்டு நிலம். சும்முதல்= தொகுத்தல்; சும்>சுங்கு= ஆடையின் கொய்சகம்..

சுங்குடிப்புடவை. = சுங்கிய இடங்களில் சாயம் தோய்த்துப் புதுத்தோற்றங் கொண்ட புடவை. இப்படிப் பல்வேறு இணைகளைப்போல், சம்முதல்= கூடுதல்; சேர்தல்; சம்>சங்கு>சங்கம்= கூட்டம் என்றசொல் எழுந்தது.

கூட்டப் பொருள் என்பது ஈறாறு கூடுமிடம், ஆறு கடலோடு கூடுமிடம் (சங்குமுகம். ஒரு தாலாட்டு வரி "சங்குமுகம் ஆடி சாயாவனம் பார்த்து, முக்குளமும் ஆடி முத்திபெற வந்தானோ" என்று போகும். சங்குமுகத்தைத் தொகுத்துச் சங்கமமாக்கிச் சங்கதம் எடுத்துக்கொள்ளும். அதைமீண்டுங் கடன்வாங்கிச் சங்கமித்தல் என்று சிலதமிழர் உருவாக்குவார்), சேர்க்கை, அவை, புலவர் கூட்டம், முச்சங்கங்கள், செயின புத்த சங்கங்கள், அன்பு, புணர்ச்சி முதலிய பல்வேறு பொருட்பாடுகளைக் குறிக்கும். சங்கமென்ற சொல் தமிழிலக்கியத்தில் கூட்டப் பொருளில் முதன் முதல் ஆளப்பட்டது. மணிமேகலையின் (7.113-114) ”வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்ப, புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க” என்ற வரிகள் ஆகும். புலம்புரிச் சங்கம் என்பது கூட்டபொருளில் அமைந்தது தான். இதைக்காட்டிக் கூட்டப்பொருளில் மணிமேகலையின் காலத்திற்றான் ’சங்கம்’ எழுந்ததென்பது பெருந்தவறு. முன்சொன்ன காரணங்களால் சங்கத்திற்குக் கூட்டப்பொருள் முன்பே ஏற்பட்டிருக்கலாம்.

[(இடைவிலகலானாலும்) மணிமேகலையின் காலம் பற்றி இங்குச் சொல்லவேண்டும். சிலம்பும், மணிமேகலையும் ஒரே காலத்தில் அடுத்தெழுந்த நூல்களென்றே பலருங் கொள்கிறார். அப்படிக்கொள்வதால் தமிழர் வரலாறும், தமிழிலக்கிய வரலாறும் தடுமாறிப் புரிந்துகொள்ளப்படுகின்றன. பெரும் ஆய்வாளாரே இதில் தடுமாறியுள்ளார். ஆழவாய்ந்தால் கதை நடந்த காலத்திற்கருகில் 2,3 ஆண்டுகளுக்குள் சிலம்பு எழுந்திருக்கலாமென்றும், அதில் வரலாறு மிகுதியாய், புனைவு குறைவாய் உள்ளதையும் உணரலாம். என் ஆய்வின் படி சிலம்பின் காலம் பொ.உ.மு.75 ஆகும். ”அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாகும், உரைசால்பத்தினியை உயர்ந்தோரேத்துவர், ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்” என்ற உண்மைகளோடு, சோழ, பாண்டிய, சேர இனக்குழுக்களை விதப்பாய்ப்பாராது மொத்தத்தமிழரின் சிறப்பையும் தேசியநோக்கிற் பேசவந்த நூல் அதுவாகும். தவிர, எல்லாச் சமயங்களையும் குறையின்றி விரித்துப் பேசிய அந்நூலை வெறுமே செயின சமயநூலென்று குறுக்குவதும் சரியல்ல.

மணிமேகலையோ, ஒருசில சிலம்புக் கதைமாந்தரை தன் கதைமாந்தராய் எடுத்துக்கொண்டு அளவிற்கதிகம் புனைவுசேர்த்து பல்வேறு காலநிகழ்வுகளைக் கலந்து, கதையாக்கிச் சிலம்பிற்கு அப்புறம் 500 ஆண்டுகள் கழித்து (பெரும்பாலும்

பொ.உ.425 இல்) தமிழகத்தில் புத்தமுயர்ந்த களப்பிரர் காலத்து நூலாகும். (இதற்கீடாக செயினப்பெருமை பேசும் நீலகேசியைச் சொல்லலாம்.) எப்படி விக்கிரமனின் 'நந்திபுரத்து நாயகியும்', கல்கியின் 'பொன்னியன் செல்வனும்' ஒன்று மற்றதின் தொடர்ச்சியாய் அதேபொழுது தத்தங் காலங்களில் வேறாய் எழுந்தவையோ, அதுபோற் சிலம்பையும், மணிமேகலையும் கொள்ளவேண்டும். இதைச்செய்யாது ஆய்வுக் குழப்பத்தால் சிலம்பை வலிந்து கீழிழுத்துப் புதினமென்பது முற்றிலும் தவறானபோக்கு. இதுபோன்ற தவறு ஏறத்தாழ 100 ஆண்டுகளாய் நடந்துவருகிறது.]

## — 7 —

சங்கமென்ற சொல்லிற்கான பொருள்வரிசையில், மூன்றாவதாய் அமைவது "கூட்டநீட்சியான" எண்ணிக்கை. இதன்வழிப் பொருட்பாடுகள் "இலக்கங்கோடி, படையிலொரு தொகை" என்பன தமிழிய, வட இந்திய, மேலை மொழிகளின் எண்ணுச்சொற்களிடையே வியத்தகு ஓரிமையிருப்பதாகவே நான் உணர்கிறேன். சொற்கள் வேறாயினும், உள்ளிருக்கும் செலுத்தமும் (process) பொருளும் (meaning) ஒன்றுபோற் காட்டும். தமிழிய மொழிகளுக்கும் இந்தையிரோப்பியனுக்கும் முன்தொடர்பு இருக்குமென நான்சொல்ல இதுவுமொரு காரணம். தமிழில் எண்கள் எழுந்த வகை சொல்ல ஏராளம் உண்டு. அதேபொழுது இந்நீள்தொடரை மேலும் நீட்டுவது முறையல்ல என்பதாற் சுருங்கச்சொல்கிறேன். முதற்கருத்தீடு 'ஒன்றைப்' பற்றியது.

விலங்கியல், மாந்தவியல் அறிவின்படி, மாந்தனின் உணவுப்பழக்கமே அவனைக் குரங்கிலிருந்து வேறுபடுத்தியது என்பர். பல்வேறு மாந்தக்குரங்குகளில் இறைச்சி சாப்பிடத்தொடங்கியவன் அவனே. ஒருகாலத்தின் அவன் மூளை கிடுகிடுவென வளரத்தொடங்கியதும் இறைச்சிசாப்பிடத் தொடங்கியதாற்றான். இன்றைக்கு மரக்கறி உணவை வலியுறுத்தும் பலருக்கும் இது வியப்பாகலாம். ஆனால் உண்மை அதுதான். ஒந்நு/ ஒந்து/ ஒண்டு/ஒண்ணு எனுஞ்சொற்கள் (ஒன்னு/ ஒன்று பின் ஏற்பட்ட திருத்தங்கள்) பெரும்பாலும் வாயுட்புகும் இறைச்சியால் ஏற்பட்டனவோ என்றே ஐயுற வேண்டியுள்ளது. ஊனிற்கும் ஊணிற்குமான எழுத்துப்போலி இந்த ஊகத்தை நமக்கு எழுப்புகிறது. இதன் விளக்கத்தை இங்கு நான் கூறவில்லை. வேறு தொடரிற் பார்க்கலாம்.

இரண்டென்பது ஊனை ஈரும், இரளும் வினையில் எழுந்ததாய்த் தோற்றுகிறது. துமி>துவி என வட இந்திய, மேலை மொழிகள் கையாளும். (துமித்தலும் கூட ஈர்தலே.) முன்றென்பது முன் வந்து காட்டும் மூ>மூக்கு,

நூ>நுதி>நுசி>நாசி, தூ>துயி>துதி (ஒருபொருட் சொற்கள்) என்றெழுந்தது. (வடவிந்திய, மேலை மொழிகள் வழக்கம் போல் ரகரத்தை உள்நுழைத்து துயியைத் த்ரயி> three என்றாக்கும். உலகின் பல பழங்குடிகளும் (1,2, பல) என்றோ, (1,2,3, பல) என்றோ, எண்ணுவதில் தேங்கிநின்றார். இன்னுஞ் சிலகுடிகள் கைவிரல் கொண்டு, ஐந்தெனும் கருத்தீட்டுள் வந்தார். ஐ, ஐது, ஐந்து, செய் என்றும் இவை தமிழிற் சொல்லப்படும் அஞ்சென்பது ஐந்து>அய்ஞ்சின் பேச்சுவழக்கு. இன்னும் வளர்ச்சியடைந்தோர், 4,6,7,8 ஆகியவற்றை ஊடே எண்ணி வளர்ந்துள்ளார்.

நால்கை என்பது நலிந்த கையைக் குறிக்கும். ஐந்திற் குறைந்துபோன கை. நால்கை> நால்கு> நான்கெனத் திரியும். கையிலாத நால்/நாலும் பழக்கத்தால் 4 ஐக் குறிக்கும். "ஆறு, ஏழு, எட்டு" என்பவை 1,2,3,5 என்ற அடிப்படைகளைக் கொண்டு கூட்டப்பொருளில் எழுந்தன. சற்றுநீளமான அவற்றின் சொற்பிறப்புக்களை இங்கு நான் சொல்லவில்லை. 'பல'வெனுங் கருத்தும் முன்னேறிய பழங்குடிகளிடம் இருந்துள்ளது. 10 எனும் அளவிற்கு எண்ணிக்கையில் முன்னேறியவர் புதுக்கற்கால நிலையில் இருந்திருக்கலாமென மாந்தவியற் குறிப்புகள் சொல்கின்றன. பல என்ற சொல்லை வரையறுத்து 10 ஐக் குறித்தது சிந்தனை வளர்ச்சி தான். தொடக்கத்தில் பல், வெளுப்பு நிறத்திற் பிறந்து, பொருள்நீட்சி பெற்று, வாய்ப்பல் குறித்தது. மேலும் பொருள் நீட்சியில் பன்மையைக் (many) குறித்து, முடிவிற் பல்து> பஃது> பத்து என்றாகி 10 ஐ வரையறுத்தது. மேலைமொழிகளின் ten னுங் கூடத் தந்தம்/பல்லைத் தான் குறித்தது. ஈரைந்து என்பதைத் 'துவிசெய்' ஆக்கி தச எனத்திரித்து வடபுலத்தில் ஆள்வர்.

10 வந்தபின், 9 ஏற்படுவது இயல்பு. துவள்ந்து>துவண்டு போன பத்து, தொண்பதானது, தொண்பது>தொன்பது>ஒன்பது ஆயிற்று. தொள்ளும் ஒள்ளும் ஒரேபொருளன. எப்படிக் கையைத் தொகுத்து நால்/ நாலு, நான்கைக் குறித்ததோ, அப்படித் துவள்>தொள்>தொண்டு என்பது ஒன்பதைக் குறித்தது. நமுத்தல்>நவுத்தல்>நவத்தலும் குறையைச் சுட்டும். நவமென்ற வடபுலச் சொல் அப்படியெழுந்தது. இங்கும் மொழிகளிடை ஒரே சிந்தனை தென்படுவதைக் காணலாம். கூர்ந்துபார்த்தால், ஊனில் தொடங்கி, பின் ஈர்ந்து, அடுத்து மாந்தரை மையமாக்கி (anthropocentric) 3,5,10 ஆகிய எண்களைச் செய்துள்ளார். எண்ணியற்படி இவையே அடிப்படை எண்கள். இவற்றை வைத்தே, 4,6,7,8,9 என்ற வழிப்படு (derived) எண்களை உருவாக்கியுள்ளார்.

அடுத்தது நூறு. இதைச்செய்கையில் மாந்த உறுப்புச் சிந்தனை போதாமலானது. சில குடிகள் கைவிரல் 10 ஐயும், கால்விரல் 10 ஐயுஞ் சேர்த்து 20 எனும் அலகை உருவாக்கி எண் கட்டகம் numeric system) செய்தார். (தென்னமெரிக்க மாயன்கள் இவ்வகையினர்.) சுமேரியர் போன்றோர் 60 ஐ வைத்து எண்ணுமுறை உருவாக்கினர். ஒரு மணிக்கு 60 நுணுத்தம், ஒரு நுணுத்தத்திற்கு 60துளிகள் என இன்றுஞ் சொல்கிறோமே, அது சுமேரியர் வழி வந்தது. பெரிதும் 10 ஐ அடிப்படையாகவும் சிறுபால் 60 ஐ அடிப்படையாகவுந் தமிழர் கொண்டார். ஒரு நாளுக்கு 60 நாழிகை. ஒரு நாழிகைக்கு 60 விநாழிகை என்பதும் சுமேரியர் மாதிரிச் சிந்தனை தான். அதே பொழுது 10 இன் சிந்தனை தமிழரிடம் மறையவில்லை. இருபது, முப்பது, ......எழுபது, எண்பது என்று அமைவதும் நம் மரபு தான்.

அடுத்த வளர்ச்சி மாந்தவுடலிலிருந்து புவியிற்காணும் கல், மண் என நகரத் தொடங்கியது. உடையக்கூடிய (கல் போன்ற) ஏதோவொன்றைக் கீழேபோடுகையில் ஒன்று பலதாவதுபோல், வலிந்து கீழிட்டு நுறுக்கும்>நொறுக்கும் போது நூறாகிறது. முற்றிலும் அழிகிறது. நூறெனும் சொல்லிற்கு சங்க இலக்கியங்களில் இப்பொருள் நெடுகவுள்ளது. நூறு>நீறு=பொடி. நுறுக்குவதற்கு இன்னொரு சொல் சதைத்தல்> சதாய்த்தல். “போட்டு சதாய்ச்சிட்டான்பா” என இன்றுஞ் சொல்வோம். சதைத்தலின் இன்னொரு வடிவம் சாத்துதல். சதைத்தலிலெழுந்த வடசொல் சதம். சங்க காலத்தில் தமிழருக்கு வடக்கே (இற்றை மராட்டியக் கோதாவரிக் கரையில் ஔரங்காபாது அருகில்) படித்தானத்தைத் (Paithan) தலைநகராய்க் கொண்ட நூற்றுவர்கன்னர் (பாகதத்தில் சதகர்ணி) ஆண்டார். தமிழகத்தையும் மகதத்தையும் வணிகத்தால், இடையாற்றங்களால், இணைத்தவர் இவரே. எதிரிகளை நூறும் அடைப்பெயரை இவர் பெற்றார். கன்னர் (= கருநர்) என்பது சேரர்/சோழர்//பாண்டியர் போல் ஓர் இனக்குழு அடையாளம்.

தமிழிய, வடவிந்திய மொழிகளிடையே எண்களில் இணைச்சிந்தனை நிலவியது நெடுகவும் உண்மை. அவை தனித்தனியே தேர்ந்துகொண்ட சொற்கள்தாம் வேறு. மேலைச்சொல்லும் நூறுதல். சதைத்தல் போலவே அமையும்..100 க்கான மேலைச்சொற்கள் கொத்துதற் கருத்தில் எழுந்தவை. ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலி பொருள்கூறாது வெறுமே சொல்லிணைகளை மட்டுங் காட்டும். Old English hundred "the number of 100, a counting of 100," from Proto-Germanic *hundratha- (source also of Old Frisian hundred, Old Saxon hunderod, Old Norse hundrað, German hundert); first element is Proto-Germanic *hundam "hundred" (cognate with Gothic hund, Old High German hunt), from PIE *km-tom "hundred," reduced from *dkm-tom-

(source also of Sanskrit satam, Avestan satem, Greek hekaton, Latin centum, Lithuanian simtas, Old Church Slavonic suto, Old Irish cet, Breton kant "hundred"), suffixed form of root *dekm- "ten.
கொத்துதலும் சாத்துதலும் ஒரேபொருள் கொண்டவை. சகரமும் ககரமும், ஹகரமும் மேலைமொழிகளில் போலிகள். ஒரு பக்கம் ககரம் சகரமாக, இன்னொரு பக்கம் ககரம் ஹகரமாகும். பொருள் ஏதோ ஒன்றுதான்.

நூறென்ற எண்ணுப்பொருள் சொல்லாட்சி சங்க இலக்கியங்களில் பலவிடங்களில் வந்துள்ளது. "நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல் வேள்வி முற்றிய வென்று" (திரு.155-156), "நூற்றிதழ்த் தாமரை" (ஐங்.20-2), "பதிற்றுக்கை மதவலி நூற்றுக்கை ஆற்றல்" (பரி 3-40), "மையிரு நூற்றிமை உண்கண் மான்மறி தோள் மணந்த ஞான்று ஐயிருநூற்று மெய்ந்நயனத்தவன் மகள் மலர் உண்கண் மணிமழை தலைஇயென" (பரி 9-8,9,10), "நூற்றிதழ் அலரின் நிரை கண்டன்ன" (புறம் 27-2), "புரிபுமேல் சென்ற நூற்றுவர் மடங்க, வரிபுனை வல்வில் ஐவர் அட்ட" (கலி 104 57,58), "மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனை" (கலி 52-2), "பன்னூறு அடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்" (புறம் 62.10),"நூறுசெறு வாயினும் தமித்துப்புக் குணினே" (புறம் 184.3) என்பன அவையாகும்.

அடுத்தது ஆயிரம். நுறுக்குவதற்கும் கீழே, விடாது துவட்டி/தவட்டி எடுக்கையில் கல், தவடு>தவிடு பொடியாகிறது. தவட்டுதல் = சிறு பொடியாக்குதல். துவையலும் சிறுபொடியாக்குவதே. என்ன? ஈரஞ் சேர்ந்து பொடியாக்குவது. தவட்டுதல்>தவடு>தவிடு என்பதற்கும் மேலைமொழிகளின் thousand ற்கும் தொடர்புள்ளதுபோல் தோற்றுகிறது; தவிடு பொடியாதல்; தவட்டுதல், தென் மாவட்டங்களில் சவட்டுதல் ஆகும். சவடென்பது வண்டல்மண்ணையும், ஆற்றுமணலையுங் குறிக்கும். (ஊரெலாம் காணும் ஆற்றுமணற் கொள்ளை சவட்டுமணற் கொள்ளையே.) இதே பருமையில் ஆனால் கடற்கரையிற் கிடக்கும் மணல் சற்றே திரிந்து, உப்பையுணர்த்தி, சவடு>சவரென அழைக்கப்படும். சவத்தலே சவர்த்தலாயிற்று. சவ்வு>சவ்விரம்>சவிரம்>சாவிரம்> சாயிரமென இச்சொல் திரியும். கன்னடத்தில் சாயிரம் = ஆயிரம். (கன்னடச்சொல் தெரியாவிடின் ஆயிரத்தின் சொற்பிறப்பறியத் தடுமாறியிருப்போம்.) இதற்கு இணையாய்த் தமிழில் அயிரம்/அயிரை = நுண்மணல், கண்ட சருக்கரை. அயிர் = நுண்மை.

சாயிரம்>சகயிரமாகி, பின் சகஸ்ரமாகி, சங்கதத்திற் புழங்கும். இதைத் தலைகீழாய் ஓதி "சகஸ்ரமே ஆயிரமாயிற்று" என்றும் சிலர் சொல்வர். சவட்டுதலின் தொடர்பான சவளுதல் = துவண்டு போதல், சவித்துச் சவலையான பயிர் சாவி,. சவித்தழிந்த உடல் சவம். சாவட்டை= சாவிப்பயிர், சாம்பிப்போதல்>

சாவிப் போதல்= ஒடுங்குதல் போன்ற சொற்களைப் பாராது இவர் சொல்கிறார். சவைத்தலின் இன்னொரு வெளிப்பாடு அவைத்தல்; அரிசி குற்றலைக் குறிக்கும். அவல்= flattened rice. இவற்றையும் சங்கதத்தார் கவனிப்பதில்லை. ஆயிரம் தமிழில்லையெனில் இத்தனையும் தமிழில்லை என்றாகும். ஒரு சொல்லைத் தனித்துப்பாராது, சொற்றொகுதியாய்ப் பார்க்கும்படி நான்சொல்வது அதற்கே. ஆயிரம் போலவே இன்னொன்று அயிர்தம். சகஸ்ரத்தை ஆயிரத்திற்கு வைத்து, அயிர்தம்>அயுதத்தை வடபுலத்தார் பத்தாயிரத்திற்குப் பயனுறுத்தினார். சாயிரம் புழங்காத தமிழரோ அயிர்தமும், ஆயிரமும் ஏறத்தாழ ஒன்றாய் ஒலிப்பதால், குழப்பந் தவிர்க்க, பத்தாயிரமென்கிறோம்.

'ஆயிரம்' பழகிய சங்கச்சொல்லாட்சிகள் "அடையடுப்பறியா அருவி ஆம்பல் ஆயிரவெள்ளம் ஊழி வாழி, ஆத வாழிய பலவே" (பதி.63.19-21), "ஆயிரம் விரித்த கைம் மாய மள்ள" (பரி.3-42), "ஆயிர அணர்தலை அரவவாய்க் கொண்ட" (பரி 3-59), "அந்தர வான்யாற்று ஆயிரம் கண்ணினான் இந்திரன் ஆடும் தகைத்து" (பரி.தி.2-95-96), "சாலிநெல்லின் சிறைகொள்வேலி ஆயிரம் விளையூட்டாக" (பொரு. 247-248), "தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய" (மது 11), "ஆயிரவெள்ளம் வாழிய பலவே" (பதி 21.38), "ஆயிரம்விரித்த அணங்குடை அருந்தலை" (பரி 1.1), மாசில் ஆயிரம் கதிர் ஞாயிறும் தொகூஉம்" (பரி.3.22), "மின்அவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கை" (பரி 13.27-28), "அணங்குடை அருந்தலை ஆயிரம் விரித்த" (பரி.தி.1.79), "அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம் கண் ஏய்க்கும்" (கலி.105.15), "வளஞ்சால் துளிபதன் அறிந்து பொழிய வேலியாயிரம் விளைக நின் வயலே" (புறம் 391.19-21 என்பனவாகும். ஆயிரமென்ற எண்ணிற்கு மேற்பட்ட சொல்லாட்சிகள் தமிழிற்குறைவு. ஆனால் இல்லாதில்லை. நிகண்டுகளிலும், ஒருசில காட்டுக்களிலுமுண்டு. (மறவாதீர். சங்க இலக்கியங்கள் அகரமுதலிகள் அல்ல.)

அயிர்தலுக்கும் கீழே நொய்வது நொய்தலாகும். நொய்>நொசி, என்பது ஆங்கிலத்தின் nice ஓடு இணைகொண்டது. "அந்த மண்ணைத் தொட்டுப்பார், நொய்யாக இருக்கும்." நொய்தல், நெய்தல் என்று திரிந்து 100000 (=10^5) த்தைக் குறிக்கும். இலவுதல்>இலகுதலும் நொய்தலைக் குறிக்கும். இலகல்= நொய்ம்மை. இலகுதல் தன்வினை. இலக்குதல் பிறவினை.. இலக்கலிற் பிறந்த இலக்கம், முற்றிலும் தமிழே. இலக்கத்தைச் சங்கதம் இலக்ஷ என்னும்.. பிறகு, "தமிழ் அங்கிருந்து கடன்வாங்கியது" என்பர். "நெய்தலும் குவளையும் ஆம்பலும், சங்கமும் மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய செய்குறி ஈட்டம் கழிப்பிய வழுமுறை" என்று பரி. 2.13- 15 ஆம் வரிகளிற் பயிலும். ஆயிரத்திற்கு மேற்பட்டு அடுத்தடுத்துயரும் எண்களாய் கால எண்ணிக்கை சொல்லப்படும். இலக்கமும்

(10^5) நெய்தலும் ஒன்றென வடபுல நூல்களைப் பார்த்தே அறிந்தேன். நெய்தலை வடக்கெ ந்யுதமென்பார். (தமிழாய்வர் கொஞ்சமாவது பாகதம், சங்கதம் படிக்க வேண்டும். நம்மூர்ச்சிந்தனை வடக்கே பெயர்ந்துகிடக்கிறது. வேரிங்கே விளைவங்கே. உண்மையறிய இப் படிப்பு கட்டாயந் தேவை) நெய்தல், இலக்கத்தோடு நூறாயிரமும் நம் வழக்கில் உண்டு. "நூறாயிரம் கை ஆறறி கடவுள்" என்பது பரி. 3.43.

அடுத்தது கோடி. நுணுகிய துகள்களைக் குவ்விக் குவிப்போம். குவ்வியது குவலும்/குவளும். 10^7 எனும் எண்ணுணர்த்தி குவளை என்ற பெயர்ச்சொல் உருவாகும். (இதில் கூடிய எண்ணிக்கை என்ற உட்பொருள் இதிலுள்ளது.) குவளை குவளியாகி தெலுங்கிற் குவடியாகி முடிவிற் கோடியாகும். வடக்கே கோடியே புழங்கியது. 'குவளை' அங்கில்லை. தமிழில் இரண்டும் உண்டு. ஆனால் கோடியே மிகுதி. "ஒன்று பத்தடுக்கிய கோடிகடை இரீஇய பெருமைத்தாக நின் ஆயுள் தானே" (புறம் 12.5-6), "கோடியாத்து நாடுபெரிது நந்தும்" (புறம் 184-6), "கோடிபல அடுக்கிய பொருள் நுமக்கு உதவிய" (புறம் 202-7) ஆகியவை இதற்கான சொல்லாட்சிகள். (குவளை = கோடி என்ற இணையைத் தமிழருக்குப் புரியவைத்தவர் சொல்லறிஞர் இரா.மதிவாணன். (அவருடைய கட்டுரையை அடையாளங் காட்ட பரணில் தேடினேன். இப்போது கிட்டவில்லை. தெலுங்குமொழி பலவகையில் பாகதத்திற்கும் தமிழுக்குமான பாலமே. நூற்றுவர்கன்னர் ஆட்சியில் ஏற்பட்ட விளைவு இது.)

நெய்தல், குவளை என்றசொற்கள் குவிந்த நுண்துகள்களாய் காட்சியளித்தாலும், நீர்ப்பூக்களெனும் மாற்றுப்பொருளுமுண்டு. அகப்பாட்டுக்கள் பலவற்றில் அப்படியே ஆளப்படும். அந்த மிகுதியே நம்மை எண்ணுப்பொருள் காட்டவிடாது தடுக்கும்.) ஒவ்வோர் எண்ணுக்கும் ஏழெட்டு நிகர்ச்சொற்களை மரபு கருதி மறைப்பாகப் புழங்குவது இந்தியாவெங்கணும் நடைமுறை யாகும். காட்டாக வானம்= 1, கை= 5, திசை= 8, கைத்திசை = 58. இப்படிப் பல்வேறு சொற்களையும் சொற்கூட்டுகளையும் வட்டார மரபுக்கேற்பப் புழங்குவர். குழூஉக்குறி புரியாதோர் விளங்காது நிற்பர். ["நாலுபேர் சொல்வாங்க" என்ற மரபுப்பேச்சிற்கு "நாலுதிசையிலும் உள்ளவர் சொல்வர்" என்பதே பொருள். "4 ஆட்கள் சொல்வர்" என்பதல்ல.] இலக்கத்திற்கு நெய்தலும், கோடிக்கு குவளையும் அடையாளமாய்க் கொள்ளப் பட்டன. நெய்தலையும், குவளையும் இப்படிப் புழங்கியபிறகு ஆம்பலையும், தாமரையையும் விட்டுவைப்பாரா, என்ன? ஆம்பல், சங்கம், தாமரை என்ற எண்சொற்களும் பிறந்தன.

நூறுகோடி = 10^9 என்ற எண்ணைக் குறிக்க 'ஆம்பல்' புழங்கியுள்ளது. அவைத்தல்பற்றி முன்னே சொன்னேன் அல்லவா? அவல்மட்டுமின்றி அவமென்ற பெயர்ச்சொல்லும் அதிற்கிளைக்கும். அதற்கும் மிக நுண்ணிய பொருளுண்டு. ஒருபொருளை அவத்திவிட்டால் (10^9 பங்காக்குவது பின் என்ன?) அழிந்துதான் போகும். எனவே அவத்திற்கு அழிவுப்பொருளும் வந்தது..அவம்>ஆம் எனத் தொகும். ஆம்புதல், ஆமுதல் போன்ற வினைகளை எழுப்பும். ஆம்பல் பேச்சுவழக்கில் ஆம்ப என்றாகும். சங்கதத்தில் ஆம்ப்ய ஆகி, மகரந்தொலைத்து ஆப்ய என்றாகும். யகரமும் ஜகரமும் வடசொற்களில் பலவிடங்களிற் (மேலைமொழிகளிலும் போலி தான்) ஆப்ய என்பது ஆப்ஜ ஆகும். வடநூல்களில் இதேபொருளில் இச்சொல் புழங்கியது. இதைக் குமுதம்> குமுத> சமுத> சமுத்ர என்றுஞ் சொல்வார். வடபுலத்திலும் 10^9 என்பதே இதன் பொருளாகும். ஆம் என்பதற்கு நீரென்ற பொருளுமுண்டு. கொஞ்சங்கொஞ்சமாய் எண்ணுப் புலம் கல்>மண்>மணல் என நீருக்குள் வந்துவிட்டது பாருங்கள். இன்னொரு வகையில் அம்பல்>ஆம்பல். அம்புதல்= கூம்புதல் என்பதால் அல்லியைக் குறிக்கும். அல்= இரவு. பகலிற் கூம்பி, இரவில் மலரும் அல்லிக்கு ஆம்பல் பெயர் ஏற்பட்டது.

அடை/இலை பக்கத்தில் உள்ளது நீராம்பல் பூ. அடையடுப்பறியா நீராம்பல் பூ = 10^9. பூத்த வஞ்சி/ பூவா வஞ்சி என்ற இணையை இங்கு எண்ணிக்கொள்ளுங்கள். ”அடையடுப்பறியா அருவி ஆம்பல் ஆயிரவெள்ளம் ஊழி வாழி” என செல்வக்கடுங்கோ வாழியாதனை பதி.63.19-21 இல் கபிலர் அழகுறப்பாடுவார். ”நெய்தலும் குவளையும் ஆம்பலும், சங்கமும் மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய செய்குறி ஈட்டம் கழிப்பிய வழுமுறை” என்று பரி. 2.13-15 ஆம் வரிகளில் அடுத்தடுத்த பெரிய எண்ணாய் ஓர் ஒழுங்குமுறை தெரியும். இதுவரை பார்த்தபடி, நெய்தல்/ இலக்கம்/நூறாயிரம் = 10^5. குவளை/கோடி = 10^7. ஆம்பல்/நூறுகோடி = 10^9. இனிச் சங்கத்திற்கு வருவோம். இதன்மதிப்பு இன்னுங்கூட.

சங்குபற்றி முன்சொல்கையில் 1000 இடம்புரிச் சங்கிற்கு 1 வலம்புரிச் சங்கு கிடைக்குமென்ற பெருதகை (probability) சொன்னேன். அதுபோல் 1000 வலம்புரிச் சங்கிற்கு 1 சலஞ்சலம். ஆயிரம் சலஞ்சலத்திற்கு 1 ஐஞ்சுன்னம். இதைப் பெருக்கிப்பாருங்கள். 1000* 1000* 1000 = 10^9 என்றாகும். இதற்குமேலும் இதே பெருதகையில் ஓரெண் வேண்டுமெனில் அது 10^12 தான். சங்கமென்ற சொல்லுக்கு இதையே வழிப்பொருளாக்குவர். வடநூல்களில் இதேபொருள் சொல்வர். 10^12 = 10^5 * 10^7 = இலக்கங் கோடி. தமிழ் அகரமுதலிகளில், நிகண்டுகளில் இப்பொருளுள்ளது. இப்போது புரிகிறதா, சங்கத்தின் எண்ணுப்பொருள்? அடுத்தது நூறுசங்கம் 10^14. இதை வெள்ளமென்று குறித்திருக்கிறார். சங்கதத்தில் ஜலதி என்பர். இதுவரை சொன்னதில் தாமரை

விட்டுப்போனது. அது சங்கத்திற்கும் வெள்ளத்திற்கும் இடைப்பட்டதெனப் பரி. 2.13-15 ஆம் வரிகள் சொல்லும். எனவே பத்துச்சங்கம் = 10^13 = தாமரை ஆகலாம். என்னால் உறுதியாய்ச் சொல்லமுடிய வில்லை. வேறு ஏதேனும் விளக்கம் தோன்றினால் பின்னர் சொல்கிறேன்.

**— 8 —**

'சங்கச்' சொல்லிற்கான வளைவுப்பொருளையும், கூட்டப்பொருளையும், அவற்றின் படியாற்றங்களையும் இதுவரை பார்த்தோம். இனிக் கூட்டநீட்சியாய் எண்ணிக்கைப்பொருள் பார்ப்போம். இதன்வழி. "படையிலொரு தொகை" என்றவொரு பொருள் குறிப்பிடப்பட்டுள்ளது. படையும், படைத்தொகையும் எனப்பார்த்தால் அது பெரியபுலனம். இதன் விவரங்கள் சங்கவிலக்கியங்களில் நேரடி கிடைப்பது அரிது. ஏனெனில் சங்கநூல்கள் அடிப்படையில் அகப், புற நூல்கள். புறமென்றாலும் கூடப் பரணி நூல்கள் போல் போரை நேரடியாக விவரிப்பனவல்ல. வடபுல நூல்களைச் சார்ந்தே இச்செய்திகளை அணுகவேண்டியுள்ளது. இதனாலேயே தமிழ்நூல்கள் பின்வந்தவை என்று சிலர் கருதலாம். வேர்ச்சொற்கள் பார்த்தால் அப்படித் தோன்றவில்லை. பொ.உ.மு.600 - பொ.உ.200 வரைக்கும் வடக்கிலும் தெற்கிலும் படைதொடர்பாக பல இடையாற்றங்கள் இருந்ததாகவே சொல்லமுடிகிறது. என்னால் முடிந்தவரை, படைத்தொகைச் செய்திகளை, கீழே சுருங்கச் சொல்கிறேன்.

மரஞ்செடிகளின் தண்டுபோலவே மாந்தனுக்கும் கால்களுண்டு. குத்திநிற்பதை நட்டநிற்பதாய்ச் சொல்வர். 'நடை'ச் சொற்பிறப்பை என்றேனும் நீங்கள் எண்ணிப் பார்த்ததுண்டா? ஒருகாலை முன்நகர்த்திப் பின்நட்டு, இரண்டாங்காலை முன்நகர்த்திப் பின்நட்டு,, அடுத்தடுத்துத் தொடர்வதே நடப்பதாகும். இதிலெங்கு தவறினும் விழவேண்டியதுதான் ஆக, நடுவதில் விளைவது நடை. 70000 ஆண்டுகள் முன் ஆப்பிரிக்காவிலிருந்து நடந்துவந்து இந்தியத் துணைக்கண்டத்துள் மாந்தர் நுழைந்தார். இனி நிலம் படும் பாதத்திற்கு வருவோம். நடந்துவந்த பாதையிற் சுவடின்றி யாரும் நடக்கமுடியுமோ? படு>படி>பதி என்பது "பதம்>பாதத்தின்" தொடக்கம். பாதம் படுவதுபோல் மற்றசெயல்களில் மாந்தர் படிவதையும் படுதலென்பார். பட்டுவ வாக்கியங்களிற் (passive voice) இதைப் பயன்படுத்துவோம். "பொத்தகம் என்னால் படிக்கப்பட்டது". தன்வினையிலும் 'படு' என்பது துணைவினையாகும். "அவன் செயற்பட்டான்". ஒருவகையிற் பார்த்தால் படுதல் என்பது கட்டகச்சொல் (systemic word).

ஒரு வேட்டையில் 4 ஆட்கள் போவதாய் வையுங்கள். ஆட்களோடு, ஆயுதங்கள் (படைக்கலன்கள்), துணைப்பொருட்கள் (தளமாடப் பயனுறும் தளவாடம்). என எல்லாமுஞ் சேர்ந்தாற்றான் வேட்டை ஆடமுடியும், குறிப்பிட்டசெயலைச் சாதிக்கும் இதை வேட்டைக் கட்டகமென்போம். இதுபோல் படுதலைச் செய்யுங் கட்டகம் படை. இதுவொரு பொதுமைச் (generic) சொல். வேட்டை, நிலந்தோண்டல், இன்னொரு மாந்தக்கூட்டம் அழித்தல் என்பன எல்லாமும் படைச்செயல்களே. ஓர் இனக்குழுவின் நிலைப்பு என்பது எப்போது சிக்கலாகிறதோ, அப்போது இனக்குழுவிற்காகப் படை ஏற்பட்டே தீரும். நாளாவட்டத்தில் காவல், தாக்கல், அழிவென்ற கண்ணோட்டங்கள் இதனுள் வரும். விலங்காண்டி காலத்திலிருந்து இன்றுவரை படையளவு கூடியதே தவிர, கருத்தீடு மாறவில்லை.

துணைக்கண்டத்தின் நெய்தலிலும், அடுத்தடுத்துள்ள திணைகளிலும் மாந்தநகர்ச்சிக்கு நெடுநாட்கள் நடையே வழியானது. நடைக்கு அடுத்த நகர்ச்சி சகடங்களால் விளைந்தது. விலங்காண்டி நிலையிருந்து வளர்ந்தபின், குறிப்பிடத்தக்க நுட்பியல் மாற்றமாய்ச் சக்கரம், சகடம், சகடை, தேர், உருளம்>உருடம்>உருதம்>ரதம் போன்றவை குமுகத்தில் உருவாகின. இவை எப்பொழுது எங்கு முதலில் உருவாகின என்பது இன்னுந்தெரியாது. ஆனாற் சிந்துசமவெளியில் இவையிருந்ததற்குச் சான்றுகளுண்டு. [தொடக்கத்தில் காளைகளே சகடங்களை இழுத்திருக்கலாம். கால்>காள்>காளை; கால்நடையென இன்றும் சொல்லப்படுவதே "காளைச்" சொற்பிறப்பைக் காட்டும்]. இதே போன்ற சான்றுகள் எகிப்திய, சுமேரிய நாகரிகங்களிலும் கிடைத்துள்ளன.

பொ.உ.மு.9000-1800 வரை சிந்துசமவெளியில் குதிரைப் புழக்கம் இருந்தது போல் தெரியவில்லை. இத்தனைக்கும் ஆவ்க்கனித்தான், இரான், நடு ஏசியா போன்ற மேற்கு நாடுகளில் குதிரை உலவியது. ஆரியருக்கும் குதிரைப்பழக்கமுண்டு. இட்டைட், மித்தனி போன்ற நாகரிகங்களில் குதிரை / குதிரைவண்டி கொண்டே ஆரியர் முன்னிலைக்கு வந்தார். சிந்துவெளி நாகரிக முடிவில் குதிரைத் தாக்கம் இந்தியாவில் ஏற்பட்டிருக்கலாம். பாரசீகம், அரேபியா போன்ற நாடுகளிலிருந்து நிலம் மூலம் வடக்கேயும், நருமதைத் துறைகள் தொடங்கி தீவகற்பம் முழுதும் கப்பல் மூலம் தெற்கேயும் குதிரைகள் இறக்கப்பட்டன. இதன்பின்னர் சுமை வண்டிகளைக் காளைகளும், வேக வண்டிகளைக் குதிரைகளும் இழுத்தன. இந்திய நாகரிகத்தில் பொ.உ.மு. 2000/1800 க்கு அப்புறமே படைவேலைகளுக்குக் குதிரை பயன்பட்டது. குதிரையையும், வண்டிகளையும் இணைந்த பின்னாற்றான் சாலைகளிற் கல்லைப் பாவும்

பழக்கமும், மேடுபள்ளம் இல்லாது சாலைகளை அமைக்கும் நுட்பமும் இந்தியாவிற் பரவியது.

இதேநேரத்தில் இந்தியாவில் யானைகளும் மாந்தவேலைக்கு உதவியாய்ப் பழக்கப்பட்டு வந்தன. அவற்றை வைத்து எதிரிக் கோட்டைகளை அழிப்பது பொ.உ.மு.2000க்கு முன்னாலும் இருந்திருக்கலாம். இப்பழக்கம் எப்போது ஏற்பட்டதென உறுதியாய்ச் சொல்லமுடியவில்லை. பொ.உ.மு. 1800க்கு அப்புறம், சகடங்களும், யானைகளும், குதிரைகளும் போர் உத்திகளில் சேர்ந்து பயன்படத் தொடங்கின. போரையொட்டிய இலக்கிப்பு முயற்சியில் (logistic effort. இலக்கு= குறிப்பிட்ட இடம்; இலக்கிப்பு= குறிப்பிட்ட இடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தல்.) தேரும், யானையும் ஒன்றுபோல் கருதப்பட்டன தேரை நகர்த்துவதும், யானையை நகர்த்துவதும் அவற்றின் எடை கூடக்கூட ஒரேயளவு மாந்தமுயற்சி கொண்டவையாகக் கருதப்பட்டன. சதுரங்கத்திலும் கூட rook ஐச் சிலர் தேரென்பர். வேறு சிலர் யானையென்பர். இவற்றிற்கிடையே ஒற்றுமைகளும் இருந்தன, வேற்றுமைகளும் இருந்தன. (இரண்டையும் நடத்துவோர் நம்மூரில் ஒரேமாதிரியாய்ப் பாகரென்றே சொல்லப்பட்டார்.)

படையின் முதலலகு பட்டி/பண்டி/பத்தி/பந்தி என்றழைக்கப்பட்டிருக்கலாம். (சரியான சொல் ஏதென்று சொல்லமுடியவில்லை.) இன்றும் பட்டி என்பது கால்நடைத் தொகுதியையும், கால்நடைகள் கட்டும் இடத்தையும் குறிக்கிறது. (முல்லைநில ஊர்கள் பட்டியென அழைக்கப்பட்டன.) 'பண்டி' வண்டியையும், யானையையுங் குறித்தது. வடபுல நூல்களிலும் (மோனியர் வில்லியம்சு அகரமுதலி, மகாபாரதம், அல்பெருனியின் பயணக்குறிப்புகள்), தமிழ் நிகண்டுகளிலும், அகரமுதலிகளிலும், இலக்கியங்களிலும் குதிரைகட்டுந் துறை "பந்தி" என்றழைக்கப்பட்டது. 13 ஆம் நூற்றாண்டுசேர்ந்த பெரும்பற்றப்புலியூர் நம்பி எழுதிய திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தில் இச்சொல் வரும். இக்கட்டுரையில் இப்போதைக்குப் பட்டியென்றே பயில்கிறேன். மற்றசொற்களை ஆய்ந்து முடிவிற்கு வரவேண்டும்.

மகாபாரதப் படி பட்டியில் 1 தேர், 1 யானை, (தேரை/யானை சுற்றி) 3 குதிரைகள், ஒவ்வொரு குதிரையையுஞ்சுற்றி 5 காலாள்கள் இருந்ததாய்ச் சொல்வர். குதிரைகளுக்கும் ஆட்களுக்குமான மொத்தக் கணக்கைச் சரியாய்ப் புரிந்துகொள்ளவேண்டும். (அல்பெருனி இதில் தவறினார்.) 1 தேரிழுக்க 4 குதிரைகளெனில் பட்டியில் மொத்தம் 4+3+3= 10 குதிரைகள் இருந்தன. ஆட்களைக் கணக்கிட்டால் தலைவன், முன்னால் யானைப்பாகன், பின்னால் துணை யானைப்பாகன், தலைவன் வேல்வீச யானைமேலிருந்து உதவும் 2 வீரர்,

யானையோடு கீழோடிவரும் உதவியாளென 1 யானைக்கு 6 பேருண்டு. இதுபோல் தலைவன், தேர்ப்பாகன், மெய்க்காவலன், தலைவனுக்குத் தளவாடம் கொடுத்துதவும் 2 வீரர், தேர்ப்பழுது பார்க்கும் தச்சனென 1 தேருக்கும் மொத்தம் 6 பேருண்டு. எனவே மகாபாரதப் படி, 1 பட்டியில் 2*[6+3*(1+5)] = 48 ஆட்களிருந்தார். தேர், யானை, குதிரைகள், ஆட்களின் விகிதம் (1:1:10:48). சனபதங்களுக்குச் சற்றுமுன்னிருந்த குரு, பாஞ்சால அரசுகளில் இது வழக்கம் போலும்.

மாறாகக் குடிலரின் அருத்தசாற்றப் படி பார்த்தால், 1 தேர் அல்லது 1 யானையைச் சுற்றி 5 குதிரைகள், 1 குதிரைசுற்றி 6 காலாட்கள் என்று வரும். இக்கணக்கின்படி தேர்: யானை: குதிரைகள்: ஆட்கள் ஆகியோரின் விகிதம் 1:1:(4+5):.2*[6+5*(1+6)] = (1:1:14:92) ஆகும். மகத அரசில் இதுவே பழக்கம் போலும். (பாரதக் காப்பியம் பொ.உ.மு. 1000-800 ஐ ஒட்டிய கதையைச் சொல்லும். அக்காப்பியம் பொ.உ.மு.400 களில் எழுதப்பட்டு படிப்படியாக இடைச்செருகல்கள் பெற்று பொ.உ.400 வரை எழுதப்பட்டுக்கொண்டே வந்தது. படை பற்றிய விரிவான குறிப்புகள் பெரும்பாலும் இக்காலகட்டத்தின் பிற்பகுதியில் வரையப் பட்டிருக்கலாம்) பட்டிக்கு மேலும் அக்காலத்தில் படையணிகளுண்டு. இவற்றைக் கீழே கொடுத்துள்ளேன். சங்கதப் பெயர்கள் அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ் விக்கிப்பீடியாவில் சங்கதப்பெயர்களே உள்ளன. தமிழ்ப்பெயர்களை பெருமாய்விற்கு அப்புறமே அடையாளங் கண்டுகொள்ள முடிந்தது. அவற்றைக் கீழே சொல்லியுள்ளேன்.

3 பட்டிகள் = 1 படைமுகம் [சேனாமுகம். மகாபாரதக் கணக்கு (3:3:30:144), அருத்தசாற்றக் கணக்கு (3:3:42:276)];
3 படைமுகங்கள் = 1 குழுமல் [குல்ம. மகாபாரதக் கணக்கு (9:9:90:432), அருத்தசாற்றக் கணக்கு (9:9:126:828)];
3 குழுமங்கள் = 1 கணம் [கண, மகாபாரதக் கணக்கு (27:27:270:1296), அருத்தசாற்றக் கணக்கு (27:27:378:2484)]);
3 கணங்கள் = 1 வானி [வாகினி. மகாபாரதக் கணக்கு (81:81:810:3888), அருத்தசாற்றக் கணக்கு (81:81:1134:7452)];
3 வானிகள் = 1 தானை [ப்ரிதனா மகாபாரதக் கணக்கு (243:243:2430:11664) அருத்தசாற்றக் கணக்கு (243:243:3402:22356)];

3 தானைகள் = 1 குமம் [சமூ
மகாபாரதக் கணக்கு (729:729:7290:34992) அருத்தசாற்றக் கணக்கு (729:729:10206:67068)];
3 குமங்கள் = 1 சேனை [அனீகினி
மகாபாரதக் கணக்கு (2187:2187:21870:104976) அருத்தசாற்றக் கணக்கு (2187:2187:30618:201204)];
10 சேனை = 1 அக்கவானி. [அக்கெஷௌகினி/அக்குரோனி].

இக்கணக்கை நினைத்துப் பார்க்கவே திகைப்பாயுள்ளது. ஒரு சேனையில் 2187 யானை/தேர்களென்பது சாத்தார எண்ணிக்கையல்ல. 2187 யானைகளைப் பழக்கவேண்டுவதும் பெரிய வேலையே. அருத்த சாற்றப் படி நேரடித் தொடர்பிலா ஆள்பேர் அம்பென இன்னும் பலர் படையொட்டி வேலை செய்திருப்பார். மொத்த நாடே எங்கு பார்த்தாலும் படைமயமானது போலும். ஏறத்தாழ 3 சேனைகளைக் குறிக்கும் 6000 யானைகளை நந்தர் வைத்திருந்தாரென அலெக்சாந்தர் காலக் கிரேக்கக் குறிப்புகள் சொல்லும். [பல்வேறு நாடுகளைப் பிடித்த பின்னால், அலெக்சாந்தர் சிந்தாற்றங்கரைக்கு வந்தபோது, பெருமாண்ட நந்தர் படையில் 6000 யானைகளுக்கு மேல் இருந்ததாகவும், கிரேக்கர் அதை வெல்லமுடியாதென்று கருதியும், வீடுவிட்டு தொலைவு வந்த தம் வீரர் பல்வேறு போர்களாற் சோர்ந்தார் என்பதாலும், "இனியும் நகரவேண்டாம், ஊருக்குத் திரும்புவோம்" என்றே அலெக்சாந்தர் முடிவு செய்தானாம் போகும் வழியில் பாபிலோனில் அலெக்சாந்தர் நோய்வாய்ப்பட்டு இறந்துபோனானாம்.]

நந்தரை வென்று, பேரரசுருவாக்கிய மோரியர் இன்னும் ஓரிரு சேனைகள் அதிகம் கொண்டிருக்கலாம். வேந்தரின் கனவு சேனையாற் கூடியது பொ.உ.மு.400- பொ.உ. 0 என்று தெரிகிறது. மோரியருக்கு அப்புறம் சுங்கர், கனகரிடம் சேனைகள் குறைந்தன. சேனையளவு படைகொண்ட செங்குட்டுவன் வடக்கே போகையிலிருந்த கனகர் நலிந்துபோனவர். (செங்குட்டுவனுக்கு முன் தமிழ்வேந்தர் யாரும் சேனைகள் வைத்திருந்தது போல் தெரியவில்லை.) தவிர, இந்தியாவில் எவரும் 10 சேனைகள் வைத்திருந்ததாய் வரலாற்றிற் குறிப்புகளில்லை. மேலேவரும் அக்கவானி போன்றவை முற்றிலுங் கற்பனை உருவகங்களாய் தோற்றுகின்றன. உயர்வுநவிற்சியின் உச்சகட்டமாய் கௌரவர் பக்கல் 11 அக்கவானிகளும், பாண்டவர் பக்கல் 7 அக்கவானிகளும் மகாபாரதத்திற் பேசப்படும். இத்தகைய படையைக் குருச்சேந்திரம் தாங்கியிருக்குமா என்பதே பெருங்கேள்வி.

அடுத்தது அக்கவானி. போர்நடுவே படையினருக்கு ஆணையிடச் சங்கூதும் அளவிற்குப் பெரிதான வானி எனும்பொருளில் பெரும்படையணிக்கு இப்படிப் பெயரிட்டார் போலும். சங்கத்தின் முதற்குறை அங்கம். அங்கத்தின் வலித்த ஒலிப்பு அக்கம். சங்கம்>அங்கம்>அக்கம். வளைவுப்பொருளிலிருந்து கூட்டப்பொருளை முன்கொண்டது போல், சங்கிலிருந்து இங்கும் எண்ணிக்கைப் பொருள் எழுந்தது. அக்கவானி என்ற சொல்லே கற்பனையையுணர்த்தும். மகாபாரதந் தவிர்த்து 'அக்ஷௌகினி' வேறெங்கும் பயின்றது தெரியவில்லை. சங்க இலக்கியங்களில் தானையே பெரிதும் பேசப்படும். (தானைக்குத் தண்டமெனும் பெயருமுண்டு.) தானை பயிலும் சங்கநூல்வரிகளைப் பேசினால் கட்டுரை நீளும். எனவே சேனைபேசும் பழைய நூல்வரிகளை மட்டும் இங்கு விவரிக்கிறேன்.

"இகல்வேந்தன் சேனை" என்பது கலி 108 -1 இல் வரும் சொல்லாட்சி. சிலம்பின் 19 ஆம் காதைமுடிவில் வரும் வெண்பாவில் "விற்பொலியும் சேனை" என்ற கூற்று வரும். இவ்வெண்பா பிற்காலப் புலவரால் இடைச்செருகப்பட்டதென வேங்கடசாமிநாட்டார், உரையிற் கூறுவார். காதைகளின் இடைவரும் வெண்பாக்கள் இளங்கோ எழுதியதல்ல என்று "சிலம்பின் காலம்" நூலில் நான் சொன்னேன். "வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன் புட்கைச் சேனை பொலியச் சூட்டி" என்பது சிலம்பு 25 ஆம் காதையின் 146-147 ஆம் வரிகள். "தண்டத் தலைவரும் தலைத்தார்ச் சேனையும் வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத" என்பது சிலம்பு 26 ஆம் காதையில் 80-81 ஆம் வரிகள். வஞ்சியிலிருந்து வடக்கேகிய படைகள் கடல்விளிம்பைத் தொட்டுப்போந்தனவாம். விடாது "கொங்குவஞ்சியே உண்மை, குடவஞ்சி இல்லை"யெனச் சொல்லிவரும் திரு.நா.கணேசன் இந்த இருவரிகளையும், சேனையின் அளவுகளையும் பார்த்தால் ஒருவேளை குடவஞ்சியின் இருப்பு அவருக்குப் புரியக்கூடும்.

அதே 26 ஆம் காதையில் செங்குட்டுவன் நூற்றுவர் கன்னரின் சஞ்சயனுக்குச் (= தூதனுக்கு) சொல்வதாய் 162-165 ஆம் வரிகள் வரும். "கூற்றங் கொண்டுஇச் சேனை செல்வது நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக் கங்கைப் பேர்யாறு கடத்தற்கு ஆவன வங்கப் பெருநிரை செய்க தாம்" என்றுவரும். செங்குட்டுவன் வெறுந்தானைகளைக் கொண்டிருந்த மன்னனல்லன். பெருஞ்சேனைகளைக் கொண்டு, கனகரைப் பொருதுமளவிற்கு வடக்கே போனவன். மேலும் சிலம்பு 25ஆம் காதையில் 191-194ஆம் வரிகள் "தாழ்கழல் மன்னன் தன்திரு மேனி வாழ்க சேனா முகம் என வாழ்த்தி இறைஇகல் யானை எருத்தத்து ஏற்றி அறைபறை எழுந்ததால் அணிநகர் மருங்கென்" என்றுவரும்.

”தம்பெருஞ் சேனையொடு வெஞ்சமம் புரிநாள்” என்பது மணிமேகலை 8.59. இருபெரும் மன்னர் மணிபல்லவப் புத்தபீடிகையை தாமே கொள்வதற்காக தம்பெருஞ் சேனைகளால் சண்டையிட்டாராம் அடுத்து, சேர, பாண்டியரின் யானை, தேர், குதிரை மாவொடு, வயவர் நிரம்பிய சேனைகளோடு வஞ்சியிற் பொருதி சோழன் காரியாற்று மாவண் கிள்ளி அடைந்த வெற்றி பற்றி,

**வஞ்சியினிருந்து வஞ்சி சூடி**
**முறஞ்செவி யானையும் தேரும் மாவும்**
**மறங்கெழு நெடுவாள் வயவரும் மிடைந்த**
**தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத்தலை வந்தோர்**
**சிலைக்கயல் நெடுங்கொடி செருவேற் றடக்கை**
**ஆர்புனை தெரியல் இளங்கோன் தன்னால்**
**காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை**
**வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி**
**ஒளியொடு வாழி ஊழிதோ றூழி.**

என்று மணிமேகலை 19, 120-128 வரிகள் சொல்லும். இவைபோக, சேனைத்தலைவர் பற்றி நாலாடியார் 3 ஆம் பாட்டும், சேனை, சேனாபதி பற்றி நான்மணிக்கடிகை 52, 55 உம், கார்நாற்பது 20 உம் கூறும். இக்கூற்றுகளைப் பார்க்கும்போது சேனையளவிற்குத் தமிழர் படைதிரட்ட முடிந்தது பொ.உ.மு.200க்கும் அப்புறமென்றே தெரிகிறது. பொ.உ.மு.462 க்கு அருகில் முதற்கரிகாலன் சேனைகொண்டு படையெடுத்து அசாதசத்துவின் மகன் உதயபட்டனோடு பொருதினானா அல்லது ஒரு சில தானைகளைக் கொண்டு பொருதினானா என்பது தெரியவில்லை. சேனைகளுக்கான ஆள்-அம்பு வலுவைப் பார்க்கும்போது அவ்வளவு முந்தையகாலத்தில் பெருஞ்சண்டை நடந்திருக்குமா என்றும் ஐயப்படவேண்டியுள்ளது. இதேபோல் தான் மகாபாரதப் போர்ச்செய்திகளும் பின்னால் சேர்க்கப்படவையோ என்று ஐயுறுகிறோம். படைகள் பற்றி வேறொரு கட்டுரையில் விரிவாய்ப் பார்க்கலாம். இதுகாறும் சொன்னவற்றால், வளைவு, கூட்டம், எண்ணிக்கை எனும் 3 பொருள்களின் வழியே பார்த்தால், சங்கம் என்பது அடிப்படையில் தமிழ்ச்சொல்லாகவே தெரிகிறது.
படம் உதவி: விக்கிபீடியா
https://commons.wikimedia.org/wiki/File:Neptunea_-_links%26rechts_gewonden.jpg

---

தொடர்பு: இராம.கி. <poo@giasmd01.vsnl.net.in>
http://valavu.blogspot.com

## 13. தொல்காப்பியமும் மொழியியலும்

– முனைவர். வீ. ரேணுகாதேவி

இலக்கணம் என்பது மொழியை மொழியால் விளகுகின்ற ஒரு கலை. நடனம், நாடகம், பொறியியல், விலங்கியல் போன்ற படைப்புக்களை மொழியால் விளக்குகின்றோம். இங்கு மொழிவேறு, அந்த படைப்புக்கள் வேறு. மொழியால் மொழிக்குப் புறத்து இருப்பவற்றை விளக்கலாம். மொழியை விளக்க வேண்டுமானால் என்ன செய்வது, மொழியை மொழியால் தான் விளக்க வேண்டும். அதுவே இலக்கணம் எனப்படும். இந்தப் பணியை ஏறத்தாழ இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே தொல்காப்பியர் மிகச் செம்மையாகச் செய்திருக்கிறார்.

மொழியை அறிவியல் நோக்கோடு ஆராய முற்படுவது ஆகும். மொழியைப் பற்றிய உண்மைகளைக் கண்டறிவதையே தன் நோக்கமாகக் கொண்டுள்ள மொழியியலாளன் தன் ஆய்வின், எல்லையை இலக்கண இலக்கியங்களோடு சுருக்கிக் கொள்வதில்லை. எங்கெங்கு மொழி பயன்படுகின்றதோ அங்கெல்லாம் இவன் ஆய்வு நோக்கம் மொழியைப் பின்பற்றி ஊடுருவிப் பாய்கிறது என்கிறார் பொற்கோ (1973:128).

நாம் பெற்ற அறிவையெல்லாம் வெளிப்படுத்த உதவும் ஒரு கருவி மொழி. அந்த மொழியைப் பற்றிய எல்லா உண்மைகளையும் கண்டறிந்து வாங்கிப் பல்வேறு பயன்களைத் தருவதாக அமைவது மொழியியல்.

மொழியியலாளர்கள் எல்லோரும் இலக்கண இலக்கியங்களுக்கு மிகச் சிறந்த இடமளித்து, அதற்கு மேலும் குழந்தை மொழி, பேச்சு மொழி, கிளை மொழி ஆகியவற்றிற்கும் இடமளிக்கின்றார்கள்.

மொழியியலாளன் ஆய்வு இலக்கண இலக்கியங்களோடு நின்று விடுவதில்லை. மொழி எங்கெல்லாம் பயன் படுகின்றதோ அங்கெல்லாம் மொழியியலாளனின் ஆய்வு நோக்கம் மொழியைப் பின்பற்றி அமையும்.

ஒளியும், சொல்லும், தொடரும் இவற்றால் உண்டாகும் பொருண்மையும் உலக மொழிகள் எல்லாவற்றுக்கும் பொதுவானவை. மொழியியலில் இவைதான் இன்றியமையாத இடம் பெறுகின்றன. இவற்றின் துனைகொண்டுதான்

மொழியியல் பல்வேறு படிப்பியல்களோடு (Disciplines) தொடர்பு கொண்டு செழித்து வளருகின்றது.

ஒலி, ஒலியமைப்பு, சொல், சொல்லமைப்பு, தொடர், தொடரமைப்பு, பொருண்மை ஆகிய இவையெல்லாம் ஒவ்வொரு மொழியிலும் காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம் மாறிக் கொண்டிருக்கின்றன. இடத்திற்கு இடம் ஒரு மொழியிலேயே ஏற்படும் மாற்றங்கள் பற்றியும், காலத்திற்குக் காலம் ஏற்படும் மாற்றங்கள் பற்றியும் மொழியியல் விளக்கம் அளிக்கின்றது.

திராவிட மொழிகளில் காணப்படும் மிகப் பழமையான இலக்கண நூல் தொல்காப்பியம். இந்நூல் கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் தோன்றியது என அறிஞர்கள் கருதுகிறார்கள். தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள், என்னும் மூன்று அதிகாரங்களைக் கொண்டது. தமிழ் மொழிக்கு இலக்கணம் கூறவந்த தொல்காப்பியர் அம்மொழியின் இலக்கணத்தை எழுத்து, சொல், என்னும் இரண்டு அதிகாரங்களில் விளக்கிச் சொல்லிப் பின்னர் பொருள் அதிகாரம் என்னும் ஒன்றைப் பற்றி விளக்கிக் கூறுகிறார்.

மொழியியல் மொழியின் அமைப்பை அக அமைப்பு புற அமைப்பு என்னும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கும் ஒலியியலும், பொருண்மையியலும் புற அமைப்பிலும், ஒலியன்யியல், இலக்கணம் (உருபனியல், தொடரியல்), உருபொலியனியல் அக அமைப்பிலும் அமையும். ஒலியியலையும் பொருண்மையையும் விளங்கிக்கொள்ள புற உலகின் அறிவும் தேவைப்படும். எனவே அவை புற அமைப்பில் அமைந்துள்ளன. ஒலியனியல், இலக்கணம், உருபொலியனியியல் இவை பற்றி அறிந்து கொள்ள மொழிபற்றிய அறிவு மட்டுமே போதுமானது. எனவே அவை அக அமைப்பில் அமைந்துள்ளன.

ஒரு மொழியின் அமைப்பினை அறிய ஒலியியல் அறிவு மிகத் தேவை. இதை பண்டை இலக்கண ஆசிரியர்களும் நன்கு உணர்ந்திருந்தனர். எழுத்துக்களைப் பற்றிக் கூறப் புகுந்த தொல்க்காப்பியர் பிறப்பியல் என்ற இயல் ஒன்றை வைத்து அவ்வியலில் பல்வேறு எழுத்துக்களின் பிறப்பைப் பல்வேறு நூற்பாக்களின் வழி விளக்கிச் செல்கிறார்.

ஒரு மொழியில் காணப்படும் பல்வேறு ஒலிகளை எழுப்பப் பல்வேறு மனித உறுப்புகள் உதவுகின்றன என்று இலக்கண ஆசிரியர்களும் மொழியியலாளரும் கூறுகின்றனர். ஒலியுறுப்புகளில் (Speech Organs) வயிற்றுப்பகுதியும்,

தொண்டைப்பகுதியும், தலைப்பகுதியும், சிறந்த பங்கினை வகுக்கின்றன. இதனை தொல்காப்பியரும்

உந்தி முதலா முந்து வளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலை இ

(தொல். )

என்று கூறுகின்றார். இன்றைய ஒலியியலாளர்கள் கூறுகின்ற அளவிற்குத் தொல்காப்பியத்தில் தெளிவு இல்லாமல் இருந்த போதிலும் கூடப் பல்வேறு ஒலிகளின் பிறப்பைச் சிறந்த முறையில் கூறிச் சென்ற பெருமை தொல்காப்பியரைச் சாரும்.

ஒலிகள் பிறப்பதற்குக் காரணமான உறுப்புக்களாக நெஞ்சு (Lungs), மிடறு (Larynx), தலை (Buccal Cavity), மூக்கு (Nasal Cavity), என்ற நான்கையும் பல், இதழ் போன்றவற்றையும் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

பொதுவாக ஒலிகளை (Sounds) இரண்டு வகையாகப் பிரிக்கல்லாம். அதன் அடிப்படையில் ஒரு மொழியில் காணப்படும் ஒலியன்களையும் உயிர், மெய் என இருவகையாகப் பிரிக்கலாம். இப்பிரிவினை தொல்காப்பியத்திலும் காணமுடிகின்றது. மொழியியலாளர்கள் உள்ளேயிருந்து வரும் காற்று எவ்விதமான தங்கு தடையின்றி வாயின் வழியாக வெளிப்படும் பொழுது உயிர் எழுத்துக்கள் பிறக்கின்றன என்பர். எனவே காற்று எவ்வாறு புறப்பட்டதோ அவ்வாறே தங்கு தடையின்றி வருவதால் உருவானவை உயிரொலிகள் என்பது மொழியியல் கொள்கை. இதனை தொல்காப்பியர்;

பன்னீ ருயிரும் தந்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்

( தொல். எழுத்து. 84)

எனக் குறிப்பிட்டுள்ளார். எழுத்துக்கள் முப்பது எனக் கூறிய தொல்காப்பியர் அவற்றை

ஔகார இறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப

(தொல். எழுத்து. 8)

எனவும்

னகர விறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப

(தொல். எழுத்து. 9)

எனவும் கூறித் தமிழ் எழுத்துக்களை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கிறார்.

பன்னீருயிரும் தந்நிலை திரியா எனக் கூறுவதிலிருந்து உயிர் எழுத்துக்கள் எவ்வித தடையுமின்றி, குறுக்கீடுமின்றி எனப் பொருள் கொள்ளலாம். இக்கருத்து உயிர்களின் பண்பு பற்றி இன்றைய மொழியியலாளர் கொண்டுள்ள கருத்துடன் பொருந்தி நிற்கிறது என்கிறார் அகத்தியலிங்கம் (1977:18).

அவற்றுள்;

அ ஆ ஆயிரண்டங்காந் தியலும்
இ, ஈ, எ, ஏ ஐ யென விசைக்கு
மப்பா லைந்து மவற்றோ ரன்ன
அவைதா
மண்பன் முதனா விழிம்பு லுடைய
உ, ஊ, ஒ, ஓ, ஔவென விசைக்கு
மப்பா லைந்து மிதழ் குவிந் தியலும்

உயிர் எழுத்துக்களை தொல்காப்பியர் மூன்று வகைகளாகப் பிரிக்கின்றார். அவை 'அ' 'ஆ' என்பவை ஒரு வகையாகவும், 'இ', 'ஈ', 'எ', 'ஏ', 'ஐ' என்பனவற்றை வேறு ஒரு வகையாகவும், 'உ', 'ஊ', 'ஒ', 'ஓ', 'ஔ' என்பனவற்றை மூன்றாவது வகையாகவும் பிரிக்கின்றார். இவற்றை முறையே Open unrounded, Front unrounded, Back rounded எனக்கூறலாம். இவற்றுள் உ, ஊ, என்பவை பின்னுயிர் (Back Vowels) என்றும், இ, எ போன்றவை முன்னுயிர் (Front Vowels) என்றும், அ, ஆ போன்றவை நடுவுயிர் (Central Vowels) என்றும் இன்றைய மொழியியலில் அழைக்கப் பெறுகின்றன.




மெய்யெழுத்துக்களை வல்லெழுத்து, மெல்லெழுத்து இடையெழுத்து எனத் தொல்காப்பியர் மூன்று வகையாகப் பிரிப்பார். வல்லெழுத்துக்கும், மெல்லெழுத்துக்கும் இடையேயுள்ள வேற்றுமை குறைவு. இரண்டும் பிறக்கும் இடங்கள் (Point of articulation) ஒன்றே. இவற்றை ஓரிட மெல்லினம் (Homorganic nasal)

என்று அழைப்பர் க, ச, ட கரங்களின் பிறப்பினைக் கூறும் சூத்திரத்திலேயே ங, ஞ, ண காரங்களின் பிறப்பினையும் கூறுகிறார் தொல்காப்பியர்.

மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின வாயினும்
மூக்கினம் வளியிசை யாப்புறத் தோன்றும்
(தொல். எழுத்து. 100)

தொல்காப்பியர் தம்முடைய நூலில் தமிழ் எழுத்துக்கள் எனக்குறிப்பிடுவது தமிழ் ஒலியன்களை (Phonemes) என்கிறார் அகத்தியலிங்கம் (1977:19). பல்வேறு மாற்றொலிகளை உள்ளத்தில் கொண்டு அவை தனி ஒலியன்களாகாத தன்மையை முன்னிறுத்தியே எழுத்துக்கள் முப்பது என்றார்.

மொழியியல் கருத்துக்கள் வளராத நிலையில் போன்ற ஒலிகள் எல்லாம் தமிழில் இருக்கின்றது. ஆனால் க, ங, த போன்றவற்றை மட்டுமே தமிழ் இலக்கண ஆசிரியர்கள் குறித்துள்ளனர் என்ற வினாவிற்கு விடையிறுக்க முடியாத நிலையினையும் இதனை உள்ளத்தே நிறுத்தி அவை ஒலியன்கள் ஆகா என்ற எண்ணத்தில் தமிழ் எழுத்துக்கள் முப்பது என்று இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தொல்காப்பியர் கூறிச் சென்ற நிலயினையும் நோக்கின் தமிழ் இலக்கணப் பாரம்பரியத்தின் பெருமை நன்கு விளங்கும். கடல், தங்கம், அகம், போன்ற சொற்களின் 'ககரம்' வருவதும் அவற்றுள் முதல் சொல்லில் ஆங்கில எழுத்தாகிய 'k' என்பதைப் போன்று மொழிக்கு முதலில் ககரம் மிக வல்லொலியாகவும் 'தங்கம்' என்பதில் ஙகரத்திற்குப் பின்னால் வருகிற நிலையில் 'g' என்ற ஆங்கில ஒலியைப் போன்று இசைஒலியாகவும் (Voiced) அகம் என்ற சொல்லில் ஆங்கில ஒலியான 'h' போன்று இரண்டு உயிர் எழுத்துக்களிடையே உரசொலியாக (Fricative) வும் உச்சரிக்கப்படுகின்றது. இவ்வாறு இவ்வொலிகள் தம்முள் ஒன்றி வருகின்ற இடத்தில் மற்றொன்று வராத நிலையைத் துணை நிலை வழக்கு (Complementary Distribution) என்பர் மொழியியலாளர். இவ்வாறு வரும் ஒலிகள் அனைத்தையும் ஒரே ஒலியனாகக் கொண்டே இல்க்கணம் அமைப்பர் (அகத்தியலிங்கம் 1977:20).

தொல்காப்பியர் ஒலியன், மற்றொலி, துணைநிலை வழக்கு என்றெல்லாம் விளக்கிப் பொதுவான ஒரு மொழிக் கொள்கையை உருவாக்கவில்லை எனினும், இக்கொள்கைகளை உள்ளத்தே கொண்டு தமிழ் எழுத்துக்களைப் பற்றிக் கூறுவதில் அவருடைய ஒலியியல் (Phonetics) ஒலியனியல் (Phonemics) அறிவு நன்கு விளங்குகின்றது.

எழுதப் படுதலின் எழுத்து என மரபிலக்கணத்திலிருந்து அறிய முடிகின்றது. இது மட்டும் தான் எழுத்தின் இலக்கணமா? பல், கல் என்பவை வேறுபட்ட பொருள் உடையவை எப்படி அறிந்து கொள்ள முடிகின்றது. இரண்டு சொற்களிலும் அல் என்பது ஒன்றாகவே இருக்கின்றது.

பல் ப் அ ல்

கல் க் அ ல்

இங்கு பொருள் வேறுபாட்டை உணர்த்த ப், க் என்னும் இரு ஒலிகளே காரணமாக இருக்கின்றன. இலக்கணத்தில் இக்கோட்பாடு இருந்த போதிலும் மொழியியலே இதனைத் தெளிவாக விளக்குகின்றது. மொழியியல் கோட்பாட்டின் படி எவை பொருள் வேறுபாட்டிற்கு அடிப்படைக் காரணமாக அமைகின்றனவோ அவை ஒலியன்கள் எனப்படுகின்றன. இலக்கணத்தில் அவை எழுத்துக்கள் எனப்படுகின்றன.

ஒரு மொழியில் பல ஒலிகள் இருக்கலாம். அவை அனைத்தும் பொருள் வேறுபாட்டைத் தருவதில்லை. குறிப்பிட்ட சூழலில் வரும் போது பொருள் வேறுபாட்டிற்கு அடிப்படையான ஒலியன் மாற்றொலியாக மாறுகின்றது.

மொழியில் ஒட்டு மொத்தமாகக் காணப்படுபவை ஒலிகள் (Phones)

பொருள் வேறுபாட்டைத் தருபவை ஒலியன்கள் (Phonemes)

சூழலால் கட்டுண்டு திரிபவை மாற்றொலிகள் (Allophones)

மரபிலக்கணத்தில் ஒலிகள், ஒலியன்கள், மாற்றொலிகளுக்குச் சான்றுகள் காணப்பெறுகின்றன. குறில் இகரம், குற்றியலிகரம், குறில் உகரம், குற்றியலுகரம் என நான்கு ஒலிகள் காணப்படுகின்றன.

இவற்றில் ஒரு மாத்திரை அளவுடைய குறில் இகரமும், உகரமும் பொருள் வேறுபாட்டைத் தந்து தனித்தனி எழுத்து (ஒலியன்) ஆகின்றன. குற்றெழுத்து அல்லாத நெட்டெழுத்து மற்றும் பிறவகை எழுத்துத் தொடர்ச்சியோடு மொழியீற்றில் வல்லெழுத்தை ஊர்ந்து வரும் குறில் உகரம் குற்றியலுகரம் என்ற சார்பெழுத்து (மாற்றொலி) ஆகத்திரிகின்றது.

இதே போன்று அசைச் சொல் மியாவில் மகரத்தை ஊர்ந்து வரும் (ம்+இ) இ குறுகி ஒலிக்கின்றது. இவ்வாறு குறுகும் குற்றியலிகரம் என்ற சார்பெழுத்து (மாற்றொலி) ஆகின்றது.

மரபிலக்கணங்களில் குறிப்பாகச் சொல்லப்பட்டவை எல்லாம் மொழியியல் விளக்கிக் கூறுகின்றது. சொல் இலக்கணத்திலும் மொழியியல் கோட்பாடுகளின் அடிப்படையில் சில விளக்கங்களைப் பெறலாம்.

சொல்லதிகாரம், 1. கிளவியாக்கம் 2. வேற்றுமையியல் 3. வேற்றுமை மயங்கியல் 4. விளிமரபு 5. பெயரியல் 6. வினையியல் 7. இடையியல் 8. உரியியல் 9. எச்சவியல் என ஒன்பது இயல்களைக் கொண்டது. அவற்றுள் முதல் நான்கு இயல்கள் தொடரியல் பற்றியும், எஞ்சிய ஐந்து இயல்கள் உருபனியல் பற்றியும் விளக்குகின்றது. சொற்களின் வருகை (External distribution of words) பற்றி முதல் நான்கு இயல்களிலும், சொற்களின் கட்டமைப்பு (Internal structure of the word) பற்றி கடைசி ஐந்து இயல்களிலும் விளக்கப்பட்டுள்ளன.

தமிழில் சொல், கிளவி என்றால் ஒரே ஒரு பொருளை உணர்த்தக் கூடியதையும் (வா, போ) ஒன்றிற்கு மேற்பட்ட பொருண்மைகளைக் குறிக்கும் உருபுகளைக் கொண்ட சொல்லையும், (வா+ந்+ஆன்>வந்தான்) குறிக்கும். இங்கு 'வா' என்பது ஒரு பொருள் தரக்கூடிய ஒர் உருபு, வந்தான் என்பது பொருள்த் தரக்கூடிய மூன்று உருபுகளைக் கொண்டது.

வா - அடிச்சொல்

ந் - இறந்தகால இடை நிலை

ஆன் - எண், பால், இடம் காட்டும் விகுதி

தொல்காப்பியர் குறிப்பிடும் பல வினைமுற்று விகுதிகள் ஒன்றிற்கு மேற்பட்ட பொருண்மைகளைச் சுட்டுவனவாக உள்ளன. ஒலி, ஒலியனியலில் ஒலி, ஒலியன், மாற்றொலி என காணப்படுவதைப் போன்றே உருபனியலில் உருபு, உருபன், மாற்றுருபன் என்னும் பாகுபாடுகள் காணப்படுகின்றன.

மரபிலக்கணங்கள் இறந்த காலத்தை உணர்துவதற்கு நான்கு இடைநிலைகளை தொகுத்துக் கூறுகின்றன.

தடற வொற் றின்னே ஐம்பால் மூவிடத்து
இறந்த காலந் தருந் தொழில் இடைநிலை

(நன். 142)

த், ட், ற், இன் என்பன இறந்த காலத்தை உணர்த்தும் என்பது விளக்க மொழியியல் ஆகும்.

-த்- செய்தான் செய் + த் + ஆன்

கொய்தான் கொய் + த் + ஆன்

-ட்- உண்டான் உண் + ட் + ஆன்

கண்டான் காண் + ட் + ஆன்

-ற்- சென்றான் செல் + ற் + ஆன்

தின்றான் தின் + ற் + ஆன்

-இன்- பேசினான் பேசு + இன்+ ஆன்

வருந்தினான் வருந்து +இன்+ஆன்

இந்நான்கு இறந்தகால இடைநிலைகளில் அடிப்படையானவை த், இன் என்ற இரண்டே. த் என்னும் இறந்த கால இடைநிலையின் வேறுபட்ட வடிவங்களே -ட்-, -ற்- என்பன. மரபிலக்கணங்கள் இறந்த கால வினைமுற்றுகளில் இருப்பவற்றைப் பகுத்து விளக்குகின்றார்கள். மொழியியலாளர்கள் இவற்றிற்கு மேலும் சில விளக்கங்களைக் கூறுகின்றார்கள்.

-த்-, -ட்-, -ற்- என்பன ஒர் அமைப்பிலும் -இன்- என்பது வேறோர் அமைப்பிலும் இடம் பெற்றாலும் அவை உணர்த்தும் பொருள் ஒன்றே, அஃது இறந்த காலம் என்பதாகும். இங்கு அடிப்படை வடிவமான (தீணீsமீ யீஷீக்ஷீனீ) -த்- குறிபிட்ட வினை அடிச்சொற்களோடு இணையும் பொழுது சூழலுக்கு ஏற்ப வடிவ மாற்றம் பெறுகின்றன.

த் > ட் / {ண், ள்}

உண் +த்+ ஆன் > உண்டான்

ஆள் + த்+ ஆன் > ஆண்டான்

த் > ற் / { ள், ல்}

தின் + த் + ஆன் > தின்றான்

கொல் + த் +ஆன் > கொன்றான்

அடிப்படை வடிவமான -த்- அடுத்து வரக்கூடிய ஒலியன் காரணமாக வடிவமாற்றம் பெறுவதை ஒலியன்னால் கட்டுண்ட மாற்றுருபு (Phonologically conditioned allomorph) என மொழியியலார் குறிப்பிடுவர்.

-இன்- என்னும் உருபும் இறந்த காலத்தைக் காட்டக் கூடிய ஒர் இடைநிலையே. இது பெரும்பாலும் குற்றியலுகர ஈற்று வினையடியோடு வருவதால் இதை உருபனால் கட்டுண்ட மாற்றுருபு (Morphologically conditioned allomorph) எனக் குறிப்பிடுவர். மரபிலக்கணத்தில் விளக்க நிலையில் குறிப்பிடப்பட்டுள்ள த், ட், ற், இன் என்னும் இறந்த கால இடைநிலைகளை மொழியியல் அடிப்படையில் அவற்றின் வடிவ மாற்றத்திற்கானக் காரணங்களை விளக்கிக் கூறலாம்.

தொல்காப்பியத்தில் உருபு, உருபன், மாற்றுருபு என்பனவற்றிற்கான விளக்கங்களும், கலைச் சொல் பயன்பாடும் காணப்பட வில்லையெனினும் அவை பற்றிய செய்திகள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

தொல்காப்பியத்தில் சொல்லதிகாரம் சொல்லியலை மட்டுமல்லாது தொடரியல் பற்றிய பல கருத்துக்களையும் விளக்குவதாகவே அமைந்துள்ளது.

கிளவியாக்கத்தில் உள்ள 61 நூற்பாக்களில் ஐம்பதிற்கும் மேற்பட்டவை தொடரியல் விளக்கங்களை அளிக்கின்றது என்பது அகத்தியலிங்கனார் (1977 : 29) கருத்து.

கிளவியாக்கம் என்ற தொடர் பல கிளவிகளால் அதாவது சொற்களால் ஆக்கப்படும் தொடர், வாக்கியம் ஆகியவற்றைப் பேசுவது எனப் பொருள் தரும். கிளவியது ஆக்கம் என விரிந்து சொல்லினது தொடர்ச்சி எனப் பொருள் உணர்த்தும்.

எழுவாய்- பயனிலையை ஏற்கும் போது பயனிலை என்னென்ன விகுதிகளை ஏற்கும் என்பனவற்றைத் தொல்காப்பியர்,

" னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்" (488)
" ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்" (489)
"அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே" (492)

போன்ற நூற்பாக்களால் விளக்குகின்றார். இதனை தொல்காப்பியர் 'இயைபு' என்று கூறாமல் 'விகுதி' என்றே சுட்டியிருக்கிறார். எழுவாய்- பயனிலைக்குமிடையே காணப்படும் தொடர்பினை 'இயைபு' என்று மொழியியலார் குறிப்பிடுகின்றனர்.

**முடிவுரை:**

ஒரு துறை பற்றி துல்லியமாக அறிந்து கொள்ள இன்னொரு துறை பற்றிய அறிவும் தேவைப்படுகின்றது. சார்ந்து ஆய்வு செய்யும் போது பல செய்திகளை மிக நுட்பமாக ஆராய்ந்து அறிந்து கொள்ள முடிகின்றது. பல விளக்கங்களைப் பெற முடிகின்றது. அந்த வகையிலே மொழி ஆய்விற்கும் இரு கோட்பாடுகள் உள்ளன. ஒன்று மரபு இலக்கணம் மற்றொன்று அறிவியல் பூர்வமாக மொழியை ஆராயும் மொழியியல். ஒரு மொழியின் அமைப்பினை மட்டுமே விளக்குவது மரபிலக்கணம். ஒட்டுமொத்த மொழிகளின் அமைப்பை விளக்குவது மொழியியல். மொழியியல் நோக்கோடு மரபிலக்கணங்களையும் உரைகளையும் நோக்கும் போது பல அரிய செய்திகளை அறிந்து கொள்ள முடிகின்றாது. பல விளக்கங்களைப்

பெற முடிகின்றது. இலக்கணம்  முழு பழம். மொழியியல் தோல் உரித்துக் கொடுக்கின்றது. இலக்கணத்தால் உணர்த்த முடியாத சில கருத்துக்களை முழுமையாக விளக்க மொழியியல் துணை நிற்கின்றது.

**துணைநூற்பட்டியல்:**


1. ச. அகத்தியலிங்கம்,1977
மொழியியல் - வாழ்வும் வரலாறும்
க. புஷ்பவல்லி, அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்
2. ச. சுபாஷ் சந்திரபோஸ், 2000
சொல்லியல் ஆய்வுகள்
மெய்யப்பன் தமிழாய்வகம், சென்னை
3. வீ. ரேணுகா தேவி, 2010
சாஸ்திரியாரின் சொல்லதிகார அணுகுமுறையும்
உருபனியல் கோட்பாடும்
செந்தமிழ், (தொகுதி :52, பகுதி : 2, & தொகுதி : 53, பகுதி : 3) பக். 7-12.
4. கோதண்டராமன் பொன், 1973
இலக்கண உலகில் புதிய பார்வை


---


தொடர்பு:
முனைவர். வீ. ரேணுகாதேவி
தகைசால் பேராசிரியர்
மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலைகழகம்
மதுரை-21.
<prof.renuga@gmail.com>

## 14. நிலவும் கதிரும் போல் நிலைத்திடும் எழுத்து

**– தேமொழி**

நிலவும் கதிரும் போல் வாழ்க நின் புகழ் எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் வாழ்த்தும் புறநானூற்றுப் பாடலொன்று உள்ளது. சந்திர சூரியன் உள்ளவரை இக்கொடை நிலைக்கட்டும் என்று கூறுவதை ‘சந்திராதித்தவரை தொடர்வதாக’ என கல்வெட்டுச் செய்திகளிலும் காணலாம். நிலவும் கதிரும் போல் நிலைத்திடும் எழுத்தைப் படைத்த எழுத்தாளர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. ஒவ்வொரு மொழிக்கும் ஓரிருவர் தேறலாம். பெரும்பாலும் நிலைத்திடும் எழுத்தின் தகுதி எக்காலத்திற்கும் பொருந்தும் அறிவுரையாகவே இருந்து வந்திருக்கிறது. அழகியல் இலக்கியங்கள் அத்தகுதி பெறுவது சொற்பம்.

தனது வாழ்நாளில் ஒரே ஒரு நூல் மட்டுமே எழுதி வரலாற்றில் இடம் பிடிப்பது எழுத்தை மூச்சாகக் கருதும் எந்த ஒரு எழுத்தாளருக்கும் இருக்கும் விருப்பமே. இத்தகைய வாழ்க்கை எழுத்தாளர் யாவருக்கும் அமைவதில்லை. நாம் யாரென முகமறியாத வள்ளுவர் எழுதி இரண்டாயிரம் ஆண்டுகள் கடந்த திருக்குறளை நாம் அறிவோம். இன்றும் உலகில் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்படுகிறது. இன்றும் அவர் நூல் தொடர்ந்து பதிப்பில் இருக்கிறது. அக்காலத்தில் தமிழர் ஒவ்வொருவரும் தம் வீட்டில் ஒரு மலிவுவிலை திருக்குறள் கையடக்கப் பதிப்பையாவது வைத்திருப்பார்கள். இன்றும் இணையத்தில் பல வலைத்தளங்கள் திருக்குறளைத் தாங்கி இருக்கிறது. தினம் ஒரு குறள் என்ற முயற்சி நடக்கிறது. குறள்மலை என்ற திட்டம் துவங்கி குறள்கள் அனைத்தையும் கல்வெட்டில் பொறிக்கும் முயற்சியிலும் இக்காலத் தமிழர் ஈடுபட்டுள்ளனர். வடஇந்தியரும் தமிழர் ஆதரவைப் பெறும் நோக்கில் குறள் குறித்துப் பாராட்டுதல்களை மொழிகிறார்கள். கங்கைக் கரையில் வள்ளுவருக்கு இடமளிப்பதாக உதட்டளவில் உறுதி கூறுகிறார்கள். எந்த ஒரு தமிழருக்கும், பள்ளி செல்லும் சிறுவர் உட்பட ஓரிரு குறள்களை நினைவில் இருந்து கூற இயலும்.

மக்கள் மத்தியில் புகழ் பெற்ற ஓர் எழுத்தாளர் எனில் அவர் திருக்குறளுக்கு உரை எழுதி வெளியிட்டிருப்பார், ஒரு சிலர் தாமறிந்த பிற மொழியில் மொழி பெயர்க்கவும் செய்திருப்பார்கள். அயல் நாட்டவர், உள்நாட்டவர், தமிழர், பிற மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழார்வலர் எனப் பலரும் இது போன்ற

முயற்சிகளை முன்னெடுத்திருப்பர். புகழ் பெற்ற எழுத்தாளர் பட்டியலில் இடம் பிடிக்க விரும்புபவர் தகுதி என்ற ஒரு எழுதப்படாத விதியாகவும் இது அமைந்து விட்டிருக்கிறது.




பல உள்நாட்டு அயல் நாட்டு தமிழ்ச் சங்கங்கள் என்றால் திருவள்ளுவர் படமின்றி இருக்காது, திருக்குறள் ஒப்புவிக்கும் போட்டி, வினாடிவினா எனப் பல போட்டிகளும் உலகத்தமிழர் அரங்கில் அரங்கேறி வருகிறது. தமிழ் என்றால் அதன் அடையாளம் வள்ளுவர் என்ற நிலையை எட்டி வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்த வான் புகழ் கொண்ட தமிழ்நாடு என்று தான் பிறந்த மண்ணுக்கும் பெருமை சேர்த்துச் சென்றுள்ளார் குறள் மூலம் அறநெறி கூறிய வள்ளுவர். வள்ளுவர் யார் அவர் பின்புலம் என்ன என்று உறுதியாகக் கூற இயலாத தடுமாற்றம் நம்மிடம் இருப்பது போல, அவர் எத்தனை நூல்கள் எழுதினார் என்பதையும் நாம் உறுதியாகக் கூற இயலாது.  அவர் திருக்குறள் செய்து வரும் சாதனையுடன் சில சமய நூல்கள் மட்டுமே போட்டி போட இயலும்.

தமிழறிஞர் உ. வே. சாமிநாதையரின் ஆசிரியரும், 19-ம் நூற்றாண்டில் தமிழில் அதிக நூல்களை இயற்றியவர் என்ற புகழ் பெற்ற திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையை ஒரு ஒப்பிடுதலுக்காக எடுத்துக் கொள்ளலாம்.  இவர் புராணங்கள், காப்பியங்கள், பிள்ளைத் தமிழ் நூல்கள், அந்தாதி, கலம்பகங்கள், கோவைகள், எண்ணற்ற தனிப் புராணங்கள் என  சுமார் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட பாடல்களை இயற்றியதாகக் கூறப்படுகிறது. ஆனால், இன்று ஒரு சராசரி இளைய தலைமுறை தமிழரிடம் கேட்டால் இவர் குறித்து ஒரு சில குறிப்புகளை அவரால் கொடுக்க இயலுமா என்பது ஐயமே. முதுமையை நோக்கிச் செல்பவர்கள் அவரை அறிந்திருந்தாலும் பெரும்பாலோரால் அவர் எழுதிய பாடல் என ஒன்றை தங்கள் நினைவில் இருந்தும் சொல்ல இயலாது, அது போல அவர் நூலில் இருந்து ஒரு பாடலை எடுத்துக் கொடுத்தால் அது அவருடையது என அடையாளம் காட்டவும் இயலாது. இத்தனைக்கும் பிள்ளைத்தமிழ் நூல்கள் பல இயற்றிய தமிழறிஞர் என்பதால் 'பிள்ளைத் தமிழ் மீனாட்சி சுந்தரம் பிள்ளை' என்று சிறப்பிக்கப்பட்டவர். இவரை அழைப்பித்து தமது ஊரின் கோயில் மீது தலவரலாறு எழுத வைத்துப் பலரும் பெருமைப்பட்டுக்

கொண்ட அளவில் வாழ்ந்தவர். அவரது தமிழ்ப்பணி பரவலாக அறியப்பட்டுப் பெயரும் புகழும் பெற்றிருந்த  தமிழறிஞர் இவர் என்பது மிக விரைவில் மறக்கப்பட்டு வருகிறது.  துணுக்குச் செய்தி அளவிற்கு அவர் குறித்த தகவல்கள் தெரிந்து கொள்ளும் நிலைக்கு அவர் வரலாறு மங்கி இருக்கிறது.

அவர் மட்டுமன்று, நாம் ஒவ்வொருவரும் அறிந்த, ஆர்வத்துடன் வாரப்பத்திரிக்கைகளில் படித்த பல வணிக எழுத்தாளர்கள், அவர்கள் நூல்களைத் தேடித்தேடி வாங்கிப் படிக்கும் அளவிற்கு நம்மைக் கவர்ந்தவர்கள், பற்பல நூல்களையும் கட்டுரைகளையும் எழுதி வந்த எழுத்தாளர்கள் பலரும் காலப்போக்கில் காணாது போய் வருகிறார்கள். நாமறிந்த பல 20 ஆம் நூற்றாண்டு எழுத்தாளர்களின் வரலாறும் மங்கத் தொடங்கியுள்ளது.  அனைவரும் அவர்கள் வாழ்ந்த காலத்தின் உலகைப் படம்பிடித்து கதைகளாகவும், கவிதைகளாகவும், கட்டுரைகளாகவும் நம் சிந்தனையில் தாக்கத்தை ஏற்படுத்தியவர்களே. நம் இளமைக்கால வரலாற்றின் ஒரு பகுதியாக அவர்கள் எழுத்து அமைந்திருந்தது. அவர்கள் எழுத்துகள் சில நம்மைச் செதுக்கியிருக்கும் அளவிற்கு நம் மேல் தாக்கமும் கொண்டிருக்கும்.

நம் ஒவ்வொருவருக்கும் நம்மைக் கவர்ந்த, சென்ற நூற்றாண்டில் நம் சமகாலத்தில் வாழ்ந்த எழுத்தாளர் ஒருவரை அடையாளம் காட்ட இயலும். மாணவப் பருவத்திலேயே எழுத்தாளராகப் புகழ் பெற்ற லக்ஷ்மி என்ற மருத்துவர் திரிபுரசுந்தரி எழுத்திற்காக வாரப்பத்திரிக்கை வெளிவந்த காலத்தில் காத்திருந்த கூட்டத்தினர் உள்ளனர்.  அவர் நூல்கள் திரைவடிவமும் பெற்று அவரைப் புகழின் உச்சியில் உயர்த்திய காலமும் உண்டு.  ஆனால் இன்றைய இலக்கிய வட்டத்தின் இளைய தலைமுறையினர் எத்தனைப் பேர் அவர் பற்றி அறிவார்கள் என்பதை நம்மால் கூற இயலாது.  ஆனால் அறிந்தவர் மிகக் குறைந்த அளவில் இருப்பர் என்பதை மறுப்பின்றி ஒப்புக் கொள்ளும் மனநிலையில் நம்மில் பலர் இருப்போம்.

இதே கருத்துகள் பிறமொழி எழுத்தாளர்களுக்கும் பொருந்தும். ஹாரி பாட்டரை விழுந்து விழுந்து படித்த சிறுவர்கள் இன்று வளர்ந்து பெரியவர் உலகில் நுழைந்து விட்டார்கள்.  அவர்கள் இளமைக்கால வாழ்வின் ஒரு பகுதியாக விளங்கிய ஜே. கே. ரௌலிங் எழுதிய எழுத்துகள் அடுத்த தலைமுறைக்கு செல்லுமா என்பதை உறுதியாகக் கூற இயலாது.  தினம் தினம் நூற்றுக்கணக்கான எழுத்தாளர்கள் இணையம் வழி எழுதத் துவங்கும்  பொழுது போட்டியில் வருங்காலத்தில் அவரும் மறைந்து போகலாம். கடந்த கால எழுத்தாளர்களை இலக்கியத்தைப் பாடமாக எடுப்பவர்கள் மட்டுமே அதிகம் அறிந்த நிலையில் இருப்பார்கள்.

காலம் கடந்து வாழும் சாதனை படைக்கும் ஒரு எழுத்தின் இலக்கணம் என்ன என ஆராய முற்பட்டால் முதலில் தெரிவது வள்ளுவர். குறள் என்ற ஒரு இலக்கியம் இன்றும் யாவருக்கும் பொருந்தும் கருத்துகள் பலவற்றைச் சொல்லிச் செல்வதுடன், அக்கருத்துகளைப் பொன்மொழிகள் போல ஒருவர் தான் கூறும் கருத்தை வலியுறுத்த மேற்கோளாக எடுத்தாளும் எளிமையுடன், நல்வழிப்படுத்தும் அறநெறியாக இருப்பதும் காரணம் என்பது தெரியும். என்றும் வாழும் எழுத்து சுருங்கச் சொல்வதுடன், எக்கால மக்களாலும் தங்களுடன் இணைத்து அடையாளம் காணப்பட்டு, அதனால் ஏதோ ஒரு வழியில் பயன் கொள்ளும் வகையிலும் அமைந்திருக்கத் தேவை எனவே நாம் முடிவு செய்யலாம்.

நன்றி: இலக்கிய வேல் - ஐம்பதாவது சிறப்பிதழ் & FeTNA

---

தொடர்பு: தேமொழி <jsthemozhi@gmail.com>

## 15. திருக்குறளில் நுண்பொருள்

**– இரெ. சந்திரமோகன்**

**முன்னுரை:-**

"நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணற்கால்
கண்ணல்லது இல்லைபிற"

இது குறிப்பறிதல் அதிகாரத்தில் அமைச்சர் அறிவுறுத்தும் நுட்பமான செய்திகளை மன்னன் அறியக் கண்ணைத்தான் பயன்படுத்துகின்றான் என்பதை மேலெழுந்தவாரியாகப் பொருள் கூறுவர் பெருமக்கள்.

ஆயினும் திருக்குறட்பாக்கள் வெளிப்படையாகத் தலைப்புக்காக தரும் பொருளை விட நுட்பமான செய்திகளைத் தேடுபவர்களுக்கு நுண்பொருள்களை உருக்கி வைத்திருப்பதற்காகவே வள்ளுவர் திருக்குறளை இயற்றியுள்ளார் என்பதை வெளிக்கொணர்வதே. இக்கட்டுரையின் நோக்கம், இக்குறட்பாவில் கூட என்னைப்போன்ற அறிவியற் காதலர்க்கு, கண்ணைக்கடந்து ஒரு உலகம் உள்ளது. அதன் மூலம் உயிர் அற்ற பொருள்களில் குறிப்புக்களைக் கண்டு உணர, நுண்ணோக்கிகள் தேவை. அவற்றை வடிவமை என்று சொல்லியிருப்பதாகவே தோன்றுகின்றது.

காதலர்க்கு, காதலி அல்லது காதலன் செயல்கள் பல்வேறு பொருட்களை உணர்த்துவது போல, அவரவர்கள் கண்களுக்கு மட்டும் விளங்கக்கூடிய நுண்பொருள்கள் நிறைந்தது திருக்குறள். மேலும் தேடுவோம்.

**மூலக்கூறுகளின் அறிவு:-**

வஞ்சமனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்

இலம் என்று அசையி இருப்பாரைக் காணின்
நிலம் என்னும் நல்பான் நகும்.

நிலம் நகும், பூதங்கள் ஐந்தும் நகும் என்று வள்ளுவர் உயிர்ப்பொருளுக்கான பண்பினை, சடப்பொருள்களுக்கு இருப்பதாக "நகும்" எனும் சொல்லால் குறிப்பிடுகின்றார்.

நிலம், மூலக்கூறுகளின் தொகுதியாகும். மூலக்கூறுகள் அடர் அடர்த்தியிலிருந்து குறை அடர்வு இடம் நோக்கி நகரும். இது பறவைகள் மற்றும் விலங்குகள் வலசையை ஒத்து இருக்கிறது. எனவே உயிரற்ற பொருள்களுக்கும் அறிவு இருக்கிறதாகக் கருதும் இயற்பியலார் (Molecular Intelligence) அவர்களின் கருத்துக்களுடன் ஒத்திருக்கின்றது. வளி மண்டலம், கோள்கள், விண்மீன்கள் அனைத்தும் விண்ணில் மிதக்கின்றது. எனவே, அவை ஒன்றனுக்கொன்று முரண்படாமல் இயற்கை விதிகளோடு நடந்துகொள்வதும் இக்கூற்றுக்கு வலு சேர்க்கின்றது.

**திருவள்ளுவர் குறட்பாக்களில் ஐன்ஸ்டீன் கண்டுபிடிப்புகள்**

திருக்குறளில் “எல்லாப் பொருளும் உள” என்பது ஆன்ற அறிஞர்களின் கூற்றாகும். அங்ஙனமாயின் அதில் தற்கால அறிவியல் கண்டுபிடிப்புக்களும் அடங்கி இருக்கக்கூடும் என்று ஆய்ந்தோர் எண்ணற்றோர். 1970க்குப் பின் கண்டுபிடிக்கப்பட்ட இயற்பியல் கூறான “நானோ தொழில் நுட்பத்தின்” அடிப்படைகள் திருக்குறளில் மலிந்துள்ளது என்பதைப் பல குறட்பாக்களின் மூலம் நிறுவப்பட்டுள்ளது (செம்மொழி மாநாட்டுக் கட்டுரைகள்). தவத்திரு குன்றக்குடி தெய்வசிகாமணி அடிகளார் அவர்களின் உரை ஆழம், கூர்மையும் செறிவும் மிக்கது என்று அந்த உரையின் வாயிலாகத் தாம் கண்ட அரசியல் கருத்துக்களை ஒரு ஆய்வாளர் தொகுத்திருந்தார். (மு.பத்மா, திருக்குறள் பன்னாட்டு ஆய்வுக் கோவை, 2016, தொகுதி 2 பக்கம் 453). இக்கட்டுரையில் 1945 உலகப் போரில் கிட்லர் படை தோற்ற நிகழ்வை அடிகளார்.

“சிறுபடையான் சொல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்துவிடும்” (497)

என்ற குறள் கொண்டு நிறுவியதும், ஜெர்மனியின் வெற்றியை

“கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளம்குன்றா
நாடு என்பநாட்டின் தலை” (736)

என்ற குறள் கொண்டு நிறுவியதும் நுட்பமாகவும் என் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் இருந்தது.

1945ல் நடைபெற்ற உலகப் போருக்கு உரியச் செய்திகள் 2000 ஆண்டுகளுக்கு முன் என் ஐயன் திருவள்ளுவர் கூறியுள்ளார் என்பது எனக்குள் பெருமை விதைத்தது. அதுபோன்று நோபல் பரிசுகள் பெற்ற சில கண்டுபிடிப்புக்கள் அல்லது அதன் சாரம் குறட்பாக்களில் மறைபொருளாக இருக்கின்றதா என்று ஆராயமுற்பட்டேன். அதில் கிடைத்த சில அற்புத இயற்பியல் தத்துவங்களையும்,

அதன் அடிப்படை புதைந்துள்ள குறட்பாக்களையும் இக்கட்டுரையில் தந்துள்ளேன். அனைவருக்கும் தெரிந்த குறட்பாக்களில் பெரும்பான்மைச் செய்திகள்

அடங்கியுள்ளன என்பது மு.வ., கலைஞர் உரை மற்றும் தவக்திருஅடிகளார் கட்டுரைகள் கொண்டு இங்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

**சார்பியல் தத்துவம்**

ஐன்ஸ்டீனின் சார்பியல் தத்துவம் 20ம் நூற்றாண்டின் இணையற்ற கண்டுபிடிப்பு. அதற்கான நோபல் பரிசு 1905ல் வழங்கப்பட்டுள்ளது. ஐன்ஸ்டீன் இந்தக் கோட்பாட்டை நிறுவுவதற்கு மிகவும் உறுதுணையான இரண்டு செய்திகள் பின்வருமாறு அமைந்துள்ளது.

1. இட நிலையாமை
2. காலநிலையாமை

ஐன்ஸ்டீனின் சார்பியல் கொள்கையின்படி அனைத்து இயற்கை விதிகளும் எல்லா இடத்திலும் பொருந்தும். நியூட்டனின் புவியீர்ப்பு விசை போன்று நிலவும், சூரியனும் அது அதற்கான ஈர்ப்புவிசை கொண்டுள்ளது. ஒளியின் திசைவேகம் மாறிலி. ஒளியின் திசைவேகமே உலகில் மிக அதிகம். அதன் வேகம் ஒத்த வேகங்களில் செல்லும் பொருட்களில் நீளம் நகராத் தன்மையின் நீளத்தை விடக் குறைவாகத் தெரியும். அதன் நிறை அதிகரிக்கும். நேரம் மாறும் என்ற கண்டுபிடிப்புக்கள் சிறப்பானவையாகக் கருதப்படுகின்றது.

இனிநாம் அன்றாடம் பயன்படுத்தும் குறட்பாக்களில் இச்செய்தி எவ்வாறு அமைந்துள்ளது என்பதை நாம் காண்போம்.

“கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல”

இக்குறளில் கண்ணால் காட்சியைக் காணப் பயன்படுத்தப்படும் ஒளிப் பரிமாற்றம், கண்ணொடு கண்ணினை நோக்குதல் இது மிகவிரைவில் அமையும். ஒரு நொடிக்கு 3,00,000 கி.மீ வரை பயணிக்கும் ஒளி அலையைப் பயன்படுத்தும் போது வாய்ச்சொற்கள், அதாவது ஒலி அலைகளால் உருவான “வாய்ச் சொற்கள்” என்ன பயனும் இல. இன்றைய Optical Communication” ஆப்டிக்கல் தொடர்புகளுக்கு அடித்தளம் தரும் வகையில் ஒளியின் வேகத்தோடு செய்தி பரிமாற்றத்தில் ஒலி அலைகளோ, வேறுவகையான மின், எலக்ட்ரான் பரிமாற்றமோ போட்டி போட இயலாது. ஒளியின் வேகமே அதிவேகம் என்ற செய்திகள் அடங்கியுள்ளது

உள்ளங்கை நெல்லிக் கனி. கண்ணொடு கண் செய்த வேலையை ஒலி அலைகள் சுமக்கும் சொற்கள் செய்தது போல் நினைப்பது அறியாமையே ஆகும்.

அதனால் தான்,

“வான்நோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னன்
கோல்நோக்கி வாழும் குடி” (544)

மன்னனின் கடைக்கண் மூலம் குடிமக்களுட்குப் பல இன்பம் தரப்படலாம் அதுபோன்று வானத்தை நோக்கி வாழும் மக்களுட்கு மழை போன்றதாகுமாம். எனவே நோக்கி என்பதற்கு ஒளியைப் பயன்படுத்துதல் என்று நாம் கொண்டால் பல நுண்ணிய தகவல்கள் கிடைக்கும். உயிரினங்கள் வான் தரும் மழை நோக்கி வாழுகின்றன. ஒளியைப் பயன்படுத்துகின்றன.

“பொருள் கருவிகாலம் வினைஇடனொரு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்” (675)

அதாவது ஒரு காரியத்தைத் துவக்கும் போது 1)பொருள் 2)கருவி 3)காலம் 4)வினை 5)இடம் என்ற 5 காரணிகளை ஒரு சேர நினைந்து தொடங்க வேண்டும். இக்குறட்பாவில் கைப்பொருள், வசதிவாய்ப்புக்கள், அதைச் செய்யும் கருவியாக யாரை நியமிக்கலாம், தகுந்த காலம் தானா? இதனைச் செய்யமுடியுமா? இதைவிடச் சிறப்பான இடம் உண்டா? என்று ஆய்ந்து செய்தல் வேண்டும் என்பது ஆன்றோர் தரும் விளக்கம். ஆயின் பொருள் என்பதைப் பருப்பொருள் (Matter) என்றும் கருவி என்பது அதனை அளக்கும் கருவி (Instrument), எதனை அளக்கின்றோமோ அதை வினை என்று கொண்டு காலம், நேரம் (Time), இடம் (x, y,z) என்று கொண்டு ஒரு சோதனை செய்வோமானால் பிழை-இருள், தெளிவான விடை தீர வழி கண்டு செய்தல் வேண்டும்.

காலம் அளக்கும் போது அதில் இடத்தால் பிழை வரும். இடத்தை அளக்கும் போது காலத்தால் பிழை வரும்.

$$\Delta x.\Delta t = \frac{h}{2\pi}$$

$$\Delta y.\Delta t = \frac{h}{2\pi}$$

$$\Delta z.\Delta t = \frac{h}{2\pi}$$

என்ற ஹைசன்பர்க் கண்டுபிடிப்பு இக்குறட்பாவில் ஒளிந்துள்ளது துள்ளியமாய் தெரிகின்றது.

“எப்பொருள் யார்யார்வாய் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு”

“எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு”

என்ற குறட்பாக்கள் “இடன்” என்பதை x, y, z என்பதை அளக்கும் போது அதன் உண்மை அளவினைக் கண்டுபிடித்தல் அறிவு என்ற செய்தி ஒளிந்துள்ளது.

“சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி”

“மிக்கமிகு புகழ் தாங்குபவோதற் சேர்ந்தார்
ஓற்கம் கடைப்பிடியா தார்”

என்ற ஐந்திணை ஐம்பது பாடல் வரிகளில் கூறியது போல் தளர்ச்சிகளை $\Delta$ x, $\Delta$tக் கண்டுகளைய முற்படுதலே மெய்ப்பொருள் காணும் வழி. இதனை “Uncertainty Principle” நிலையின்மைக் கொள்கை என்று இயற்பியலில் பகர்வர். அதன் வழியிலேயே சார்பியல் காணப்பெற்று, ஐன்ஸ்டீன் நோபல் பரிசு பெற்றார். எனின் வள்ளுவருக்கு அன்றோ அத்தகைய பரிசு கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். நம் குறை நீக்கிய ஆன்மா “மகாத்மா”ஆக மாறுவது போல் குறைகளைந்து நிறை செய்யும் நல்லாசிரியராய் வள்ளுவர் திகழ்கின்றார்.

Will the Next War Be Fought Over Water? As soon as 2025, large parts of the world could experience perrennial water shortages, says Dr. Upmanu Lall, director of the Columbia Water Center and a leading expert on hydroclimatology, climate change adaptation, and risk analysis.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் மே மாதம் வந்துவிட்டால் பல பாகங்களில் நீர் தேவை. சுமை ஊர்திகளில் பல கிராமங்களுக்கு குடிநீர் எடுத்துச் செல்ல வேண்டிய நிலைமை. மழைநீர் சேகரிப்பு, சுத்தமான குடிநீர், போன்ற திட்டங்கள் நீர் மேலாண்மையின் இன்றியமையாமையைக் குறிக்கின்றன. அதிகப்படியான நிலத்தடி நீர் உபயோகத்தினால் பூமிக்கடியில் உள்ள நீரின் அளவுகளில் மாற்றம் ஏற்பட்டு, நீர் பற்றாக்குறை ஏற்பட வாய்ப்பு உள்ளதாக இன்றைய விஞ்ஞானிகள் எச்சரிக்கின்றனர். ஆனால் இந்த முடிவினை தங்களின் அறிவியல் தேடல்கள், சோதனைகள், கணினிகள் மூலம் ஆய்வுசெய்து கூறியுள்ளனர். நம் திருவள்ளுவர் 2000 ஆண்டுகளுக்கு முன் இக்கருத்தை எப்படிக்கூறுகிறார் என்று பாருங்கள்.

"வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான் அமிழ்தம் என்றுணரற்பாற்று."

வானிலிருந்து பெய்யும் மழையினால் தான் உலகம் நிலைபெற்று உள்ளது. அதனால் அவ்வானத்து நீரே அமிழ்தமாகக் கருதப்படுகின்றது.

"அமிழ்தம்" சாவா மருந்து. அதற்கு ஒப்பானது நீர். அது வானத்திலிருந்து பூமிக்கு வந்தது. அதனை அமிழ்தம் போல் சேமித்து அனைவருக்கும் பகிர்ந்தளிக்க வேண்டும். உயிர்கள் இந்த பூமியில் நீடித்து வாழ நீர் அவசியம் என்பதும் அதனை அமிர்தமாய் போற்றுவது உயிரின்கடமை என்கிறார் வள்ளுவர்.

நெடுங்கடலும் தன் நீர்மைகுன்றும் தடிந்தெழிலி
தான் நல்காதாகி விடின்.

மேகமானது மழையாகப் பொழிந்து நீரைக் கடலில் கொட்டாவிட்டால் பெரிய கடலும் நீர்வற்றிப்போகும். இங்கே ஒரு ஐயம். கடல் நீர் ஆவியாகி மேகமாகிறது. மேகம் தன்னுடைய செறிவினைப் பெருக்கி தடித்து ஒரு குறிப்பிட்ட அளவு பெருகியபின் மழையாய் கொட்டுகிறது. இப்பொழுது நாம் அதிகப்படியான நீரை சில இடங்களில் செலவு செய்தோமாயின், அந்த இடங்களில் இருந்து ஆவியாகும் நீர் குறிப்பிட்ட தடிமனுக்குப் பெருகுவது இல்லை. நிலத்தடி நீரை அதிகமாகப் பயன்படுத்தினால் மேகம் தடிக்காது. அத்தகைய நிலையில் அழகிய மேகம் மழையாவது இல்லை. அப்படி தன்னைத்தானே பெருக்கிக் கொள்ளும் வேலையை மேகங்கள் செய்துகொள்ள வாய்ப்பு இன்றிப் போனால் என்ன நடக்கும். விவசாயம் செய்ய இயலாது போகும். பசிப்பிணி கொடுமை அதிகரிக்கும். உயிரின ஒழுக்கம் மாறுபடும். உலகம் இத்துன்பங்களால் உயிர்கள் மாயும்.

"நீரின்றி அமையாது உலகெனில் யார்யார்க்கும்
வானின்று அமையாது ஒழுங்கு"

ஒழுக்கம் விழுப்பந் தரும். எனவே மனிதன் நீரைப்போற்றி பயன்செய்தல் வேண்டும். அதில் தான் உலக ஒழுங்கு அமைந்துள்ளது. எனவே நீரைச் சேமிப்பீர் என்று திருவள்ளுவன் அன்றே கூறியுள்ளார் அழகாக. திருக்குறளில் மிகச்சிறந்த இயற்பியல் கருத்துக்களை திருவள்ளுவன் வழங்கியுள்ளார் என்றால் மிகையாகாது.

**முடிவுரை:-**

"நீர் வான்நின்றது, பின்னர் பூமி வந்தது"

அதன் வரவால்தான் உயிர்கள் உருவாயின. பூமியைப் புணர்ந்து உயிரைக் கொணர்ந்தது நீர். பூமிக்கு உயிர் கொடுத்த நீரும் ஒரு நாள் மரணிக்கும் என்ற நுண்ணிய செய்தி நெடுங்கடலும் "தன் நீர்மை குன்றும்" என்ற குறட்பாவில் மறைந்துள்ளது. பூமியின் மையப்பகுதி வெப்பமும், சூரியனின் வெப்பமும் சேர்ந்து

கடல்நீர் ஆவியாகி மழை பொழியும் வாய்ப்பு உருவாகிறது என்று தற்கால அறிவியலார் கண்டறிந்துள்ளனர். பூமியின் இரக்கக் குணத்தால்தான் கடல் இன்றும் இருந்து உயிர்காக்கின்றது என்பது குறள்காட்டும் நுண்பொருள். நிலமகள் நகும் என்ற சொற்கள் மூலம் மூலக்கூறுகள் அறிவுடையன என்ற செய்தியை வள்ளுவர் தருகிறார்.

எனவே குறள்நெறி வாழ்ந்து, மானுட ஒழுக்கத்தால் தமிழ் மண்ணொழுக்கம் போற்றுவோம். உலகைக்காப்போம்.

---

தொடர்பு: ரெ. சந்திரமோகன் <rathinam.chandramohan@gmail.com>
முதல்வர், ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.

## 16. மறக்க இயலாத மாமன்னர் இராசராசன்!

**– அண்ணாமலை சுகுமாரன்**

இன்று சதயத்திருநாள் !
மாமன்னர் இராசராசனின் 1032வது சதய விழா !!
மாமன்னர் இராசராசன் அவதரித்தநாள் !!!



சதயம் என்பது இந்திய வானியலிலும் சோதிடத்திலும் இராசிச் சக்கரத்தில் சொல்லப்படுகின்ற இருபத்தேழு நட்சத்திரக் கோணப் பிரிவுகளுள் 24 ஆவது பிரிவு ஆகும். அது ஒரு பெருமைபெறுகிறது இராசராசன் அதில் பிறந்ததால்.

இந்தியவரலாறு குப்தர்களையும்,மௌரியர்களையும் விஜயநகர அரசர்களைப் பற்றிச் சொல்லுமளவிற்கு ராஜராஜ சோழனைப் பற்றியோ, தமிழரசர்களைப் பற்றியோ அதிகம் சொல்வதில்லை. ஆதாரங்கள் என்னமோ கொட்டிக்கிடக்கிறது.

தமிழில் பொருள் காண முடியாத சொற்களில் "சோழ" என்பதும் ஒன்றாகும். 'நீர் சூழ்நாடு' என்பது நாளடைவில் 'சூழநாடு', பிறகு சோழநாடு என மாறியிருக்கலாமோ என்று தோன்றுகிறது. மிகப் பழமையானது சோழநாடு. இதனைப் பற்றிய குறிப்புகள் மகாபாரதத்திலும் அசோகரது கல்வெட்டிலும் கூடக் காணப்படுகிறது.சூரிய குலத்தவர் என்று தங்களை அழைத்துக் கொண்ட சோழர்கள் சங்க காலத்திலேயே (கி.மு. 2ம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 2ம் நூற்றாண்டு வரை) வாழ்ந்திருந்தாலும் அந்தக் காலகட்டத்தின் முடிவில் தென்னாட்டு வரலாற்றிலிருந்தே காணாமல் போய்விட்டிருக்கிறார்கள். ஆயினும் சங்கம் வளர்த்த இந்த இனத்தவர் குறுநில மன்னர்களாக உறையூர், பழையாறை போன்ற பழைய தலைநகரங்களிலே தொடர்ந்து வாழ்ந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. சிபி, முசுகுந்தன், மனு, செம்பியன் என்று புராணங்களில் அவர்களின்

மரபு இடம் பெற்றிருக்கிறது. அதனால் தான் வரலாற்றில் இருந்து அவர்கள் விடுபட்டார்களா என்று தெரியவில்லை .

இராசராச சோழன் சோழர்களின் புகழ் பெற்ற மன்னர்களுள் மிக முக்கியமானவர் ஆவார். 'சோழ மரபினரின் பொற்காலம்' என்று போற்றத்தக்க வகையில் ஆட்சி செய்த இம்மன்னனின் ஆட்சிக்காலம் கி.பி 985 முதல் கி.பி 1012 வரையாகும்.

இராசராச சோழனின் முப்பதாண்டு ஆட்சிக்காலமே சோழப் பேரரசின் வரலாற்றில் மிக முக்கியமாக விளங்கியது. ஆட்சி முறை, இராணுவம், நுண்கலை, கட்டடக்கலை, சமயம், இலக்கியம் ஆகிய பல்வேறு துறைகளில் புதிய எழுச்சியைக் கண்ட சோழப்பேரரசின் கொள்கைகளை இவனுடைய ஆட்சியில் உருப்பெற்றவையே ஆகும்.

அவரது பிறந்த நாள் - 943 ஐப்பசி சதயம் நட்சத்திரம் (கி.பி. 943) என்று பேராசிரியர் சி. கோவிந்தராசனார் மற்றும் முனைவர் சி. கோ.தெய்வநாயகம் எழுதிய சோழர் வரலாறு (பக்கம் 102) எனும் நூல் குறிப்பிடுகிறது. (உலகத் தமிழ் செம்மொழி மாநாட்டுச் சிறப்பு வெளியீடு) மேலும் வேறுபட்ட கருத்துக்களும் சில உண்டு.

இராசராசன் சித்திரைத் திங்கள் சதய நட்சத்திரத்தில் பிறந்தவர் என மன்னரது திருப்புகலூர் கல்வெட்டும் முதலாம் இராசேந்திர சோழரின் எண்ணாயிரம் கல்வெட்டும் செப்புவதாக முனைவர் சூ. சுவாமிநாதன் (கல்வெட்டாய்வாளர் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை மைசூர்) கல்லெழுத்தில் காலச்சுவடுகள் (பக்கம் 38, 39) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

இராசராசன் வரலாற்றில் பெற்றிருந்த சிறப்பை அவரது சிறப்புப் பெயர்கள் - 42 குறிப்பிடுகின்றன .

1. இராசகண்டியன்
2. இராசசர்வக்ஞன்
3. இராசராசன்
4. இராசகேசரிவர்மன்
5. இராசாச்ரயன்
6. இராசமார்த்தாண்டன்
7. இராசேந்திரசிம்மன்
8. இராசவிநோதன்

9. இரணமுகபீமன்
10. இரவிகுலமாணிக்கன்
11. இரவிவம்சசிகாமணி
12. அபயகுலசேகரன்
13. அருள்மொழி
14. அரிதுர்க்கலங்கன்
15. பெரியபெருமாள்
16. அழகியசோழன்
17. மும்முடிச்சோழன்
18. பண்டிதசோழன்
19. நிகரிலிசோழன்
20. திருமுறைகண்டசோழன்
21. செயங்கொண்டசோழன்
22. உத்தமசோழன்
23. மூர்த்தவிக்கரமாபரணன்
24. உத்துங்கதுங்கன்
25. உய்யக்கொண்டான்
26. உலகளந்தான்
27. தெலிங்ககுலகாலன்
28. கேரளாந்தகன்
29. மூர்த்தவிக்கரமாபரணன்
30. சோழேந்திரசிம்மன்
31. சோழநாராயணன்
32. சோழகுலசுந்தரன்
33. சோழமார்த்தாண்டன்
34. பாண்டியகுலாசனி
35. சிவபாதசேகரன்
36. சிங்களாந்தகன்
37. சத்துருபுஜங்கன்
38. சண்டபராக்ரமன்
39. ஜனநாதன்
40. சத்திரியசிகாமணி
41. கீர்த்திபராக்கிரமன்
42. தைலகுலகாலன்

அரியனை அமர்ந்தநாள் - ஆடி மாதம் 22ம் நாள் 985வது வருடம் 18/07/985

ஆட்சி ஏற்ற வயது - 42ம் வயது
தஞ்சை பெரியகோயில் கட்டியது - ஆட்சியாண்டு 25, 275ம் நாள் சனிக்கிழமை
குடமுழுக்கு செய்த நாள் - 22/04/1010 (புனர்பூச நட்சத்திரத்தில்)
இறந்த நாள் - 17/01/1014 (ஆட்சியாண்டு 29, மார்கழி மாதம் பூர்வபட்சம் சதூர்த்தசி திதி) வாழ்ந்த கால வயது - 71 ஆண்டுகள்

தஞ்சை பெரியகோயில் என்றும் ஒரு அதிசயமாகும். யுனெஸ்கோவின் உலக பாரம் பரிய நினைவுச்சின்னங்கள் பட்டியலில் இக்கோயில் இடம் பெற்றுள்ளது. உலக அளவில் இதன் கட்டிடக் கலை சிறப்பை வியக்காத வல்லுநர்களே கிடையாது. இராசராச சோழன் சிவபெருமானுக்கு ஆத்மார்த்தமாகக் கட்டிய (கி.பி.985 - 1012) அரும்பெரும் ஆலயம் இது. இங்குள்ள மூலவர் பிரம்மாண்டமானவர், 13 அடி உயரம் உடையவர். ஆவுடை மட்டும் 54 அடி சுற்றளவு உடையது. மேல் பாணத்தின் சுற்றளவு மட்டும் 23 அடி. இவ்வளவு பெரிய லிங்கம் வேறு எங்கும் இல்லை. அம்பாள் 9 அடி உயரம் உள்ளவர். இந்த லிங்கம், மத்தியபிரதேச மாநிலம், நர்மதா நதிக்கரையிலுள்ள ஒரு மலையிலிருந்து கொண்டு வரப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது. எனப்படுகிறது.

முதலாம் இராசராசன் மூன்று வித மெய்க்கீர்த்திகளைக் கையாண்டாலும் 'திருமகள் போல' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையே எட்டாம் ஆண்டிலிருந்து பெரும் அளவில் பயன்படுத்தப்பட்டது. இவ்வகை மெய்க்கீர்த்தி இவனது ஆட்சியில் நடைபெற்ற முதற்போரைக் குறிக்கும் வகையில், 'காந்தளூர்ச்சாலை கலமறுத்த' என்ற பட்டத்தைக் குறிப்பிடுகிறது.

ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போல பெருநிலச் செல்வியுந் தனக்கேயுரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர்ச் சாலைக் களமறூத்தருளி வேங்கை நாடும் கங்கைபாடியும் நுளம்பபாடியும் தடிகை பாடியும் குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும் எண்டிசை புகழ்தர ஈழ மண்டலமும் இரட்டபாடி ஏழரை இலக்கமும் திண்டிறல் வென்றி தண்டால் கொண்டதன் பொழில் வளர் ஊழியுள் எல்லா யாண்டிலும் தொழுதகை விளங்கும் யாண்டே செழிஞரை தேசுகொள் ஸ்ரீகோவிராஜராஜகேசரி பந்மரான ஸ்ரீராஜராஜ தேவர். எத்தனை அழகாகத் தனது வரலாற்றின் முக்கிய நிகழ்வுகளை வரிசைப்படுத்தியிருக்கிறார் பாருங்கள். இன்னமும் தமிழர்கள் வரலாற்று அறிவு இல்லாதவர்கள் என்று பழி சுமத்தப்படுகிறது. பதிவுகள் என்னமோ மிகவும் உண்டு ஆனால் சரிவர ஆராயப்படவில்லை. மாமன்னர் இராசராசன் ஆண்ட காலத்தில் நடைமுறையில் இருந்த வரிகள் சில சோழர் காலத்தில் மக்களுக்கு இடப்பட்ட வரிகள். மக்களின்

தேவைகள், மகேசனின் தேவைகள் இவற்றை நிறைவேற்ற அரசுக்குப் பொருள் வேண்டாமா? இதோ அரசின் வருவாய்க்கான வரிகள்:

1. அங்காடிப் பட்டம்
2. இடப்பாட்டம்
3. இலைக் கூலம்
4. இரவுவரி
5. இறை
6. ஈழம்
7. உல்கு
8. ஊரிடுவரி
9. எச்சோறு
10. ஏரிப்பாட்டம்
11. ஓடக்கூலி
12. கண்ணாலக்காணம்
13. காவேரிக்கரை வினியோகம்
14. குசக்காணம்
15. குடிமை
16. சபாவினியோகம்
17. சித்தாயம்
18. சில்லிறை
19. சில்வரி
20. செக்கிறை
21. தட்டார்ப் பாட்டம்
22. தரகு
23. தறியிறை
24. நாடுகாவல்
25. நீர்க்கூலி
26. பாடிகாவல்
27. பூட்சி
28. போர்வரி
29. மரமஞ்சாடி
30. மரவிறை
31. மனை இறை
32. மீன் பாட்டம்
33. வண்ணாரப்பாறை

கடல் கடந்து வாணிகத்திலும் ஆதிக்கத்திலும் கோலோச்சிய சோழர்கள் நீர்ப்போக்குவரத்திலும் சிறந்து விளங்கினர். இதோ கி.பி. 9 - 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சேந்தன் திவாகரம் என்னும் நூல் குறிப்பிடும் கப்பலின் பெயர்கள்:

1. வங்கம்
2. பாடை
3. தோணி
4. யானம்
5. தங்கு
6. மதலை
7. திமில்
8. பாறு
9. அம்பி
10. பாரி
11. சதா
12. பாரதி
13. நௌ
14. போதன்
15. தொள்ளை
16. நாவாய்

இவரின் பெருமைக்கு இன்னமும் பல சிறப்புச்செய்திகள் வரலாற்றில் கொட்டிக்கிடக்கின்றன. ஆனால் முக்கிய ஒன்றைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. அது ஒரு அறிவியல் அற்புதம் ! சோழநாட்டின் நிலம் அனைத்தையும் துல்லியமாக அளக்கவும், அவற்றின் தரத்தை நிர்ணயிக்கவும் குரவன் உலகளந்தான் இராசராச மாராயன் என்பவன் தலைமையில் இராசராசன் ஒரு குழு அமைத்தான். இக்குழு தனது பணியைக் குறைவறச் செய்து அரசனின் பாராட்டைப் பெற்றது. நிலத்தை அளக்கப் பயன்படுத்தப்பட்ட பதினாறு சாண் நீளமுடைய கோல் "உலகளந்தான் கோல்" என்றழைக்கப்பட்டது.

எந்தவித சாதனங்களும் கண்டறியாத அந்த காலத்திலேயே நிலத்தை அளந்து தரம் பிரிப்பதென்பது ஒரு அசாதாரண பணி, இதனை மிகவும் சீரிய முறையில் சாதித்த சோழராஜனின் மகுடத்தில் இந்த அரிய பணி ஒரு வைரம்.

உலகளந்தான் கோல் பற்றிய சில விவரங்கள்:

24 விரல் கொண்ட முழம் - கிஷ்கு

25 விரல் கொண்ட முழம் - பிரஜாப மத்தியம்

26 விரல் கொண்ட முழம் - தனுர் முஷ்டி
27 விரல் கொண்ட முழம் - தனுர் கிரஹம்
28 விரல் கொண்ட முழம் - பிராச்யம்
29 விரல் கொண்ட முழம் - வைதேகம்
30 விரல் கொண்ட முழம் - வைபுல்யம்
31 விரல் கொண்ட முழம் - பிரகீர்ணம்
33" ஆங்கில அளவிற்குச் சமமானது கிஷ்கு முழமாகும்.

இத்தனையும் செய்த மாமன்னரின் சிலை இருக்குமிடம் அறிந்தால் வருத்தம் மிகும் .பெரியகோவில் கட்டி முடிக்கப்பட்டவுடன் அதற்கு நிர்வாக அலுவலராக இருந்த ஆதித்தன் தென்னவன் மூவேந்த வேளாளன் என்பவர் இராசராச சோழனுக்கும் அவரது மனைவி லோகமாதேவிக்கும் செம்பில் உருவச் சிலைகள் செய்தார். இராசராச சோழன் உயிருடன் இருக்கும் போதே செய்யப்பட்ட இச்சிலைகள் இப்போது குஜராத் மாநிலம் அகமதாபாத்தில் உள்ள கௌதம் சாராபாய் தனியார் அருங்காட்சியத்தில் வைக்கப்பட்டுள்ளது.

இராசராசசோழன் மறைந்த பிறகு, அவருடைய வெண்கலச்சிலை ஒன்றும் வடிவமைக்கப்பட்டது. அதை, பிரகதீஸ்வரர் வீதி உலா செல்லும்போது முன்னால் எடுத்துச் செல்ல வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார் ராஜேந்திர சோழர். பயபக்தியோடு, கைகூப்பியவாறு இருக்கும் இந்தச் சிலையும் தற்போது வடக்கே சாராபாய் அருங்காட்சியகத்தில் இருக்கிறது.

இந்த அற்புத வரலாற்று முக்கியம் வாய்ந்த சிலைகளை மத்திய அரசின் உதவியோடு மீண்டும் தமிழக அரசு மீண்டும் தமிழ் மண்ணுக்குக் கொண்டுவந்து தஞ்சைக் கோயிலில் வைக்கவேண்டும்.இதுவே மாமன்னர் இராசராசனுக்கு நாம் செய்யும் நன்றி கூறல் ஆகும்.

அண்ணாமலை சுகுமாரன்

(30-10-2017)

தொடர்பு: அண்ணாமலை சுகுமாரன் (amirthamintl@gmail.com)

## 17. குருகோவிந்தரும் இராமலிங்கரும்

– முனைவர். மலர்விழி மங்கையர்க்கரசி

அக்டோபர் மாதம் அகிம்சை மாதம் என்றாற்போல அடுத்தடுத்து அருளாளர்களின் அவதாரத் தினங்களால் நிறைந்திருக்கிறது. அக்டோபர் இரண்டு காந்தி ஜெயந்தி, அக்டோபர் ஐந்து இராமலிங்கர் ஜெயந்தி, அக்டோபர் 7 (1708 அக்டோபர் 7) குருகோவிந்த் குரு பூஜை (மறைவு) என இரண்டு, மூன்று நாட்கள் இடைவெளியில் அருளாளர்கள் அவதரித்துள்ளனர். காந்தியடிகளை அருளாளர் என அழைக்கலாமா எனில் சமய ஆன்மிக அன்பர்களை மட்டுந்தான் அவ்வாறு அழைத்தல் மரபு எனினும் அகிம்சையால் ஆங்கிலேயரைத் துரத்தியவரும், சர்வோதயம் கண்டவரும், இராமராஜியத்தை நிலைநிறுத்தப் பாடுபட்டவரும், தள்ளிவர்களை ஹரிசனங்கள் (இறைவனின் குழந்தைகள்) என அழைத்து இன்பங்கண்ட ஆன்மநேய காந்திமகானை அருளாளர் என அழைப்பதில் என்ன பிழையிருக்க முடியும் ?

ஆன்மநேய ஒருமைப்பாடு கண்டு சன்மார்க்கம் கண்டு நெறிப்படுத்தி தெனைச் சங்கம் அமைத்து நெறிப்படுத்திய இராமலிங்கர் பதினெட்டாம் நூற்றாண்டு அருளாளர். வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியது மட்டுமன்றி வீடுதோறும் இரந்தும் பசியறாது அயர்ந்த வெற்றரைக் கண்டுளம் துறத்தவர். இத்தகையோரைக் கணித்து உலகளாவிய அளவில் “உலகச் சிந்தனையாளர்கள்” என்ற பெயரில் நூலாக்கிய இராபர்ட் எல். ஹெல்போர்னர் பின்வருமாறு கருத்துரைக்கிறார். “மத்திய நூற்றாண்டுகளின் சிந்தனைப் புரட்சியாளர்களின் சிந்தனை உருமாற்றம் குறிப்பாக பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் மண், மனிதர்கள், சமூகம், இயங்குதளம் இவற்றின் அடிப்படையிலேயே பழையனவற்றை மாற்றிப் புதிய முறைமைகளை இனங்கண்டு உரைத்தனர்” (‘The worldly philosohers’ - Robert L. Heilbroner IV edition -1972 - Simon and Schuster, Newyork, Page - 25) என்பது பொருத்தமே.

இந்து மற்றும் இஸ்லாமிய சமய ஒருமைப்பாடு கண்ட அருளாளராக பதினேழாம் நூற்றாண்டில் அவதரித்த குருகோவிந்தர் விளங்குகிறார். சீக்கிய ஒன்பதாவது மதகுருவாகக் கொண்டாடப்பட்டாலும் இவருக்குப் பின்னரே சீக்கிய மதம் குருகிரந்தம் என்ற பெயரில் சீக்கியப் பனுவல்களைப் பெறுகிறது. அதைத் தொகுப்பித்த பணியைக் குருகோவிந்தர் செய்ததோடு மட்டுமல்லாமல் உருவவழிபாட்டில் மிகப்பெரிய புரட்சியையே செய்துள்ளார் எனக் கூறமுடியும்.

அதுவரைக் கடவுளர் உருவங்கள், மதகுருமார்களின் உருவங்கள் ஆராதிக்கப்பட்டு வழிபடுதன்மையைப் பெற்றதெனின் இவரே மதநூலான குருகிரந்தத்திற்கு வழிபடுதன்மையை வகுத்துத்தருகிறார். பதினெட்டாம் நூற்றாண்டில் அதேபோல் இராமலிங்கரும் “அருட்பெருஞ்சோதி” என்று கடவுளர் உருவத்தை விடுத்து ஒளியைக் குறியீடாக்கி வழிபடும் ஒளிவழிபாட்டை ஜோதி தரிசனத்தைக் கூடியிருந்து கண்டு ஆன்மநெகிழ்வடையும் புதுமார்க்கத்தைக் கண்டறிந்து தந்தார். இவ்விருவரது மார்க்கங்களும் அவர்தம் காலத்துக்குப் பின்னரும் இன்றுவரை தொடர்ந்து வருவதே தனிச்சிறப்பும் அவரது கொள்கை வெற்றிபெற்றதை உணர்த்துதலுமாகிறது.

சீக்கியமதத்தின் சீரிய நெறிமுறைகளைக் கையிலெடுக்காது தனிமனித குருவழிபாட்டில் சிக்கி ராம்ரஹீம் போன்றவர்களால் ஹரியானா மாநிலத்தில் சென்ற மாதம் நிகழ்ந்த கலவரங்களை நாடே கண்டு வியந்து கண்டனக்குரல்களை எழுப்பியது என்பதையும் மனதிற்கொள்ளவேண்டும். தனிமனிதத் துதி இவ்வாறு தீமையில்தான் ஓர் எல்லை கடந்து செல்லும்போது முடியும் என்பதை உணர்ந்துதானோ என்னவோ குருகிரந்தத்தைப் பொற்கோவிலின் கடவுள் நிலைக்கு வைத்துப் புனிதப்படுத்தினார் குருகோவிந்த்சிங். சீக்கிய மதத்தின் வாழும் குருவாக வழிபடுத்திய குருகோவிந்த்சிங் பீஹார் மாநிலம் பாட்னாவில் 1666ஆம் ஆண்டு டிசம்பர் 22இல் பிறந்தார். இராமலிங்கர் 1853 - விழுப்புரம் மாவட்டம் மருதூரில் தமிழ்நாட்டில் பிறந்தார்.

குருகோவிந்தர் “அரபி, பெர்சியன், சமஸ்கிருதம் போன்ற மொழிகளைக் கற்றுத் தேர்ந்தவர்” (பக்-8, தினமலர் நாளிதழ் - 07.10.2017 - மதுரை பதிப்பு) என்னும் தகவல் அவர் பன்மொழியாளர் என்பதை உறுதிசெய்கிறது. இராமலிங்கரும் ஆங்கிலம், பிரெஞ்சு, (பாண்டிச்சேரியில் வசித்த காலத்தில் அறிந்திருக்கக் கூடும் என்பாரும் உளர்) சமஸ்கிருதம் அறிந்தவராகத் திகழ்கிறார். தமிழ் தாய்மொழி, சமஸ்கிருதம் தந்தைமொழி என திருவருட்பா - உரைநடைப் பகுதியில் அவர் கூறியிருப்பது வியப்பிற்குரியது. அவரது உரைநடையே மணிபிரவாள நடைக்கான கடைசிச் சாட்சியாகத் தமிழ் எழுத்திலக்கிய வரலாற்றில் இருந்திருக்கக் கூடும் என்று ஆய்வாளர்களை உறுதிப்படுத்த வைக்கிறது. இராமலிங்கர் காலத்துக்குப் பின்னரே மறைமலையடிகள், நீதிக்கட்சி, தேவநேயப்பாவணர் போன்றோரால் தனித்தமிழ் இயக்கமும் தனித்தமிழ் நடையும் சமஸ்கிருத ஒறுப்பும் நிகழ்ந்திருக்கிறது.

குருகோவிந்தர் “குதிரைவாரி, பலவகைத் துப்பாக்கிகள், ஆயுதங்கள் முதலியவற்றைக் கையாள்வதில் சிறப்புப் பெற்று விளங்கினார்.” (பக்-8, தினமலர்)

என்ற செய்தி தேக ஆரோக்கியம், தற்காப்பு ஆகியவற்றில் அவர் கொண்டிருந்த அக்கறை முக்கியத்துவம் பெறுகிறது.

இராமலிங்கரும் தேக ஆரோக்கியம் பற்றி சுத்த தேகம், பிரவண தேகம், ஒளியுடம்பு ஆகியன குறித்துப் பேசியுள்ளார். உடல்நலன் குறித்த அக்கறையில் மூலிகை மற்றும் பயிரினங்களின் பயன்பாடு குறித்து மானுடர்களுக்கு உரைநடைப் பகுதியில் தனித்த பதிவினைக் குறித்துள்ளார். கரிசலாங்கண்ணிப் பொடியை அன்றாடம் உண்ணல் நலம் எனத் தானும் உண்டு பிறருக்கு முன்னோடியாக வழிகாட்டியும் விளங்கியுள்ளார்.

குருகோவிந்தரின் மதிப்புமிகு சிந்தனைகளாகத் தான் உருவாக்கிய சீக்கிய மார்க்கத்தைப் பின்பற்றுபவர்களுக்கு ஒழுக்கமுறைகளை வகுத்துள்ளார். “மது அருந்தாமை, புகை பிடிக்காமை, நாள்தோறும் ஐந்துமுறை வழிபடுதல், வருமானத்தில் பத்தில் ஒருபங்கு தானம், வட்டி வாங்காமை ஆகியவற்றைக் கடைப்பிடித்து சீக்கியர் வாழவேண்டும்” என்று சிறந்த பண்புகளையுடைய மானுடச்சமூகம் உருவாகக் கட்டமைத்துத் தந்துள்ளார். அதனைக் கட்டாயமாகப் பின்பற்றவேண்டும் என்றும் சட்டம் இயற்றித் தந்திருக்கிறார். 1708 அக்டோபர் மாதம் ஏழாம்நாள் அவர் காலமானாலும் இன்றுவரை அவர் கொள்கைகளை சீக்கியர் பின்பற்றி வருகின்றனர். இராமலிங்கரும், புலால் உண்ணக்கூடாது. உருவ வழிபாடு கூடாது. ஒளி வழிபாடு மேற்கொள்ள வேண்டும். ஜீவகாருண்யமே மோட்ச வீட்டின் திறவுகோல். பரோபகாரம், பசிப்பிணி மருத்துவம் போன்ற கொள்கைகளை வழியுறுத்தியுள்ளார். அவர் பசியாற்றுக்காக அன்று ஏற்றிவைத்த நெருப்பு அணையா அடுப்பாக இன்றும் வடலூர் சத்திய தருமச்சாலையில் பசித்தோருக்கு அன்றாடம் உணவு சமைத்து வழங்கிக் கொண்டிருக்கிறது.

அதுவரை இருந்த வழிபாட்டுத் தலங்களினின்றும் தனித்துப் பொற்கோயில் என்பதை வடிவமைத்து அமிர்தசரஸ் நகரிலே சீக்கிய வழிபாடு நடத்துகின்றனர். இந்தப் பொற்கோயிலை 1469 -இல் பிறந்த சீக்கிய சமய நிறுவனரான குருநானக் மெக்காவிற்குப் புனிதப்பயணம் மேற்கொண்டதன் பின்னர் இந்து முஸ்லிம் இருசமயக் கோவில் அமைப்புகளையும் இணைத்து வடிவமைத்ததாக இந்தியாவின் சிறந்த கோயில்கள் (The Great Temples of India - Ceylon and Burma Asian Educational Services - New delhi & Madras - 1988 - Page 43 - Slkm Temples) என்ற நூலில் சீக்கியக்கோயில் என்பதனுள் பொற்கோயில் என்ற கட்டுரையில் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

லாகூரிலிருந்து முப்பத்திரண்டு மைல் தூரத்தில் வெள்ளியும் தங்கமும் கலந்து கட்டுமானம் அமைத்த கோயிலாகவும் திகழ்கிறது. இந்துசமய மறுமலர்ச்சியாளரான கபீரின் சிந்தனைகளின் அடித்தளத்தில் குருநானக் அவர்கள் இந்து முஸ்லிம் மதக்கோட்பாடுகளை இணைக்கவேண்டும் என்ற அடிப்படையில் சீக்கியத்தை உருவாக்கியதாகக் கருத இடமுள்ளது.

இராமலிங்கரும் அவர்காலத்தே தமிழகச் சூழலில் இருந்த இஸ்லாமிய, கிறித்தவ ஊடுருவாக்கச் சிந்தனைகளில் அவற்றை இணைத்து வழிபடுதலத்தை வடலூரில் நிர்மாணிக்கிறார் எனக் காணும்போது வியப்பு மேலிடுகிறது. சத்தியஞானசபை என்பது அதுவரை தமிழகத்தில் இருந்த வழிபடுதலங்களினின்றும் மாறுபட்டுப் புதிய நிர்மாணமாக அமைகிறது. எண்கோண அமைப்பில் சத்தியஞானசபையை உருவாக்கி ஒளிவழிபாட்டை சமஸ்கிருதச் சொல்லாடல் பிரயோகத்தில் ஜோதி தரிசனம் என்ற முறைமையை அமல்படுத்தினார். சிதம்பரத்திலிருந்து சிலமைல்தூரத்தில் வடலூரை சத்தியஞானசபையைத் தேர்வு செய்தார். சிதம்பரத்தைப் பூர்வஞான சிதம்பரம் என்றும் வடலூரை உத்தரஞான சிதம்பரம் எனக்கொண்டு அமைத்தார் என்பது பதிவு.

அமிர்தசரஸ் பொற்கோயிலுக்கும் வடலூர் சத்தியஞான தருமச்சாலைக்கும் ஒரு பரோபகார ஒற்றுமையுள்ளது. வளாகத்துள் வருபவர்கள் பசியாறிச் செல்கின்றனர் எனும் பெருங்காருண்ய உபகாரமேயிது.

சீக்கிய நூலான குருகிரந்தமும் இராமலிங்கரின் திருவருட்பாவும் கருத்துநிலையில் சில ஒருபோட்டுத்தன்மை உடையனவாக உள்ளன. குருகிரந்த ஜபுஜி (ஜபுஜி - ஜபம் - இறைவனுக்கு வணக்கம் செலுத்துதல்) யுள் புலப்படாத கடவுளின் குணநலன்கள் நிரல்படுத்தப்படுகின்றன.

"அவர் உண்மையானவர் அவர் நாமம் உண்மையானது
படைப்பு உண்மையானது கடவுள் பயமில்லாதவர்
எதிரிகள் இல்லாதவர், அன்பு நிறைந்தவர்
பிறப்பு இறப்பு இல்லாதவர்" (ஜபுஜி சாகிபு - தமிழாக்கம், லூர்து சகாயராணி, முதுநிலைப்பட்டயச் சான்றிதழ் படிப்பு ஆய்வேடு - 1998 - மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்) என்றவாறு கடவுட்கருத்தாக்கம் சித்திரிக்கப்பட்டுள்ளது.

திருவருட்பாவில் இராமலிங்கர் கடவுளை,

"இயற்கையிலே பாசங்கள் ஒன்றும் இலார் குணங்கள் ஏதுமிலார் தத்துவங்கள் ஏதுமிலார் மற்றோர் செயற்கை இல்லார் பிறப்பில்லார் இறப்பில்லார் யாதும்

திரிபில்லார் களங்கமே இல்லார் தீமை ஒன்றும் இல்லார் வியப்பற வேண்டுதல் இல்லார் வேண்டாமை இல்லார் மெய்யே மெய்யாகி எங்கும் விளங்கி இன்பமயமாய் உயத்தரும் ஓர் சுத்த சிவானந்தசபைதனிலே ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர் உண்டே கண்டீர்" (திருவருட்பா - திருச்சிற்றம்பலத் தெய்வமணி மாலை - 12) என்று கடவுள் பண்புநலன்கள் உரைக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| ஜபுஜி | - | திருவருட்பா |
| உண்மையானவர் | - | மெய்யே மெய்யாகி எங்கும் விளங்குபவர் |
| அன்பு நிறைந்தவர் | - | அன்புருவாம் பரசிவமே |
| பிறப்பு இறப்பு இல்லாதவர் | - | பிறப்பிலார் இறப்பிலார் |

என்றவாறு குருகிரந்தத்து ஜபுஜியிலும் இராமலிங்கரின் திருவருட்பாவிலும் கருத்துகள் ஒத்த தன்மையினவாய் விளங்குவதைக் காணமுடிகிறது.

இறையின் முறைமை குறித்துப் பேசும் மற்றொரு இடமும் வியப்பில் ஆழ்த்துகிறது.

"இறைமுறை என்பதுதான் வாழ்க்கை
இறைமுறைமைக்குள் வாழ்வதுதான் ஆசீர்வாதம்
இறைமுறைமையால் உயர்வும் தாழ்வும்
இறைமுறைமையால் சந்தோசங்களும் துக்கங்களும்
இறைமுறைமைக்குள்ளே ஒவ்வொருவரும் வாழ்கின்றனர்
இறைமுறைமைக்கு வெளியே எவரும் இல்லை"

என்பதாக ஜபுஜியில் இடம்பெற்றுள்ளது. அதே கருத்துடன் அருட்பாவின் வரிகள் பின்வருமாறு அமைகின்றன.

"பாட்டுவித்தால் பாடுகின்றேன் பணிவித்தால்
பணிகின்றேன் பதியே நின்னைக்
கூட்டுவித்தால் கூடுகின்றேன் குழைவித்தால்
குழைகின்றேன் குறித்த ஊணை
ஊட்டுவித்தால் உண்கின்றேன் உறங்குவித்தால்
உறங்குகின்றேன் உறங்காதென்றும்
ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் அந்தோ
இச்சிறியேனால் ஆவதென்னே"

(திருவருட்பா - தற்சுதந்திரம்இன்மை - 4)

மேற்குறித்த பாடல்கள் மனித வாழ்வின் அனைத்துமே இறைவிருப்பின்படியே இறைமுறைமையாலே நடைபெறுகின்றன என்பதற்குக் கட்டியங்கூறுவது போல அமைத்திருப்பதைக் காணமுடிகிறது. அப்படியே கொஞ்சம் இருபதாம்

நூற்றாண்டிற்கு நகர்ந்து வந்தால் பாரதியும் "யாதுமாகி நின்றாய் காளி எங்கும் நீ நிறைந்தாய் தீதுநன்மையாவும் உந்தன் தெய்வலீலையன்றோ" என்கிறான்.

எங்கிருந்தாலும் அருளாளர்களின் ஆன்மா ஒன்றுபோல்தான் அனுபவங்களை உணர்கின்றனவா அன்றி ஆண்டவர் அவர்க்கெல்லாம் ஒன்றேபோல உணர்த்துகின்றானா ? யாமொன்றறியேன் பராபாமே !

---

தொடர்பு: இராம. மலர்விழி மங்கையர்க்கரசி (malarmangay64@gmail.com)
தமிழ்த்துறைத் தலைவர், தியாகராசர் கல்லூரி

## 18. தமிழ் வெளியீட்டுக் கழகம் . . .

**– கோ.செங்குட்டுவன்**

அண்மையில், விழுப்புரம் மகாத்மா காந்தி பாடசாலைக்குச் சென்ற நான், அதன் தாளாளர் திரு.பெ.சு.இல.இரவீந்திரன் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது அவர், பள்ளியின் நூலக அறையினை எனக்குக் காண்பித்தார். அங்கு ஏராளமான நூல்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அத்தனையும், இரவீந்திரன் அவர்களின் தந்தையார் திருவாளர். பெ.சு.இலட்சுமணசுவாமி அவர்கள் இருபத்தைந்து, முப்பது ஆண்டுகளுக்கு முன்பு சேகரித்தவை.




என் பார்வையில் பட்ட நூல்களில் ஒன்று, “முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்”-எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம் அவர்கள் எழுதியது. ஏராளமானப் புகைப்படங்களுடன் 455 பக்கங்களில் வெளிவந்துள்ள அற்புதமான நூல். 1966 மார்ச்-ல் முதற்பதிப்பைக் கண்ட இந்நூலின் விலை ரூ.9.

ஆனாலும், அதில் என் கவனத்தைக் கவர்ந்தது, “தமிழ் வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு-அரசாங்கம்” என்றிருந்ததுதான். ஆமாம். தமிழ்நாடு அரசாங்கத்தின் சார்பில் தான் இந்நிறுவனம் இயங்கியிருக்கிறது. 1962இல் நிறுவப்பெற்ற தமிழ் வெளியீட்டுக் கழகம் 1966 வரை 136 நூல்களை வெளியிட்டுள்ளது.

1966ஆம் ஆண்டில் மட்டும், இந்த நிறுவனத்தின் சார்பில் பொருளாதாரம், வரலாறு, அரசியல், உளவியல், தத்துவம், அறவியல், அளவையியல், மானிடவியல், சமூகவியல், புவியியல், புள்ளியியல், விலங்கியல், பௌதிகவியல், மருத்துவம், பொதுநூல்கள் எனப் பல்வேறு தலைப்புகளில் 72 நூல்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன.

இந்தியப் பொருளாதாரம் பற்றி மட்டுமல்லாமல், இங்கிலாந்து பொருளாதார வரலாறு, அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி, கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி, கிரேக்க வரலாறு ஆகியவை குறித்தும் நூல்கள் வெளியிடப்பட்டுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 101ஆவது வெளியீடான "முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்" நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள, அப்போதைய தமிழக முதலமைச்சர் எம்.பக்தவச்சலம் அவர்கள், "தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்றுக்கொண்ட பிறகு, தமிழுக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில், இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளிவர வேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் நிறுவப்பெற்றது" எனத் தெரிவித்திருக்கிறார்.

பரவாயில்லை நல்ல முயற்சிதான். இது எத்தனை ஆண்டுகளுக்குத் தொடர்ந்தது எனும் விவரம் தெரியவில்லை.

தமிழ்நாட்டில் காங்கிரசு அரசாங்கம், குறிப்பாக பக்தவச்சலனார் அரசாங்கம் என்றதுமே வேறு மாதிரியான பிம்பங்கள்தான் நம்முன் வந்து நிற்கின்றன. ஆனாலும் இதுபோன்ற நல்ல காரியங்களும் தமிழுக்கு நடந்துதான் இருக்கிறது..!

---

தொடர்பு: கோ.செங்குட்டுவன் <ko.senguttuvan@gmail.com>

## 19. பேசல் மிஷன்-மங்களூர்

**– து.சுந்தரம்**

**முன்னுரை:**

இணையத்தில், வரலாறு, கல்வெட்டு தொடர்பான சில தேடுதல்களின்போது எதிர்பாராமல் சில செய்திகள் ஈர்க்கின்றன. அவ்வாறான ஒரு தேடுதலின்போது மங்களூரில் இருக்கும் ”பேசல் மிஷன்” (BASEL MISSION) பற்றிய ஒரு கட்டுரையைக் கருநாடக வரலாற்றுக் கழகத்தின் தொகுப்பு ஒன்றில் பார்க்க நேரிட்டது. கட்டுரையைப் படிக்கத் தொடங்கியதுமே, ஒரு நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் மனம் பாய்ந்துவிட்டது. மங்களூரின் ”பேசல் மிஷன்” (BASEL MISSION) வளாகத்துக்கருகிலேயே நாம் மூன்று ஆண்டுக்காலம் தங்கியிருந்துள்ளோமே என்று ஒரு வியப்புக் கலந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனால், மகிழ்ச்சியைக் கடந்து, ஒரு கழிவிரக்க உணர்வு. வரலாறு பற்றிய இப்போதிருக்கும் ஒரு விழிப்புணர்வும், ஆர்வமும், தேடுதலும் அப்போது இல்லாமல் எத்துணை மடமையோடு இருந்திருக்கிறோம் என்று ஓர் ஏமாற்ற உணர்வு.

1970-ஆம் ஆண்டு. கல்லூரிப் படிப்பை முடித்த பின்னர் ஒருங்கிணைந்த ‘அஞ்சல்-தொலைத்தொடர்பு’த்துறையில் எழுத்தர் பணியில் சேர்ந்து மங்களூர் சென்ற ஆண்டு அது. பணிக்கு முன்பு, பெங்களூரில் இரண்டு மாதப் பயிற்சியின்போது அறிமுகமான நண்பருடன் மங்களூரில் ‘பல்மட்டா’ (BALMATTA) என்னும் இடத்தில் வாடகை அறையொன்றில் உறைவிடம். தங்குமிடத்துக்கருகிலேயே ”பேசல் மிஷன்” (BASEL MISSION) அமைந்திருந்தது. அன்றாடம், இரவு உணவுக்காகத் தங்குமிடத்திலிருந்து பல்மட்டா கடைத்தெருவுக்குச் செல்லவேண்டும். ”பேசல் மிஷன்” (BASEL MISSION) வளாகத்துச் சுற்றுச் சுவரை ஒட்டியிருந்த மண்பாதையில் நடந்து செல்லவேண்டும். ”பேசல் மிஷன்” என்பது தெரிந்திருந்தது. அது ஓர் இந்திய அமைப்பல்ல; கிறித்தவச் சமயத்தைச் சார்ந்த ஒரு வெளிநாட்டு அமைப்பு என்று தெரிந்திருந்தது. ஆனால், அந்த அமைப்பு எவ்வாறு இயங்குகிறது, என்னென்ன பணிகள் நடைபெறுகின்றன, வளாகத்தின் உள்ளே சென்று அறிந்துகொள்ளவேண்டாமா என்பதான சிந்தனைகள் எழாமலே காலத்தைக் கழித்துவிட்டிருக்கிறோம் என்று இப்போது நினைக்கிறேன்.

கருநாடக வரலாற்றுக் கழகக் கட்டுரையை முழுதும் படித்தேன். அது கன்னட மொழியில் எழுதப்பட்ட ஒரு கட்டுரை. மங்களூரில் இருந்தபோது மொழிப்புலமை மிகுதியாக ஏற்படாவிடினும், எழுத்துகளின் (லிபிகளின்) மீதான ஓர் ஈர்ப்பு, என்னைக் கன்னட எழுத்துகளைக் கற்கத் தூண்டியது. ஓரளவு பயிற்சியேற்பட்டதும், எழுத்தாளர் சிவராம காரந்த் அவர்கள் கன்னட மொழியில் எழுதியிருந்த "அழித மேலே", "மூக்கஜ்ஜிய கனசுகளு" ஆகிய இரு புதினங்களைப் படித்துக் கதைகளைப் புரிந்துகொண்டேன். ('அழிதமேலே' என்னும் புதினத்தைச் சித்தலிங்கையா என்பவர் தமிழில் பெயர்த்திருந்தார். அதையும் பின்னாளில் படித்திருக்கிறேன். மூலத்தின் முழு உணர்வையும் தமிழில் மிக இயல்பாக - மொழிபெயர்ப்பு என்னும் எண்ணமே தோன்றாதவகையில் - மிக அழகாகப் படைத்திருந்தார். தலைப்பு 'அழிந்த பிறகு'. அருமையான ஒரு புதினம்.. அடுத்த புதினம் 'மூக்கஜ்ஜிய கனசுகளு'. அஜ்ஜி என்பது பாட்டியைக் குறிக்கும் கன்னடச் சொல்; 'மூக2' என்பது ஊமையைக் குறிக்கும் சொல். கனசு என்னும் கன்னடச் சொல் கனவு என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபாதலைக் காணலாம். சிவராம காரந்தரின் எழுத்து நடை அழகானது).

ஆண்டுகள் நாற்பத்தேழு கடந்துவிட்டதென்றாலும், மங்களூரின் சில நினைவுகள் மறையவில்லை. நாங்கள் தங்கியிருந்த பகுதி பல்மட்டா. எங்கள் அலுவலகம் ஹம்பனகட்டா என்னும் பகுதியில் அமைந்திருந்தது. தங்குமிடத்திலிருந்து அலுவலகம் நோக்கி நடந்து செல்வோம். போகும் வழியில், நகரின் புகழ் பெற்ற மோத்தி மகால் ஓட்டல். புத்தம் புதிய, அகன்ற திரை கொண்ட "பிளாட்டினம்" என்னும் பெயருடைய திரையரங்கும் வழியிலேயே அமைந்திருந்தது. அடுத்து, மிலாக்ரஸ் (MILAGRES) தேவாலயம். அதன் வளாகத்தை ஒட்டி எங்கள் அலுவலகக் கட்டிடம். தேவாலயத்தாருக்குரியது. எங்கள் அலுவலகம் தவிர வங்கி ஒன்று இயங்கியது என நினைவு. அலுவலகத்திலிருந்து நடந்து செல்லும் தொலைவில் இரயில் நிலையமும், வெண்லாக் (WENLOCK) மருத்துவமனையும். இந்த மருத்துவ மனை 1848-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. கதிரி மஞ்சுநாதர் கோயில் (சமணக்கோயிலாக இருந்த இக்கோயில் சைவக்கோயிலாக மாற்றம் பெற்ற வரலாறு அப்போது தெரிந்திருக்கவில்லை. சமண எச்சங்கள் இன்னும் உள்ளன எனத்தெரிகிறது), மங்கலாதேவி கோயில் (இது கண்ணகிக் கோயில் என்று கருதப்படுகிறது) ஆகிய கோயில்கள் மங்களூரின் சிறப்பு மிகு அடையாளங்கள். ப3ந்தர் (கடலை ஒட்டிய துறை), உள்ளால் கடற்கரை, கலையரங்கக் கட்டிடம், அதன் எதிரே பெரிய திடல் ஆகியன அடிக்கடி சென்றுவந்த ஒரு சில இடங்கள். (கலையரங்கில் புல்லாங்குழல் கலைஞர் மாலி அவர்களின் குழலிசையைக் கேட்க ஆவலுடன் சென்றதும், மேடையில் இசை நிகழ்ச்சி தொடங்கிய ஒரு சில நிமிடங்களிலேயே அவருடைய குடிப் பழக்கத்தால்

நிகழ்ச்சி நின்றுபோனதும் நினைவில் நின்றவை. அப்போது அவருடன் துணையாக ஒரு வெளிநாட்டுப்பெண்மணி (மனைவி?) யும் இருந்தார்.) திடலில், ஏதோ ஒரு விழாவின்போது கேட்ட, மதுரை சோமு, சீர்காழி கோவிந்தராஜன் ஆகியோரின் இசை நிகழ்ச்சிகளும், யக்ஷ கானமும் நினைவில் அடக்கம். இன்னொன்றும் உண்டு. திரைப்படம் பற்றியது. தமிழ்த் திரையுலகின் புகழ் பெற்ற இயக்குநர் பாலச்சந்தர் தம் ஆசான் என்று கூறுமளவு பெயர் பெற்ற கன்னட இயக்குநர் புட்டண்ண கணகலின் திரைப்படங்களும், கிரீஷ் கார்நாடின் திரைப்படங்களும். முதன்முதலாகத் துளு மொழியில் எடுக்கப்பட்ட திரைப்படத்தின் ஒரு பாடல் காட்சியின் படப்பிடிப்பை நேரில் பார்த்த நிகழ்வு. அடடா! ஒளிப்படக் கருவி ஒன்றிருந்திருந்தால் பல ஆவணங்கள் இப்போது கைவசம் இருக்கும். முன்னுரை நீண்டுவிட்டது. நினைவுகளின் தாக்கம்.

**பேசல் மிஷன்:**

பேசல், சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த ஒரு நகரம். பிரான்ஸ், ஜெர்மனி ஆகிய இரு நாடுகளின் எல்லையில் ரைன் நதிக்கரையில் அமைந்தது. சுவிஸ் நாட்டின் 23 மண்டலங்கள் அல்லது உள்நாட்டுப் பிரிவுகளுள் (CANTON) ஒன்றின் தலை நகர். வணிகம், கல்வி ஆகியவற்றின் மையம். 1815-ஆம் ஆண்டு. நெப்போலியனின் காலம். இரஷ்யாவுக்கும், பிரான்சுக்கும் இடையிலான போர் தொடர்பான அச்சம் எப்போதும் நிலவிக்கொண்டிருந்த சூழ்நிலை. பேசல் ஊரார் ஒன்றுகூடுகிறார்கள். போரின் தாக்கமின்றி ஊர் காக்கப்படவேண்டும் என்னும் ஒரே வேண்டுதல். வேண்டுதல் நிறைவேறினால் கிறித்தவ இறையியல் பள்ளி ஒன்று (SEMINARY) நிறுவப்படும். இவ்வாறு, 1816-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 16-இல் உருவானதுதான் "ஜெர்மன் இவாஞ்சலிகல் சொசைட்டி" (GERMAN EVANGELICAL SOCIETY) என்னும் இறையியல் கழகம். பின்னர், பேசல் மிஷன் எனப்பெயர் மாற்றம் பெற்றது. தொடக்கத்தில், சமயப் பரப்புக்காக ஆப்பிரிக்க நாட்டுக்கு மட்டும் சென்ற பரப்புநர்கள் நாளடைவில் வேறு நாடுகளுக்கும் செல்லத்தொடங்கினர்.

**மங்களூரில் பேசல் மிஷன் (1834):**

1834-ஆம் ஆண்டு, ஜான் கிறிஸ்டோ·்ப் லெஹனர் (JOHN CHRISTOPH LEHNER), கிறிஸ்டோ·்ப் லியோனார்ட் க்ரெனர் (CHRISTOPH LEONARD GRENER), சாமுவெல் ஹெபிக் (SAMUEL HEBICH) ஆகிய மூவர் கள்ளிக்கோட்டை வழியாக மங்களூர் அடைந்து செயல்படத் தொடங்கினர். கருநாடகத்தின் தென் கன்னடம், தார்வாடா, பிஜாப்பூர் ஆகிய பகுதிகளில் கல்வி, தொழிற்சாலைகள் ஆகிய துறைகளில் தங்கள் பணியைத் தொடங்கினர். மேற்கத்திய கல்வி முறை மதமாற்றத்துக்கு முதன்மையானது என்று கருதி மேற்கத்திய கல்வி முறையில் கருத்தைச் செலுத்தினார்கள். மேலே குறிப்பிட்ட ஹெபிக் என்பார், 1836-ஆம் ஆண்டு நான்கு

பேசல் மிஷன்




பெல்மாண்ட் (பல்மட்டா) தேவாலயம்




ஆங்கிலப்பள்ளி



மாணவர்களைக் கொண்டு ஆங்கிலப்பள்ளி ஒன்றைத் தொடங்கினார். அடுத்த ஆண்டே, மோக்லிங் (MOEGLING) என்பார் தார்வாடாவில் பள்ளியைத் தொடங்கினார். அடுத்தடுத்து, ஹுப்ளி, கடக், கொடகு (குடகு) ஆகிய இடங்களில் "ஆங்கிலோ வெர்னாகுலர் பள்ளி" என்னும் பெயரில் பள்ளிகள் உருவாயின.

**பள்ளிகள்:**

பேசல் மிஷன் உருவாக்கிய பள்ளிகள் வியத்தகு முறையில் விரிவடைந்தன. ஒழுக்கம், தொழிற்கல்வி ஆகிய இரண்டுக்கும் முதன்மை அளிக்கப்பட்டது. 1853-இல் ஏறத்தாழ ஐம்பது தொடக்கப் பள்ளிகள்; எட்டு உயர்நிலைப் பள்ளிகள். மங்களூரில் பெல்மாண்ட் (BELMONT) என்னும் ஒரு பெரிய மாளிகை கட்டப்பெற்று அங்கு பேசல் மிஷன் இயங்கியது. பெல்மாண்ட் என்னும் பெயர் நாளடைவில் மருவி, மிஷன் இயங்கிய அந்தப்பகுதிக்கு பல்மட்டா (BALMATTA) என்னும் பெயர் நிலைத்துவிட்டது. அங்கே பெல்மாண்ட் சர்ச் என்னும் பெயரில் ஒரு தேவாலயம் 1862-இல் கட்டப்பெற்றது.

தொடர்ந்து ஹுப்ளி, தார்வாடா பகுதிகளிலும் தேவாலயங்கள் கட்டப்பெற்றன. பெல்மாண்ட் தேவாலயம் நூறாண்டுகளுக்குப் பின்னர் 1962-இல் அதன் பழமை மாறாமல் புதுப்பிக்கப்பட்டது.

**மதமாற்றங்கள்:**

1842-ஆம் ஆண்டு வாக்கில் மதமாற்றங்கள் நிகழ்ந்திருந்தன. அந்த ஆண்டில், ஆனந்தராவ் கௌண்டின்யர் என்னும் பிராமணர் கிறித்துவத்தைத் தழுவினார். அவரைத் தொடர்ந்து பகவந்தராவ் கௌசிக், முகுந்தராவ் கௌசிக் ஆகிய இரு பிராமணர்களும் மதம் மாறினர். இதற்குக் காரணமானவர் மோக்லிங் (REV. MOEGLING) என்பாரே. ஆனந்தராவ், குடகுப்பகுதிக்குச் சென்று சமயப்பரப்புப் பணியைக் கைக்கொண்டார். 'ஹொலெய(ர்)', 'பில்லவர்' ஆகிய குலத்தவர் மதம் மாறினர். கன்னட மொழியில் 'ஹொலெயர்' எனில், தமிழில் 'பொலெயர்' என்றாகிறது. தமிழகத்தில் நாம் குறிப்பிடும் புலையரே இவர்கள் என்பதில் ஐயமில்லை. பில்லவர் என்பவர் வில் கொண்டு வேட்டைத் தொழிலில் ஈடுபட்ட வில்லிகள் என்று கன்னடக் கட்டுரை எழுதிய ஆய்வாளர் குறிப்பிடுகிறார்.

**தொழிற்பயிற்சிகள் (1844):**

மதமாற்றம் பெற்றவர்கள் சமுதாயத்தினரால் புறக்கணிக்கப் பட்டதால் அவர்களின் தற்சார்பு வாழ்க்கைக்கு உதவும் பல்வேறு தொழிற்பயிற்சிகளை மெட்ஸ் (REV. METZ) என்னும் ஜெர்மானியப் பாதிரியார் வழங்கினார். குறிப்பாக நெசவுப்பயிற்சி. இது நடைபெற்றது 1844-ஆம் ஆண்டு.

**மங்களூர் ஓடுகள் (1865):**

அடுத்து, ஓடுகள் செய்தல். மங்களூர்ப் பகுதியில் கும்பாரர் என்று வழங்கும் மண்ணாளர்கள் திகரி என்னும் சக்கரத்தைக் கொண்டு கைகளால் உருவாக்கிய நாட்டு ஓடுகளுக்கு மாற்றாக இயந்திரங்கள் கொண்டு ஓடுகள் உருவாக்கும் தொழிற்சாலையை பிளெபாத் (PLEBOT) என்னும் பெயருடைய ஜெர்மன் பாதிரியார் 1865-ஆம் ஆண்டு தோற்றுவித்தார். இவருடைய இயற்பெயர் ஜார்ஜ் பிளெப்ஸ்ட் (GEORGE PLEBST) என்பதாகும். பேசல் மிஷன் ஓட்டுத்தொழிற்சாலை என்னும் பெயரில் அது செயல்படத் தொடங்கியது. (நாட்டு ஓடு என்னும் தமிழ் மொழி வழக்கை அப்படியே கன்னட மொழியில் "நாட ஓடு" என்று கன்னட ஆய்வாளர் வழங்குவது குறிப்பிடத்தக்கது. பழங்கன்னடச் சொல் தமிழை ஒட்டியே இருந்தது என்பதற்கு இதுவே சான்று. ஓடு என்பதற்குப் பின்னர் வழங்கிய கன்னடச் சொல் ஹென்ச்சு என்பதாகும்).

ஓட்டுத் தொழிற்சாலை - பெயர் முத்திரை




ஓட்டுத் தொழிற்சாலை



மங்களூர் ஓடுகள் - ஒரு தோற்றம்



மற்றுமொரு தொழிற்சாலை



நாள்தோறும் பன்னிரண்டு தொழிலாளிகளின் உழைப்பில் ஐந்நூற்று அறுபது ஓடுகள் வெளிவந்தன. இந்த ஓடுகள் ஆப்பிரிக்க, ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. பின்னர், ஐம்பத்திரண்டு தொழிற்சாலைகள்; ஆயிரக்கணக்கில் தொழிலாளர்கள்.

**பேசல் மிஷன்-அச்சுத்தொழில் (1841):**

பேசல் மிஷன் பதிப்புத்தொழிலிலும் இறங்கியிருந்தது. 1817-இல் 'கன்னட மொழியின் இலக்கணம்' (A GRAMMAR OF THE KARNATA LANGUAGE) என்னும் பெயரில் கல்கத்தாவிலிருந்து பேசல் மிஷன் பதிப்பித்த நூல் வெளியானது. தொடர்ந்து, கன்னட மொழிக்கான நிகண்டு, இலக்கியம் ஆகிய துறைகளில் நூல்கள் பதிப்புப் பெற்றன. முதன் முதலில் கன்னட மொழியில் கன்னட லிபியில் விவிலியத்தை ஜான் ஹாண்ட்ஸ் (JOHN HANDS) என்பார் நூலாக வெளியிட்டார். இது அப்போதைய மதராசில் "கமர்ஷியல் பிரெஸ்" என்னும் அச்சகத்தின் வாயிலாக அச்சேறியது. 1824-இல், ரெவரெண்ட் ரீவ் (REV.REAVE) என்பவரது முயற்சியால் ஆங்கிலம்-கன்னடம் அகரமுதலி பதிப்பிக்கப்பெற்றது. 1840-ஆம் ஆண்டு, பெங்களூரில் வெஸ்லி மிஷனரியைச் (WESLEY MISSIONARY) சேர்ந்த காரெட் (GARETTE) என்பார் அரசு அச்சகத்தை நிறுவினார். இதைத் தொடர்ந்து 1841-இல் பேசல் மிஷன் அமைப்பினரும் மங்களூரில் "ஜெர்மன் இவாஞ்சலிகல் மிஷன் பிரஸ்" (GERMAN EVANGELICAL MISSION PRESS) என்னும் பெயரில் அச்சகம் ஒன்றை நிறுவினார்கள். கன்னட லிபியில் "துளு கீர்த்தனைகள்" நூலாக வெளிவந்தது. 1843-இல் "மங்களூரு சமாச்சார" என்னும் இதழ் வெளியாயிற்று. 1859-இல் கொங்கணி மொழியில் கன்னட லிபியில் நூல்கள் வெளியாயின. மற்ற மொழிகளிலும் செய்தித் தாள்கள் வெளியாயின. ஜெர்மன் மிஷனரியைச் சேர்ந்த ரெவ. குண்டர்ட் (REV.GUNDERT) என்னும் மொழியியல் அறிஞர் மலையாளம்-ஆங்கிலம் அகர முதலியை அச்சேற்றினார். அண்மையில் 2016-ஆம் ஆண்டு, பேசல் மிஷன் அச்சகம், 175 ஆண்டுகள் நிறைவினைக் கொண்டாடியுள்ளது.

அச்சகம்



மங்களூரில் அச்சான மலையாளம் - ஆங்கிலம் அகரமுதலி


A

MALAYALAM AND ENGLISH

DICTIONARY

BY

Rev. H. GUNDERT, D. Ph.

Part I: The Vowels

MANGALORE

PUBLISHED BY C. STOLZ

1871

*All rights reserved.*

**முடிவுரை:**

பல்லாயிரம் கற்கள் தொலைவைக் கடந்து கிறித்தவ இறையியல் பரப்பு என்னும் நோக்கத்தில் கருநாடகத்துக்கு வந்த பேசல் மிஷன் அமைப்பு பலவகைப்பட்ட சமுதாயப் பணிகளை ஆற்றிக் கருநாடக வரலாற்றில் நீண்டதொரு இடத்தைக் கொண்டுள்ளது என்பதும் நூற்று எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் நிலைத்து நின்று செயலாற்றியுள்ளது என்பதும் பெருஞ்செயலாகும்.

ஒளிப்படங்கள் : இணையத்திலிருந்து எடுக்கப்பட்டவை.

---

தொடர்பு:
து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை (doraisundaram18@gmail.com)
அலைபேசி : 9444939156.

## 20. அம்மா - தமிழகத்தின் இரும்புப் பெண் - நூல் விமர்சனம்

**– முனைவர்.க.சுபாஷிணி**




**அம்மா - தமிழகத்தின் இரும்புப் பெண்**
முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்
பதிப்பு: Giri Law Hause, Madurai, Tamil Nadu.

தமிழக அரசியல் தளத்தில் மிக முக்கியப்பங்கு வகித்த ஒரு அரசியல் தலைவர் முன்னாள் தமிழக ஜெயலலிதா அவர்கள். அவர் அரசியலுக்கு வந்த நாள் தொடங்கி இவ்வுலகை விட்டு மறைந்த நாள் வரையிலான அவரது ஒவ்வொரு நடவடிக்கைகளும் வெகுவாக மக்களின் கவனத்தை ஈர்த்தவை. ஜெயலலிதா என்ற பெண்மணி ஒரு சாதாரண பெண்ணாக இருந்து, பலரும் புகழும் நடிகையாக வளர்ந்து, பின்னர் தமது தொண்டர்களால் 'அண்ணி' என்றும் பின்னர் 'அம்மா' என்றும் புதுப்பரிமாணம் பெற்ற தகவல்களை இந்த நூல் வாசகர்களாகிய நமக்கு வழங்குகின்றது.

நம்மைச் சுற்றிலும் நடக்கும் பல செய்திகள் நாளடைவில் நமது நினைவுகளிலிருந்து நீங்கி விடுகின்றன. பொதுவாக அவ்வப்போது பேசப்படுகின்ற செய்திகள் மட்டிலும் தலைதூக்கி அவ்வப்போது தனது இருப்பைக் காட்டும் போது அவை சிறிது பேசப்பட்டு பின் மீண்டும் நினைவுத் தளத்தின் பின் பக்கத்திற்குச் சென்று விடுகின்றன. ஜெயலலிதா அம்மையாரைப் பற்றிய நினைவுகளும் அப்படித்தான். ஜெயலலிதா என்றால் இன்று நமது நினைவில் கண் முன்னே காட்சியளிப்பது ஒரு நடிகை அரசியல்வாதியான ஒரு நிகழ்வும் பின்னர் அவரது மரணமும், அதன் பின்னனில் இருக்கும் மர்மங்களுமே. அம்மா என்று அழைத்து காலில் விழுந்து வணங்கியவர்களும் ஹெலிகாப்டரில் பறக்கும் போதும் கீழே விழுந்து வணங்கியவர்களும் கூட இன்று அவரது பெயரைக் களங்கப்படுத்தும் முயற்சிகளில் இறங்கி விட்டனர். இந்தச் சூழலில் செல்வி ஜெயலலிதா அவர்களின் வாழ்க்கை சரிதத்தின் பல முக்கியச் செய்திகளையும் நிகழ்வுகளையும், சங்கடங்களையும், சாதனைகளையும், குற்றங்களையும், முடிச்சு

அவிழ்க்கப்படா மர்மங்களையும் தொட்டுப் பேசுகின்றது முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன் அவர்கள் எழுதி யிருக்கும் இந்த நூல்.

ஸ்ரீரங்கத்தின் ரங்கசாமி ஐயங்கார் பெங்களூர் இந்துஸ்தான் ஏரோநாட்டிக்ஸில் வேலை கிடைத்து சென்றபோது தனது குடும்பத்தையும் உடன் அழைத்துச் செல்கின்றார். அங்கு மைசூரில் பிரபல டாக்டர்.ரங்காச்சாரி மகன் ஜெயராமுக்கு மகள் வேதாவைத் திருமணம் செய்து வைக்கின்றார். ஜெயராம் வேதா தம்பதியினருக்கு இரண்டு குழந்தைகள். அவர்களில் ஒருவர் தான் 1948ம் ஆண்டு பிப்ரவரி 28ம் தேதி பிறந்த கோமளவல்லி என்ற இயற்பெயர்கொண்ட ஜெயலலிதா. பிறக்கும் போது வசதியாக இருந்த குடும்பம் பின் தந்தையின் ஊதாரித்தனத்தால் மிகவும் கஷ்டப்படும் நிலைக்கு வந்தது. விமானப்பணிப்பெண்ணாக இருந்த சித்தி அம்புஜா அன்று வித்யாவதி என்ற பெயரில் தமிழ்ச்சினிமா உலகில் நுழைந்தார். இரண்டு குழந்தைகளையும் காப்பாற்ற வேதாவும் சினிமா துறையில் காலடி எடுத்து வைத்தார். சந்தியாவாக மாறினார். பள்ளிப்படிப்பிலும் நடனத்திலும் மிகத்தேர்ந்தவராக இருந்தார் கோமளவல்லி. பின்னர் படிப்படியாக திரைப்படம் , மேடை நாடகங்கள் என அவரது வாழ்க்கை தொடர்ந்தது. ஒய்.ஜி.பார்த்தசாரதியின் ஆங்கில மொழி நாடகத்தில் அப்போது வாய்ப்பு வந்தது. The Hold truth, The House of the August Moon ஆகிய நாடகங்களில் ஜெயலலிதா நடித்தார். அப்போது அவரோடு நடித்தவர்களில் சோ வும் ஒருவர். இவர்கள் நட்பு அன்றிலிருந்து இறுதி வரை தொடர்ந்தது. பின்னர் கன்னட மொழிப்படம் எனத்தொடங்கி தமிழ்ப்பட உலகில் மிக அதிக சம்பளம் பெற்ற கதாநாயகியாகவும் வலம் வந்தவர்.

ஜெயலலிதாவின் அரசியல் பிரவேசம் எதேச்சையாக நடந்ததுதான் என்றாலும் தனது திறமையினாலும் அறிவுக் கூர்மையினாலும் தனது இருப்பை அவர் தக்க வைத்துக் கொண்டார் என்றே கூறவேண்டும். தனது சமகாலத்து ஏனைய பெண் அரசியல்வாதிகளான, இந்திராகாந்தி அம்மையார், பெனாசீர் பூட்டோ போன்று இவருக்கு அரசியல் குடும்பப் பின்னணி என்பது அமையவில்லை. ஆனால் அதற்கும் மாறாகப் பல குழப்பங்கள் நிறைந்த குடும்பப் பின்னணியே இருந்தது. ஆணாதிக்கம் நிறைந்த அரசியல் சூழலில் தனது இருப்பை நிலை நாட்டிக் கொள்ள அவர் எடுத்த முடிவுகளும் செயல்படுத்திய நடவடிக்கைகளும் அவரது வெகுவான நூல் வாசிப்பு தந்த பரந்த விரிவான வாசிப்பின் மூலமாகத்தான் அமைந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அம்மையார் ஜெயலலிதா வாழ்வில் அவர் தானே வலிந்து தனக்கு ஏற்படுத்திக் கொண்ட களங்கம் என்றால் அது அவர் தனது வளர்ப்பு மகனாக சில

காலம் தத்தெடுத்த சுதாகரனின் திருமணத்திற்காக அவர் செய்த படோடோபமான கோலாகலத் திருமண நிகழ்வு என்பது மறுக்க முடியாதது. தன்னை ஒரு மகாராணியாக நினைத்துக் கொண்டு அவரும் சசிகலாவின் குடும்பத்தாருமாக அன்று செய்தவையே அவரது தாழ்விற்கு முக்கியக் காரணமாக அமைகின்றது. இன்றளவும் அம்மையார் ஜெயலலிதாவின் வாழ்க்கையில் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய கரும்புள்ளியாக இருப்பது இந்த நிகழ்வே. இதனை தன் வாழ்வில் அவர் யோசித்துத் தடுத்திருந்தால் தமிழகம் போற்றும் தாயாகத் தமிழ் மக்கள் பலரால் அவர் போற்றப்பட்டிருப்பார். அது நடைபெறாமல் போனதற்கு அவரே முழுக்காரணம் என்று தான் சொல்லவேண்டும்.

தமிழகத்தில் வேறெந்த முதலமைச்சருக்கும் இல்லாத வகையில் 6 முறை முதலமைச்சர் பதவியை வகித்தவர் என்ற பெருமை அவருக்கு உண்டு. இவர் ஏற்படுத்திச் செயல்படுத்திய நலத் திட்டங்களால் ஏழை எளியப் பெண்களுக்கு குறிப்பிடத்தக்க அனுகூலங்கள் கிடைத்ததை மறுக்கவியலாது. 5 ரூபாயில் முழுச்சாப்பாடு என்று அம்மா உணவகம் செயல்பட்டபோது முதலில் கேலி பேசியவர்கள் கூட பின்னர் அதனைப் பாராட்டித் தான் பேசினார்கள். கல்லூரி மாணவர்களுக்குக் மடிக்கணினி, பெண்களுக்கு சைக்கிள், திருமணத்திற்குக் காசு, குழந்தைப் பேறு நலன், இலவச மருந்தகங்கள் எனப் பல நலன் திட்டங்கள் இவரால் அமல் படுத்தப்பட்டன. இதனால் தான் இவரது இழப்பை நினைத்து இன்றளவும் ஏழைப் பெண்கள் தங்கள் வீட்டுப் பெண்ணே இறந்து போனது போல நினைத்து வருந்தினர்.

ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த வாழ்க்கையில் சலிக்காமல் அலுக்காமல் முன்னேற்றப்பாதையை மட்டுமே கருத்தில் கொண்டு வெற்றியை நோக்கியே தமது பயணத்தை அமைத்துக் கொண்டவர் அம்மையார் ஜெயலலிதா. தன் வாழ்வில் அவர் எல்லா நேரங்களிலும் புத்தகம் வாசித்தவராகவும், நேரத்தை முறையாகப் பயன்படுத்தியவராகவும் தனது நெருக்கமான வட்டத்தினரால் அறியப்படுகின்றார். தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, இந்தி, கன்னடம், மலையாளம் எனப் பல மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவராகத் திகழ்ந்திருக்கின்றார். நாடாளுமன்ற உறுப்பினராக பணியேற்ற பின்னர் இவர் வழங்கிய முதல் உரையே பலரது கவனத்தை ஈர்த்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்த நூலில் அம்மையார் ஜெயலலிதாவைப் பற்றி விருப்பு வெறுப்பு இல்லாமல் நூலாசிரியர் செய்திகளை வழங்கியிருக்கின்றார். அதில் சிலவற்றைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

- நூலில் முழுமையாக இடம்பெறும் 2 பேட்டிகள்
- நாடாளுமன்ற உரை
- இவரது மரணம் தொடர்பாக சமூக வலைத்தளங்களில் பொது மக்களால் கேட்கப்பட்ட கேள்விகளின் தொகுப்பு
- அப்போலோவில் இறுதி நாட்கள் - புள்ளி விவரத்துடன் தேதி வாரியாக
- சொத்துக் குவிப்பு வழக்கின் முழு விபரங்கள் - நீதிபதி குன்ஹா அறிக்கை, மேல்முறையீட்டுத் தகவல்கள்
- சொத்து குவிப்பு வழக்கு கால அட்டவணை
- முழுமையான சொத்து விவரங்கள், சொத்து மதிப்பு
- அவர் பெற்ற விருதுகள்

நூல் ஆசிரியர் சந்திரிகா அவர்கள் ஜெயலலிதா அம்மையாரை நேரில் சந்தித்து அவருடன் சில பணிகளில் இணைந்து செயலாற்றியவர் . சட்டத்துறை வல்லுநர் என்பதால் இந்த நூலை மிகக் கவனமாக ஆதாரப்பூர்வமான தகவல்களை மட்டுமே திரட்டி நூலாக வழங்கியிருக்கின்றார்.

கடந்த நூற்றாண்டின் ஆணாதிக்க அரசியல் சூழலில் அம்மையார் ஜெயலலிதாவின் வாழ்க்கை பயணம் என்பது முள் வேலிக்குள் எடுத்து வைத்த அடிகளாகத்தான் அமைந்திருந்தன. எளிமையான பெண்ணாக இருந்து கனவுக்கன்னியாக வளர்ந்து அரசியல் சாணக்கியம் கற்று, தன் தவற்றால் வீழ்ந்து மீண்டு வளர்ந்து தன் இறுதி நாள் வரை அரசியலில் இரும்பும் பெண்மணியாக வலம் வந்தவர் அம்மையார் ஜெயலலிதா அவர்கள். இவர் விட்டுச் சென்ற அ.தி.மு.க எனும் அரசியல் கட்சி இன்றைய நடப்புச் சூழலைக் காணும் போது மிகவும் பின் தங்கிச் செல்லும் அபாயத்தை வெளிக்காட்டுகின்றது. எம்.ஜி.ஆர், ஜெயலலிதா என்ற இரண்டு சகாப்தங்கள் மட்டுமே அ.தி.மு.க என்ற இந்த அரசியல் கட்சிக்கு இருந்த பலங்கள். அடுத்து வரும் இக்கட்சியின் தொண்டர்கள் தங்கள் முன்னாள் தலைமையின் செயல் திறமையைக் கருத்தில் கொண்டு திட்டங்களையும் வியூகங்களையும் மக்கள் நலம் சார்ந்த செயல்பாடுகளையும் முன்னெடுத்தால் மட்டுமே அ.தி.மு.க அரசியல் தளத்தில் தொடர்ந்து நடைபோடலாம்.

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி <ksubashini@gmail.com>

## 21. இழையெடுத்தல் (பிள்ளையார் நோன்பு)

**– முனைவர் கி. காளைராசன்**

உ
சிவமயம்
ஸ்ரீ மரகத விநாயகர் துணை

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் கோலம் செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா.

வாக்குண்டாம் நல்லமனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு - ஔவையார்

**நகரத்தார் பிள்ளையார் நோன்பு**

கார்த்திகை / மார்கழி மாதம் சுக்கில பக்ஷம் (வளர்பிறை) சஷ்டி திதியும், சதய நட்சத்திரமும் கூடும் நாள். கார்த்திகை திருவண்ணாமலை தீபத்திலிருந்து 21 / 22ம் நாளில் வரும் நகரத்தார் பிள்ளையார் நோன்பு. **நாம் நாணயமாகவும், வார்த்தை மாறாமலும் இருக்க வேண்டுமென** நம்மில் முன்னோர்கள், 21-நூலில் திரி எடுத்து கருப்பட்டி பணியார மா (அல்லது) திரட்டுப் பாலில், இணைத்து விநாயகப் பெருமானை வணங்கி, பிரார்த்தனை செய்து நாவில் எடுத்துக்கொண்டது.

| | |
|---|---|
| 1. விநாயகர் விக்ரஹம் அல்லது படம் | 11. பொட்டுக்கடலை உருண்டை |
| 2. கோலக்கூடு | 12. கருப்பட்டி பணியாரமா (அல்லது) திரட்டுப்பால் |
| 3. இழை எடுக்கவேண்டிய கோடி வேட்டித்துண்டு | 13. சாமி வீட்டில் 5 முக விளக்கு - 1, விநாயகரிடம் சிறு விளக்கு - 1 |
| 4. தும்பு பிடிக்க நூல் சரடு | 14. தாம்பாளம் - 2 (திரி - மா வைக்க) சிறு கிண்ணம் 7+ 2 = 9 |
| 5. நெல் பொரி | 15. பசுவ நெய் 1 கிண்ணத்தில் |
| 6. எள் பொரி | 16. தேங்காய் - 1, வாழைப்பழம் - 2, வெற்றிலை பாக்கு, ஊதுபத்தி, கற்பூரம் - மணி, வெண்சங்கு - 1 |
| 7. கம்பு பொரி | |
| 8. கடலை உருண்டை | |
| 9. பொரி உருண்டை | |
| 10. எள்ளு உருண்டை | |

குறிப்பு: 1¼- (15") ஆவரம் குச்சியில் - ஆவரம் பூ கொத்து, கண்ணுப்புல் - நெல்கதிர் மணிகள் - 3ம் சேர்த்துக்கட்டி, சாமி வீடு முன்னமோ, சாமி வீடு முன்பு காவணபத்தி முத்தத்திலோ கட்டவேண்டும்.

விநாயகப் பெருமானை மார்கழியில் எண்ணித் துதிப்போருக்கு வல்வினைபோம் நல்வாக்கு உண்டாகும், நல் மனமுண்டாகும், துன்பம்போம் திருமகளின் கண்நோக்கு உண்டாகும் எள்அளவும் ஐயமில்லை. ஒன்றியிருந்து நினைமிங்கள் உந்தமக்கு ஊனமில்லை

NN

" நூல் பல கல் " " மருந்தே ஆயினும் விருந்தோடு உண் " " பிழைபடச் சொல்லேல் "

வழிவழியாக, வாழையடி வாழையாக முன்னோர் செய்த செயல்களைத் தொன்று தொட்டுச் செய்து வருவதை மரபு என்கிறோம். மரபுகளைப் பேணிக்காப்பதில் இந்தியர் அதிலும் குறிப்பாகத் தமிழர் தனியிடம் பெறுகின்றனர். தமிழருள்ளும் நாட்டுக்கோட்டை நகரத்தார் என்றழைக்கப்படும் நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகத்தினர் தங்களது முன்னோர்கள் செய்து வந்தனவற்றை அப்படியே மாறாமல் இன்றளவும் கடைப்பிடித்து மரபுகளைக் காத்து வருகின்றனர்.'

இவ்வாறாக நாட்டுக் கோட்டை நகரத்தார் சமூகத்தினால் காலங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் ஒரு வழிபாட்டு முறைதான் "பிள்ளையார் நோன்பு". இவ்விழாவினைப் "பிள்ளையார் சஷ்டி" என்றும் "இழை எடுத்தல்" என்றும் கூறுகின்றனர்.

பிள்ளையார் நோன்பின் போது வழிபடுவதற்கு என உள்ளங்கைக்குள் அடங்கும் அளவிற்கு ஒரு வெள்ளியிலான பிள்ளையாரைரோ அல்லது தங்கத்தினாலான பிள்ளையாரையோ பிறந்தவீட்டுச் சீராகக் கொடுக்கின்றனர். அந்தப் பிள்ளையாரின் பின்புறத்தில் தங்களது பெயர் முகவரியையும் (initials) பொறித்து வைத்திருக்கின்றனர்.

பெரிய கார்த்திகை என்றழைக்கப்படும் கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் திருவண்ணாமலையில் தீபம் ஏற்றப்படும் மறுநாளிலிருந்து பிள்ளையார் நோன்பு விரதத்தை ஆரம்பிக்கின்றனர். ஒவ்வொரு நாளும் நாள்

முழுதும் விரதமிருந்து மாலைப் பொழுது சாய்ந்ததும் பிள்ளையாரை வழிபடுகின்றனர்.

ஒவ்வொரு நாள் வழிபாட்டின்போதும் புதுத்துண்டு அல்லது புதுவேட்டியிலிருந்து ஒரு சிறிய நூல் இழையை எடுத்து வைக்கின்றனர். இதனை "இழையெடுத்தல்" என்கின்றனர். இவ்வாறு 21 நாட்கள் இழையை எடுத்து வைத்து வழிபடுகின்றனர். இதனால் 21 சிறிய நூலிழைகள் சேர்ந்து விடுகின்றன. இந்த இழைகளை ஒன்றாக்கி, வீட்டில் உள்ளவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்றபடி பல இழைகளாக நறுக்கி வைத்துக் கொள்கின்றனர். கருவுற்ற பெண்ணிற்கு ஒன்று என்றும் அவளது வயிற்றில் வளரும் பிள்ளைக்கு ஒன்று என்றும் கணக்குப் போட்டுக் கொள்கின்றனர். கைம்பெண்களை மட்டும் எண்ணிக்கையில் சேர்த்துக் கொள்வதில்லை. எண்ணிக்கையை விடக் கூடுதலாகவோ குறைவாகவோ இழையை நறுக்குவது இல்லை.

21ஆவது நாள் முடியும் போது சதயநட்சத்திரமும் சஷ்டி திதியும் ஒன்றாக வரும் நாள் இரவு பிள்ளையாரை வழிபட்டு நோன்பினைப் பூர்த்தி செய்கின்றனர். 21 நாட்களும் வழிபடாவிட்டாலும் கடைசிநாள் அன்று நகரத்தார் அனைவரும் எங்கிருந்தாலும் தவறாது பிள்ளையாரை வழிபட்டு இழையெடுத்துக் கொள்கின்றனர். வெளிநாட்டில் உள்ளோரும் ஏதேனும் ஒரு இடத்தில் ஒன்றுகூடி இழையெடுத்துக் கொள்கின்றனர்.

வாக்கப்பட்டுச் (வாழ்க்கைப்படுதல்) சென்ற மகள் வீட்டிற்குப் பொங்கல் தீபாவளி முதலான பண்டிகைகளுக்கு பிறந்த வீட்டிலிருந்து சீர் அனுப்புவர். அதுபோல இந்தப் பிள்ளையார் நோன்பிற்கும் பிறந்த வீட்டிலிருந்து இந்தப் பிள்ளையார் நோன்பினை மேற்கொள்வதற்கான அனைத்துப் பொருட்களையும் வைத்துச் சீர் அனுப்புகின்றனர்.

குடும்பத்தலைவன் (கணவன்), குடும்பத் தலைவி (மனைவி) மற்றும் பிள்ளைகள் அனைவரும் ஒன்றுகூடி வழிபாட்டிற்கான வேலைகளைச் செய்கின்றனர். பிள்ளையார் நோன்பு அன்று, மாலை நேரம் வீட்டினைக் கழுவித் துடைத்துச் சுத்தம் செய்து பூசையறையில் ஒரு பெரிய கோலம் போடுகின்றனர். அதன் பின்னர் பூசைக்குத் தேவையான கருப்பட்டி அப்பம், பொரி, அவல், எள்ளுப் பொரி முதலான 21வகை உணவுப் பொருட்களைப் பிள்ளையாருக்குப் படைக்க எடுத்து வைத்துக் கொள்கின்றனர். இதில் 'எள்ளுப் பொரி' விசேடம்.

பொங்கலன்று சர்க்கரைப் பொங்கலும், தீபாவளியன்று எண்ணைப் பலகாரங்களும் சிறப்புடையன. பிள்ளையார் நோன்பில் கருப்பட்டியப்பம் சிறப்புடையது. கருப்பட்டியைக் காய்ச்சிப் பாகு எடுத்து அதில் அரிசிமாவையும் சேர்த்து மாவுபிசைந்து அப்பம் சுட்டு வைத்துக் கொள்கின்றனர். இவ்வாறு அப்பம் சுடுவதற்கு எண்ணைய்ச் சட்டியில் மாவை ஊற்றுவதற்கு முன்பு சங்கு ஊதுகின்றனர். பொங்கல் விழாவின் போது, பால் பொங்கி வரும்போது சங்கு ஊதுவோம், பிள்ளையார் நோன்பின்போது சங்கு ஊதிய பின்னரே அப்பம் சுடுகின்றனர்.

வீட்டில் உள்ள பழமையான ஏடுகளை எடுத்து, அதில் சுற்றியிருக்கும் நூல்கயிற்றைப் பிரித்து, அந்த நூல்கயிற்றை பச்சரிசியை அரைத்து எடுத்த மாவில் முக்கி எடுக்கின்றனர். அந்தக் கயிற்றை (தும்பு) ஆளுக்கு ஒருபக்கமாகப் பிடித்துக் கொண்டு சுவரில் ஒட்டினார் போல் வைத்துக் கொண்டு, ஒரு கையினால் சுண்டி விடுகின்றனர். இவ்வாறாக பூசையறையில் உள்ள சுவரில் இரண்டு இடங்களில் வீடு போன்று மாக்கோலம் போடுகின்றனர். இதனைத் "தும்பு பிடித்தல்" என்று குறிப்பிடுகின்றனர். தும்பு பிடித்தல் மூலமாகச் சுற்றில் வீடுபோன்றதொரு மாவுக்கோலம் போட்டுவிடுகின்றனர்.

ஆவாரம்பூ, கண்ணுப்பிள்ளைப்பூ (கண்ணுப்பூளைப்பூ), நெற்கதிர் இவற்றைச் சேர்த்து ஒரு சிறிய ஆவாரங் குச்சியில் கட்டி இரண்டு பூச்செண்டு தயார் செய்து வைத்துக் கொள்கின்றனர். இந்த ஆவாரம்பூவில் மொத்தம் 21 உறுப்புகள் உள்ளன.

அதைக் குறித்த பாடல் ஒன்று.....
**"ஏற்ற இறக்கம் இல்லாத**
**ஒக்கப் பிறந்தவர் இருவர்**
**உடன் பிறந்தவர் மூவர்**
**செக்கச் சிவந்தவர் ஐவர்**
**செவ்வாழைப்பழம் மூன்று**
**நமரி வாழைப்பழம் நான்கு**
**பச்சைப் பாம்புக்குட்டி ஒன்று**
**படமெடுத்த பாம்புக்குட்டி மூன்று"**
என்று மொத்தம் 21 உறுப்புகள் ஆவாரம்பூவில் உள்ளன.

குடும்பத்தின் மூத்த செட்டியார் தலைப்பாகை கட்டிக் கொண்டு கையில் ஆவாரம்பூச் செண்டைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்குள் வருகிறார். அவரைப்

பின்தொடர்ந்து வீட்டில் உள்ள ஆண்களும் வீட்டிற்குள் வருகின்றனர். மூத்த செட்டியார் பூசையறைக்குள் வந்து பிள்ளையார் அருகில் போடப்பட்டிருக்கும் தடுக்கின் மீது அமர்ந்து கொள்கிறார். பிள்ளையார் கிழக்குப் பார்த்தபடி இருக்கிறார். பிள்ளையாரை (மேற்குப்) பார்த்தபடி, வயது மூப்பு அடிப்படையில் எல்லா ஆண்களும் வரிசையாகத் தடுக்கில் அமர்ந்து கொள்கின்றனர். பெண்கள் உட்கார்வது இல்லை.

வீட்டில் உள்ளோரின் எண்ணிக்கைக்கு ஏற்றபடி கருப்பட்டிப் பாகையும் அரிசிமாவையும் பிசைந்து செய்த மாவினால் கூம்பு வடிவில் பிள்ளையார் பிடித்து வைக்கின்றனர். இந்தப் பிள்ளையார் பூசையைச் செய்யும் தலைவன் (பெண்கள் இதைச் செய்யக்கூடாது) இந்தக் கருப்பட்டிப் பிள்ளையாரின் மீது 21 நூலிழைகள் கொண்ட திரியைப் போட்டு நெய் ஊற்றி நுனி வாழையிலையை விரித்து வைத்து அதன் நுனியில் வெள்ளி அகல் விளக்கு வைத்து மலர்ச்செண்டு சாற்றி, தீபம் ஏற்றி வைக்கின்றனர். பிள்ளையாருக்குப் பொரியினால் அபிஷேகம் செய்கின்றர். அபிஷேகம் செய்யும் போது சங்கு ஊதுகின்றனர். கருப்பட்டி அப்பம், பொரி, முதலான 21வகைப் பலகாரங்களை நிவேதனம் செய்து, தேங்காய் உடைத்துப் பழம் வெற்றிலை பாக்கு வைத்துப் படைத்துத் தீபம் காட்டி வழிபடுகின்றனர்.




வழிபாட்டின் நிறைவாக, இந்த வழிபாட்டினை முன்னின்று செய்யும் குடும்பத் தலைவன், கூம்பு வடிவான பிள்ளையாரின் உச்சியில் தீபம் எறிந்து கொண்டிருக்கும் போது சோதியுடன் சுடரோடு பிள்ளையாரை எடுத்து அப்படியே தனது வாயினுள் போட்டுக் கொள்கிறார். அவர் ஒவ்வொரு பிள்ளையாராக எடுத்துக் கொடுக்க, வீட்டில் உள்ளோர் அனைவரும் வரிசையாக வந்து பிள்ளையாரை பெற்றுக் கொண்டு தீபத்துடன் தங்களது வாயில் போட்டுக் கொள்கின்றனர். நிறைவாக, பிள்ளையாருக்கு என ஏற்றிவைக்கப்பட்ட பிள்ளையாரையும் குடும்பத் தலைவன் எடுத்து தனது வாயில் போட்டுக் கொள்கிறார். வழிபாடு நிறைவடையும் போதும் சங்கு

ஊதுகின்றனர். இந்த நிகழ்ச்சியை "இழையெடுத்தல்" என்கின்றனர். இவ்வாறு இழை எடுக்கும் போது குடும்பத்தினர் விநாயகர் அகவல் படிக்கின்றனர்.

இவ்வாறாக இழையெடுத்தல் என்றழைக்கப்படும் இந்தப் பிள்ளையார் நோன்பு விழா இனிதே முடிவடைகிறது. நோன்பு முடிவடைந்தவுடன், குடும்பத்தார் அனைவரும் ஒன்றாக அமர்ந்து பட்சணங்களை உண்டு மகிழ்கின்றனர்.

பூம்புகாரில் தங்களது மூதாதையர்கள் செய்து வந்த வழிபாட்டை அப்படியே இன்றளவும் தாங்கள் கடைப்பிடிப்பதாகக் கூறுகின்றனர். பிராமண சமூகத்தினர் ஆண்டுக்கு ஒரு முறை பூணூல் போட்டுக் கொள்வதைக் கட்டாயமாகக் கடைப்பிடிப்பது போல், நகரத்தார் சமூகத்தினர் இழையெடுத்தலைக் கட்டாயமாகக் கடைப்பிடிக்கின்றனர்.

"வேழ முகத்து விநாயகனைத் தொழ வாழ்வு மிகுத்து வரும்
வெற்றி முகத்து விநாயகனைத் தொழ வேண்டிய புத்தி மிகுந்து வரும்
வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழத் துள்ளியோடும் தொடர்ந்த வினைகளே
அப்பம் முப்பழம் அமுதுசெய் தருளிய தொப்பை யப்பனைத் தொழவினை யறுமே"

குறிப்பு: முனைவர் வள்ளி அவர்கள் பிள்ளையார் நோன்பு குறித்து அளித்த பேட்டி, வள்ளி அவர்கள் சொல்லியபடி முனைவர் கி. காளைராசன் அவர்களால் பதிவு செய்யப்பட்ட கட்டுரை.

---

தொடர்பு: முனைவர் கி.காளைராசன் <kalairajan26@gmail.com>
http://kalairajan26.blogspot.in/

## 22. தமிழகத்தின் கிராமியக்கலைகள்

– தேமொழி

### பொய்க்கால் குதிரை ஆட்டம்

அழகாக அலங்கரிக்கப்பட்ட குதிரைக்கூடு ஒன்றை இடையில் கட்டிக் கொண்டு, கால்களில் ஒரு அடிக்கும் சற்று உயரமான மரக்கால்களைக் கட்டிக் கொண்டு, அரசன் அரசி போல அலங்கரித்துக் கொண்டு, அவர்கள் குதிரை சவாரி செய்து உலாப் போவது போலப் பாவனை செய்து கொண்டு ஆடும் ஆட்டமே பொய்க்கால் குதிரை ஆட்டம். பொய்யான மரக்காலில் ஏறி நின்று ஆடும் பொழுது கால்களால் எழுப்பப்படும் ஒலி குதிரையின் குளம்பொலியை ஒத்திருப்பதாலும், குதிரைக் கூட்டினாலும் இந்த நாட்டுப்புறக்கலை இவ்வாறு அழைக்கப்படுகிறது.



குதிரைக்கூடு எடை குறைத்ததாக இருக்கவேண்டும் என்பதால் மூங்கில், காகிதக்கூழ், சாக்கு, துணி இவற்றால் வடிவமைக்கப்பட்டிருக்கும். அழகிய வர்ணங்கள் பூசப்பட்டு கண்ணாடித்துண்டுகள் கொண்டு அலங்கரிக்கப் பட்டிருக்கும். இதனைத் தோளின் வழி மாட்டி நாடாவால் தொங்கவிட்டு, இடையில் சுமந்து கொண்டு ஆடுவர். இத்துடன் மரக்காலில் ஏறி சமன் செய்து கொண்டே அதனால் குளம்பொலி ஓசையை எழுப்பிக் கொண்டு குதிரையைப் போல துள்ளல் நடை போடுவதற்கும், உலாப் போவது போல ஒய்யார நடை போடுவதற்கும் நெடுநாள் பழக்கமும் பயிற்சியும் தேவை. மதுரைப் பகுதியில் பொய்க்கால் கட்டாமல்,

காலில் சலங்கை மட்டும் கட்டி ஆடும் வழக்கமும் உண்டு. அதனைப் பொய்க்குதிரையாட்டம் என அழைப்பர். பொய்க்கால் குதிரை ஆட்டத்திற்கு புரவியாட்டம், புரவிநாட்டியம் என்றப் பெயர்களும் உண்டு.

சிலப்பதிகாரக் கடலாடு காதைப் பாடல்களில் மரக்கால் கட்டிக் கொண்டு, தன்னைக் கொற்றவையாகப் பாவித்து மாதவி ஆடிய நடனக் குறிப்புண்டு. அவ்வாறே, தலைவன் தலைவியை மணமுடித்துத் தருமாறு ஊராரின் கழிவிரக்கத்தைப் பெறும் நோக்கில் பனைமடலால் உருவாக்கிய பொய்க்குதிரைக் கூட்டை அணிந்துகொண்டு ஊர்வலம் வரும் மடலேறுதல் முறையைத் தொல்காப்பியம் பதிவு செய்துள்ளது. அக்காலத்தின் மரக்கால் ஆட்டமும், பொய்க்குதிரை ஏற்றமும் வேறுவகையில் பரிணாம வளர்ச்சிபெற்று தற்காலத்தில் பொய்க்கால் குதிரை ஆட்டமாக உருவாகியுள்ளது எனக் கருதலாம்.



இன்றைய குதிரைக் கூட்டைக் கட்டிக்கொண்டு ஆடும் நடன முறை தஞ்சை மண்ணில் சென்ற நூற்றாண்டில் தோன்றியது. திருவையாற்றில் வாழ்ந்த இராமகிருஷ்ண நாயுடு என்ற தச்சர் இன்றைய வழக்கில் உள்ள பொய்க்கால் குதிரைக்கூட்டை வடிவமைத்து, தஞ்சை மராட்டிய இசைக்கலைஞர்களை இசையமைக்கச் செய்து பொய்க்கால் குதிரையாட்டத்தை நடைமுறையில் கொண்டு வந்தார். முன்னர் கோந்தளம் எனப்படும் இரட்டை முகத்தோல் கருவியினைக் கொண்டு பக்க இசையமைத்த முறை கைவிடப்பட்டு, இந்நாட்களில் நையாண்டி மேளத்தின் பின்னணி இசைக்கேற்ப நாட்டியமாடப்படுகிறது. குதிரையாட்டத்தில் நடத்தல், ஓடுதல், குதித்தல், குனிதல்,

நிமிர்தல், கால் தூக்கி ஆடுதல் ஆகிய அடவுகளைச் செய்தவண்ணம் குதிரைக் கடிவாளத்தைப் பிடித்து முன்னும் பின்னும் அசைந்து ஆடுவர்.

கோயிலும் சமூகமும் சார்ந்த கலையாக இக்கலை வளர்ந்தாலும் இதற்குக் கரகம், காவடி போன்ற வழிபாட்டுக்கலை என்ற பின்னணி கிடையாது. திருவிழாக்களிலும் ஊர்வலங்களிலும் மக்களை மகிழ்விக்க ஆடப்படுகிறது. இக்காலத்தில் சமய எல்லைகளைக் கடந்து இஸ்லாமிய கிறித்துவ சமயவிழாக்களில் மட்டுமின்றி, நாட்டுப்புறக்கலை என்ற மறுமலர்ச்சி பெற்று மேடையில் கலைநிகழ்ச்சிகளிலும் நடத்தப்படுகிறது. குடும்பக்கலையாக வளர்த்தெடுக்கப்பட்ட இக்கலையைக் கற்க பிறரும் ஆர்வம் கொண்டாலும் இந்நாட்களில் பொய்க்கால் குதிரையாட்டக் கலைஞர்களின் எண்ணிக்கை அருகி வருகிறது.

## கரகாட்டம்

தமிழர்கள் வாழ்வியலோடும், வழிபாடுகளோடும் இணைந்த நாட்டுப்புறக் கலைகளில் ஒன்று கரகாட்டம். மண்ணாலோ, செம்பு, பித்தளை, வெண்கலம், ஐம்பொன் போன்ற உலோகங்களினாலோ உருவாக்கப்பட்ட சிறுகுடம் ஒன்று ஆட்டத்தின் தேவைக்கேற்ப பல வகைகளில் மலர்கள், கிளி ஆகியன கொண்டு ஒப்பனை செய்யப்படுகிறது. இவ்வாறு அலங்கரிக்கப்பட்ட குடம், கலசம் அல்லது கரகத்தினைத் தலையில் ஏந்தி கீழே விழுந்து விடாமல் சமன் செய்து இசைக்கேற்ப அடவுகள் பிடித்து ஆடப்படும் ஆட்டம் கரகாட்டம் என்று அழைக்கப்படுகிறது.



"வாணன் பேரூர் மறுகிடை நடந்து நீணிலம் அளந்தோன் ஆடிய குடமும்" எனச் சிலப்பதிகாரத்தின் கடலாடு காதை வரிகள் குறிப்பிடும் மாதவி ஆடிய நடனங்களில் ஒன்றான குடக்கூத்து கரகத்தின் முன்னோடி எனவும் காட்டப்படுகிறது. இலக்கியங்கள் கூறும் ஏழுவகைக் கூத்துகளில் ஒன்றாகவும் குடக்கூத்து வகைப்படுத்தப் படுகிறது. கலைகளை வளர்த்தெடுத்த தஞ்சை மாவட்டத்தில், தஞ்சையின் அடையாளம் கரகாட்டம். தஞ்சையில் மட்டும் 1000 கரகாட்டக் கலைஞர்கள் இருக்கிறார்கள் என்பதாகவும் கூறப்படுகிறது.



கரகாட்டத்திற்கு முருக வழிபாட்டின் காவடியாட்டம் போன்றதொரு வழிபாட்டுப் பின்னணியுமுண்டு. அம்மன் கோவில் திருவிழாக்களில், அம்மனின் நீராட்டத்திற்குக் குடங்களில் நீரெடுத்து தலையில் ஏந்தி ஊர்வலமாக வருவோர் அருள் வந்து ஆடும் வழக்கமுண்டு. இந்த நடனம் நாளடைவில் இசைக்குத் தகுந்தவாறு அடவுகள் செய்யும் கரகாட்ட நடன வழிபாட்டு முறையான சக்தி கரகமாக மாறியுள்ளது. முன்னர் டம்மானம், தம்முறு போன்ற இசைக்கருவிகளை இசைத்து ஆடும் பக்தர்களின் உக்கிரத்தை அதிகரிக்கும் இசை இசைக்கப்படும் வழக்கமிருந்தது.

நாளடைவில் நையாண்டி மேளம் பக்க இசைக்கு மாற்றம் பெற்றுள்ளது கரகாட்டக்கலை. தஞ்சாவூர் நையாண்டி மேளத்திற்கென்று ஒரு நாட்டுப்புற இலக்கணமும் உண்டு. ஒரு நையாண்டி மேளக்குழுவில் 2 தவில், 2 நாதஸ்வரம், 1 பம்பை, 1 கிடுகிட்டி இடம்பெறும். மாரியம்மன், காளியம்மன், முத்தாலம்மன் ஆகிய அம்மன் கோயில் வழிபாடுகளில் சக்திக் கரகமெடுத்தல் என்னும் சடங்கு தவறாமல் இடம்பெறும். நீர் நிரம்பிய கலசத்தின் வாயில் தேங்காய் வைத்து, கூம்பு வடிவில் மலர் கொண்டு அலங்கரித்த கரகத்தினைக் கொண்டு வரும் பூசாரி அருள் வந்து ஆடுவது வழக்கம். அம்மன் விழா முடியும் வரை இந்தக் கலசமே அம்மனாக, சக்தி கரகமாக வழிபடப்படும். தை மாதம் துவங்கி ஆடி மாதம் வரை விழாக்கள் தொடரும்பொழுது கரகாட்டம் அவற்றில் இடம் பெறும்.

இத்தகைய வழிபாட்டுமுறை தவிர்த்து, தலையில் கரகம் வைத்த கரகம் விழாத வகையில் ஏணிகளில் ஏறுவது இறங்குவது போன்ற சில பல வித்தைகளையும் இணைத்து இரசிகர்களை மகிழ்விக்கும் கலையென்ற மற்றொரு கோணமும் கரகாட்டத்திற்கு உண்டு. இது ஆட்டக் கரகம் எனவும் அழைக்கப்படும். பெரும்பாலான கரகாட்ட நடன வழக்கத்தில் உள்ளது தக்கையில் செய்யப்பட்ட பச்சைக்கிளியை கலசத்தின் உச்சியில் பொருத்திய பூவால் அலங்கரிக்கப்பட்ட செப்புக்கரகமே. ஆட்டக் கரகத்தின் அமைப்பு மற்றும் அலங்காரத்தை வைத்துத் தோண்டிக் கரகம், செம்புக் கரகம், அடுக்குக் கரகம் என்ற பல கரக வகைகளும் உண்டு. கால் நூற்றாண்டிற்கு முன்னர் கரகாட்டத்தில் 52 அடவுகள் இடம் பெற்றனவென்றாலும், தற்பொழுது ஆடப்படும் கரகாட்டங்களில் சுமார் 6 அடவுகள் மட்டுமே இடம்பெறுகின்றன. இந்நாளில் பல்வேறுபட்ட தொழில்முறை நடனக்கலைஞர்களும் கரகாட்டத்தை தங்கள் நடனத்தின் ஒரு பகுதியாக அமைத்து மேடை நிகழ்ச்சிகளில் ஆட விரும்பும் நிலை ஏற்பட்டுள்ளது.

[படங்கள் உதவி: இணையத்தின் காப்புரிமையற்ற படங்கள் ]

---

தொடர்பு: தேமொழி <jsthemozhi@gmail.com>

## 23. நாய்க்கரச்சை

**– பழமைபேசி**

இந்தகதையைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், முதலில் நீங்கள் சீனிவெடி, இலட்சுமிவெடிகள் எப்படி வேலை செய்கின்றன என்பதை அறிந்து கொள்ள வேண்டும். மருந்துப் பொருட்களை சரியான விகிதத்தில் கலக்கி, அதற்கு நடுவே ஒரு திரியையும் வைத்து தாள்களால் நன்கு இறுகச்சுற்றப்பட வேண்டும். தென்னாட்டு மக்கள் நிரம்பிய இணையத்தில், இது குறித்து சகலத்தையும் அறிந்தவர்கள் இருப்பர். சுருக்கமாகச் சொல்லின், கன்பவுடரெனும் பொட்டாசியம் நைட்ரேட் எனும் வேதிப்பொருள் திரியின் மூலம் பற்ற வைக்கப்படும் நெருப்பு, காற்றோடு சேர்ந்து வினையாற்றி நைட்ரசன் வாயுவை உண்டு செய்ய, அதன் மூலக்கூறுகள் பெருக்க, உயர் அழுத்தம் ஏற்பட்டு இறுகச்சுற்றப்பட்டிருக்கும் காகிதச்சுற்றினைப் பிளந்தடிக்க காதைக்கிழிக்கும் வண்ணம் பேரோசை உருவெடுக்கும்.

நிற்க. மேலே குறிப்பிட்டபடி சரியான விகிதத்தில் நைட்ரேட் கலக்கப்படாவிட்டாலோ அல்லது இதர வேதிப்பொருட்களின் சமன்பாடு மாறிவிட்டாலோ, பற்றவைக்கப்படும் நெருப்புத் தீண்டும் போது இடம்பெறும் வினையின் செயல் மாறுபடும். வெடிக்காமல், புசுபுசுவென்று குற்றோசையை எழுப்பிக் கொண்டே சற்றுத்தொலைவு போய் கடைசியில் ஓய்ந்து படுத்துவிடும். இதை நாங்கள், பட்டாசு குசுவுட்ருச்சுடாவென்போம். வெடிக்காது.. மேலும், நாய் தன்வாலை வவ்வவ்வெனக் கடித்துக் கொண்டே நாலு சுற்றுச்சுற்றிவிட்டு ‘ங்க்கவ்’வெனச் சொல்லிப் படுத்துக் கொள்வதைப் போல, சிலவேளைகளில் ஓரிரு வெடிகள் கரகரவெனச் சுற்றிச்சுற்றி வந்து பின்னர் ‘பொடுக்’கென்று சன்னமான சத்தத்தோடு படுத்துவிடும் இதை நாய்க்கரச்சு நமுத்துபோச்சுறாவென்போம்.

இப்படியான வெடிகளை, சரமாக அல்லாமல் தனிவெடியாக விடுவது உண்டு. இலட்சுமிவெடி, சரசுவதி வெடியெல்லாம் கனமாக நிறைய இறுக்கத்துடன் கெட்டியான தாள்களால் சுற்றப்பட்டு பார்ப்பதற்கே திகிலூட்டக்கூடியதாக இருக்கும். இவற்றை நுவாக்ரான், டெமாக்ரான் தகரடப்பாவில் நுழைத்து திரிமட்டும் வெளியே தெரியும்படி பற்ற வைக்க வேண்டும். அப்படிப் பற்றவைக்கும் போது பெருஞ்சத்தத்தோடு டப்பாவையும் வானத்தில் தூக்கியடித்து கூடுதலான ஓசையை உண்டு செய்யும். சீனிவெடி எனப்படுகிற வெடிகள்,, லேசான சிவப்புவண்ணத்தாளில் சுற்றப்பட்டிருக்கும் இவற்றை நுவாக்ரான் தகரத்தில்

வைத்தால் தூக்கியடிக்காது. கனத்தின் காரணம், வெடிச்சத்தமும் குறைந்து போகும். ஆகவே, இவற்றை கொட்டாங்குச்சியின் கண்களில் ஒன்றை நோண்டிவிட்டு, அதன் துளையில் திரியை வெளியே தெரியும் வண்ணம் வைக்க வேண்டும்.

மழை ஈரம் இருக்குமென்பதால், கற்கள், ஆட்டாங்கல், அம்மி, உரல் போன்றவற்றின் மீது பட்டாசுநுழைக்கப்பட்ட கொட்டாங்குச்சியை வைத்துப் பற்ற வைக்க வேண்டும்.

இப்படித்தான், காலை ஏழுமணி இருக்கும். வாணா கோபால்சாமி நாய்க்கர் தூக்குப் போசியில் பால் வாங்கிக் கொண்டு அந்த வீதி வழியாகப் போய்க்கொண்டிருந்தார். நாய்க்கர், பெரும் கோபக்காரர். பையன்களுக்கு அவரென்றால் பெரும்பயம். அவர் வருவாரென்று நாங்கள் எதிர்பார்த்திருக்கவில்லை. நாங்கள் எல்லாரும், பசனை கோயிலுக்கும் குருநாத வாத்தியார் வீட்டு மதிற்சுவருக்கும் நடுவே கும்பலாக நின்று கொண்டிருந்தோம். பாண்டியனின் தம்பி சௌந்தரன்தான், சீனிவெடியைப் பற்ற வைக்கப் போனான். 'ஆராவது வர்றாங்களா பாருங்டா' என்றான்.

சாமிநாதன் சாப்பாட்டுக்கடை தங்கவேலன் சுற்றிலும் முற்றிலும் பார்த்துவிட்டுச் சொன்னான், 'ஆரும் வர்ல. நீ பத்த வெக்கிலாம்'.

சௌந்தரனும் கையில் வைத்திருந்த ஊதுபத்தியால், கொட்டாங்குச்சியை குருநாத வாத்தியார் வீட்டு மதிலுக்கு வெளியே இருக்கும், மதிற்சுவர் மீது மாட்டுவண்டிகள் இடிக்கா வண்ணம் நடப்பட்டிருக்கும் அந்த முட்டாங்கல் மீது வைத்து திரியில் நெருப்பினை வைத்தான்.

வழக்கத்துக்கு மாறாக அது உடனே வெடிக்கவில்லை. ஒரு சில விநாடிகள் சற்றுக்கூடுதலான நேரத்தை, எடுத்துக் கொண்டிருந்தது. எங்களுக்கு அதன் பக்கத்தில் போகவும் அச்சம். அந்த இடைப்பட்ட வேளையில், பசனைகோயிலுக்கு மறுபக்க வீதியிலிருந்து வெளிப்பட்டு, பால்ப்போசியோடு வந்து கொண்டிருக்கிறார் வாணாகோபால்சாமி நாய்க்கர். எங்களுக்கா குலை நடுக்கம். எப்பவுமே ஊர்ப்பையன்களைப் பார்த்து மிரட்டலாக எதையாவது சொல்லிவிட்டுப் போவார். அன்று தீவாளி அல்லவா? நாய்க்கருக்கு வேறென்னவோ யோசனை. விறுவிறுவென வேட்டியை மடித்துக்கொண்ட நிலையில் பால்ப்போசியை தூக்கிக் கொண்டு பாண்டியனின் மளிகைக்கடை முன்பாக எட்டி நடையைப் போட்டார். முட்டாங்கல் மேலிருந்த கொட்டாங்குச்சிக்குள்ளிருந்த சீனிவெடி நாய்க்கரச்சை

இடத் துவங்கியது.  கண்ணிமைக்கும் நேரத்தில், அவரின் கால்களுக்கிடையே ஆட்டம் போட்ட கொட்டாங்குச்சி உசுபுசுவென மேலெழுந்த வாக்கில் சரசரவென்றது.

அங்கிருப்பவர்களிலேயே நான்தான்  மிகவும் இளையவன். முதலில் இராசகோபால்தான் கத்தினான். ”தேங்காத்தொட்டி நாய்க்கர் வேட்டிக்குள்ள பூந்த்துருச்சாட் இருக்கூ? டேய் ஓடுங்டா”.

இவன் போட்ட சத்தமும் கொட்டாங்குச்சியின் உரசலும் நாய்க்கருக்கு பதட்டத்தை உண்டுபண்ண, தூக்குப்போசியைப் போட்டு விட்டு வேட்டியை உதறத் தலைப்பட்டார் நாய்க்கர்.

வீதிமணலில் பால்ப்போசி கவிழ்ந்து மணல் ஈரத்தில் கலந்து கொண்டிருக்கிறது வாங்கி வந்த பால் முழுதும். அரக்கப்பரக்க வேட்டியை அவிழ்த்தவருக்கோ, தான் உள்ளாடை எதுவும் அணியாததைப் பற்றின கவலை இருக்கவில்லை. உதறலோடு உதறலாக உதறிக் கொண்டிருந்தார். அம்மணத்தைப் பார்த்த பையன்கள்,எல்லாரும் வெலவெலத்துப் பயந்து போய், சந்தைப்பேட்டைக்குள் நுழைந்து உப்பிலிமாரப்பன் பட்டிக்குள் ஓடிப் போய் கற்களின் மறைவில் ஒடுங்கிக் கொண்டனர்..

‘கண்டாரோலி பசங்க, எங்கிட்டியே வேலையக் காமிச்சிட்டாங்டா பாண்டியா!”, பசனை கோயல் தாண்டி கரியூடு, டீச்சரம்மா வீடு, ஆலாமரத்தூர் இராசகோபல் வீட்டு வரையிலும் ஓங்கி ஒலித்தது நாய்க்கரின் பேரலறல்.

---

தொடர்பு: பழமைபேசி <pazamaipesi@gmail.com>

## 24. கவிதை: காட்டைப் பார்

– பழமைபேசி



வெளியே போ
காட்டைப் பார்
குருவி
கொத்தித்தின்னும்
அழகைப் பார்
கோரைப் புல்லின்
மலரைப் பார்
தடத்தின் குறுக்கேவோடும்
அணிலைப் பார்
தலைக்கு மேலே போகும்
பட்டாம்பூச்சியைப் பார்
வெடித்து
விதைகளைத் துப்பும்
காயைப் பார்
காற்றில் தவழும்
கொடியைப் பார்
போகிறபோக்கில்
புணர்ந்து போகும்
தட்டான் பார்
வேலியில் பூத்திருக்கும்
கள்ளிப்பூவைப் பார்
வெளியின் ஊடாய்
விதையைச் சுமக்கும்
பஞ்சைப் பார்
ஊர்ந்து செல்லும்
கரையான் பார்
கொம்பின் கீழே
தொங்கும் அந்த
கூட்டைப் பார்
தாவிப் போகும்
முயலைப் பார்
கண்டங்கத்திரி
முள்ளைப் பார்
தும்பைச்செடியின்
இலையைப் பார்
மரத்தைக் கொத்தும்
கொண்டைலாத்தி பார்
இன்று இருக்கும்
நாளை இருக்காது
வெளியே போ
காட்டைப் பார்
காட்டைப் பார்

---

தொடர்பு: பழமைபேசி
<pazamaipesi@gmail.com>

---

## 25. கவிதை: இமையோரத்தில்....

– ருத்ரா இ.பரமசிவன்



"என்ன நடக்குது இங்கே?"
நாம் இந்த தூசிப்படலங்களில்
இமை விரிக்கிறோம்.
திடீரென்று கருட புராணம்
சிறகடித்துக்கொண்டு பறக்கிறது.
"கும்பி பாகம் கிருமி போஜனம்"
தூள் பறக்கிறது.
குற்றமும் தண்டனையும்
தராசுத்தட்டுகளில்
தட தடக்கிறது.
பாற்கடல் எனும் அரசியல்
அமைப்பின்
ஷரத்துக்கள்
கடையப்படுகின்றன.
யார் அசுரர் ? யார் தேவர்?
எதுவும் தெரியவில்லை.
எதுவும் தேறவில்லை.
ஜனநாயகச் சிவனின்
தொண்டைக்குள் நஞ்சு!
வெளியில் சில அசுரர்கள்
தேவர்களின் மடியில் சில அசுரர்கள்.
கொள்ளை உறிஞ்சலில்
கார்ப்பரேட்டுகளின் கோரைப்பற்கள்
இவர்களின் எல்லா
சந்நிதானங்களிலும்
தரிசனம் தருகின்றன.
அமுத குடம் எனும்
ஓட்டுப்பெட்டிக்குள்
இன்னும்
அலையடித்துக்கொண்டிருக்கிறது
பாற்கடல் எனும் போலியான
ஒரு நச்சுக்கடல்.
சிவன் என்ன? அரி என்ன?
ஊழல் சிந்தனையில்
உருண்டு திரண்டு
வரும்
அந்த பொருளாதாரப்பேயாசைகள்
எந்தக்குரல் வளையையும்
நெறிக்காமல் விடுவதில்லை.
சாதி மதங்களின்
சாக்காட்டு சாஸ்திரங்கள்
"ஓட்டு" சாஸ்திரங்களை
ஓட ஓட விரட்டுகின்றன.
அரசியல் சாசனத்தில்
தனக்கு வேண்டியவாறு
பொந்துகள் ஏற்படுத்திக்கொண்டு
பொல்லாத சாஸ்திரங்கள்
மகுடம் சூட்டி வலம் வருகின்றன.
பணத்தை மட்டும் கருப்பு என்று
சொல்லி
அதே கருப்புப்பொருளாதாரத்தை
வெள்ளையடித்து
வெறும் நகப்பூச்சு செய்தாலும்
அந்த கூர்நகங்களில்
சொட்டும் ரத்தம் எங்கும் தெரிகிறது.

தூங்கிக்கிடப்பவர்களே ..இந்த
தூசிக்கடல் தாண்டி
எதிர் நீச்சல் போடுங்கள்.
உங்கள் விடியலுக்கு
இன்னும் எத்தனை எத்தனை
நூற்றாண்டுகள் வேண்டுமோ
தெரியவில்லை?
திடீரென்று சோம்பல் முறித்து
படுத்துக்கிடக்கும்
மூடத்தனத்தின் இந்த பழம்பாயை
சுருட்டியெறியுங்கள்!
அதோ இமையோரத்தில்
வருடும்
ஒரு புத்தம் புதிய
பூங்காலையின் ஒளிக்கீற்றுகள்!

---

## 26. கவிதை: வள்ளுவர் பாடிய "கானா"ப்பாட்டு

– ருத்ரா இ.பரமசிவன்

**ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு**
**எண்பொருள்**
**ஏனை இரண்டும் ஒருங்கு.....(குறள் 760)**

காசு மணி துட்டு ...
இப்படி ஒரு கானாப்பாட்டின்
பொருள் ஒலிக்கும் படி
அன்றே "பொருள் "அதிகாரத்தில்
பாடி இருக்கிறார் வள்ளுவர்.

அறம் பொருள் இன்பத்துக்கு
தூண்டில் போடுங்கள்.
பொருள் மீன் சிக்கினால் போதும்.
மற்றது தானே வரும்.

எண்ணிப்பார்த்து மகிழலாம்
அறம் இன்பம் எல்லாம்.
ஒரு ரூபாய்க்குள் தான் தெரியும்
ஒன்பது உலகங்கள்.

காற்றின் சித்திரங்கள்
அறமும் இன்பமும்.
கரன்சியில் கட்டலாம்
கணக்கற்ற இன்பங்கள்.

சிவனும் விஷ்ணுவுமே
கனக தாராவில் உன்னை
குளிப்பாட்டுவார்கள்
கனமான உன் வங்கிக்கணக்கிற்கு.




"தர்மம்" போடுங்க சாமி என்று
கேட்டவுடன்
அவன் தட்டில் விழுவது
காசுகள் மாத்திரமே.

இல்லாதவனும் திருடுகிறான்.
இருப்பவனும் திருடுகிறான்.
கறுப்புப்பணத்திற்கு வர்ணம்
அடித்தால்
அறம் பொருள் இன்பம் வீடு.

பெருமாள் மார்பையே
மணிப்பர்சு ஆக்கினார்
லெட்சுமியை குடியமர்த்த.

"சொர்க்கவாசல்"பார்க்க
கோடி மக்கள் திரண்டனர்.
கோடி ரூபாயில் வைரக்கிரீடம் ஒரு
கோடீஸ்வரர் உபயம்.

ஐம்பொறி இன்பங்களுக்கும்
இன்ப ஊற்று
ரொக்கம் சுரக்கும்
கைகளில் மட்டுமே.

ஆகா! வண்ண வண்ண சீரியல் லைட்
சரங்களோடும் பவனி வருகிறது
சாமி சப்பரத்துக்கும் சமேதரராய்
"உண்டியல் பெட்டி"

"ஜலம்" தெளித்து "தோஷம்"
நீக்கினால்
நோட்டுகள் கிழிந்து அல்லவா
போகும்?
அழுக்கோடு உக்கிராண அறை
சென்றது.
அத்வைதம் "பொருள்" புரிந்தது.

---

## 27. கவிதை: கடவுள்கள்

**– ருத்ரா இ.பரமசிவன்**



கடவுள் கனமானவர்.
ஆம்
அது ஒரு சிலுவையின் கனம்.
கடவுள் கூர்மையானவர்
ஆம்
உடம்பில் ஆணிகள்
அறையப்பட்டபோது
தெரிந்தது.
கடவுள் ரத்தமானவர்.
ஆம்
அது அங்கே பெருகியபோது
தெரிந்தது.
அப்போது அவர் சொன்னார்.
கடவுளே
தான் என்ன செய்கிறோம் என்று
இந்தக் கடவுள்களுக்கே
தெரியாது.
இவர்களை மன்னியும்.
இந்த வசனத்தில்
ஒன்றல்ல
கோடி கோடி கடவுள்கள்
இருக்கிறார்கள்.

---

## 28. கவிதை: ஆண்டாள்

– ருத்ரா இ.பரமசிவன்



கோவில்களை
விட்டிறங்கி
மூலை முடுக்கெல்லாம்
இப்போது ஒலிக்கிறாள்.
அவள் பற்றிய
சொல்லையும் பொருளையும்
உரைத்துப் பார்ப்பதில்
சொல் தான் தேய்ந்து போகும்.
அந்த வெளிச்சம் மறையாது.

ஒருவன்
என்னைக் கழுதை என்று
சொல்லி விட்டுப்போனான்.
அப்போது நான் ஒரு கழுதை தான்.
ஆயிரம் பேர் வந்து
"உன்னைக் கழுதை "என்று
சொன்னானாமே
என்று கேட்ட போது
நான் ஆயிரம் கழுதை ஆகிவிட்டேன்.
எறும்பு புற்றை இமயமலை ஆக்கும்
"பஜனை" சத்தங்களால்
செவிகள் கிழிவது தான் மிச்சம்!

கேவலம்
என்று ஒரு உபனிஷதம் இருக்கிறது.
கைவல்யம் என்ற பெயர்ச்சொல்
ஆகி
அது பிரம்மம் மட்டுமே
என்று விரித்து உரைக்கிறது.
பிரம்மம் என்ன
கேவலமாகி விட்டதா?
கேனோன் (கேணையன் )
என்றோர் உபனிஷதமும் உண்டு.
பிரம்மன் யார் என்று
அது
கேட்டுக்கொண்டேயிருக்கிறது.
அவன் என்ன கேணயனா?
ஒரு கல் வந்து
கல்லாக இருக்கும்
கடவுளிடம்
அர்ச்சனை செய்யவந்தாலும்
இந்தக் கல் அந்தக்கல்லிடம்
"உன் கோத்திரம்"
என்ன என்று கேட்கிறது.
ஆண்டாள்
தன் விண்ணப்பத்தை
ஆண்டவன் என்னும்
அந்தப் பெருமாளிடம்
அர்ச்சனையாய் வைத்திருந்தாலும்
என்ன கோத்திரம்
என்ற கேள்வி தானே வந்திருக்கும்.
அந்த மனவெளி உணர்ச்சியின்
"ஹெலுாஸினேஷன்"
ஒரு ரசம் பிழிந்த தமிழாய்
நமக்குக் கிடைத்திருக்கிறது.
தமிழின் வரப்பிரசாதம்
என்று நாம் கன்னத்தில் ஒற்றி
வணங்குவதும்
அற்புதம் தானே.

கடவுளை
"அஜாதம் அவர்ணம்" என்றெல்லாம்
போற்றிப் போற்றி என்று
பாடும்போது
அவன் பிறப்பும்
ஒரு வேரற்று தானே தொங்குகிறது.
பக்தி என்பதே பக்குவம்
என்பதன் மறு வடிவம்
பக்குவமற்ற பக்தியை
எப்படி அழைப்பது?
வேண்டாம்!
இருட்டில் இருப்பவர்கள் தான்
தீவட்டிகள் தூக்கி அலையவேண்டும்.

---

## 29. கவிதை: ஞாநி

**– ருத்ரா இ.பரமசிவன்**



ஒரு தாடிமீசை.
சமஸ்கிருத ஸ்லோகங்கள்
இவையெல்லாம் வேண்டாமே
"ஞானி" என்று
போட்டுக்கொள்வதற்கு
என்பதாய்
ஒரு தர்க்கத்தின் உருவகம்
ஞாநி.
சமுதாய எழுச்சி என்பது
மத்தாப்பு போல்
எரிந்து அவியும் கிளர்ச்சி அல்ல.
அலங்காரம் அற்ற
சொல் அடுக்குகள் போதும்.
அதில் தெறிக்கும் கேள்விகள்
போதும்.
கேள்விகளே விடைகளாய்
கொப்புளிக்க வைக்கும்
கேள்விகள் அவை!
ஏதோ
கி மு கால கட்டத்து
சாக்ரடீஸ் ப்ளேட்டோக்களின்
அறிவின் விளாறுகள்
நிறைய நிறைய
அவர் பத்திகளில்
கனன்ற போதும்
சமூக நீதியும்
சமூக நியாயமும்
"சீரியல் பல்பு"வெளிச்சங்களின்
புள்ளிவிவரக் கசிவில்
கீற்றுகள் காட்டுவது மூலம்
நவீன வரலாற்றுப்பக்கங்களை
பொட்டில் அடித்தாற்போல்
நமக்குக் காட்டும்
ஒரு சித்தாந்த மேதை அவர்.
இவர் விளக்கு ஏந்தியபோது மட்டுமே
மற்றவர்களின்
அசிங்கங்கள் அம்பலமாகிவிடும்.
இது

இவரது எழுத்து விளக்கின்
குற்றம் அல்ல.
பத்திரிகைகள்
யாரையாவது
தாக்கவேண்டுமென்றால்
இவர் பேனாவுக்குள்
ஒளிந்து கொள்வார்கள்.
ஏனெனில்
பத்திரிகைகளுக்கு
அந்த ஊழலை விட
அந்த ஊழல்காரர்களின்
உருவங்கள் கிழிக்கப்படவேண்டும்
என்பதே நோக்கம்.
ஆனால்
ஞானி
எப்போதுமே
நியாயத்தின் ஊசி முனை.
இந்த தந்திர ஆட்டங்கள் ஏதும்
ஆடத்தெரியாத
உண்மைத்தீயின் சுடரேந்தி.
கடைசியாக
குருமூர்த்தி அவர்களைப் பற்றி
அவர் சந்தோஷமாகவே
விமரிசித்திருக்கிறார்.
"குரு"மூர்த்தி ("வெளிச்ச"மாகவே)
அம்பலமாகி விட்டார் என்று.
இதுவே
ஞானியின் நிப்புமுனை
எவ்வளவு கூரியது
என்று காட்டும்.
இவருக்கு
கண்ணீர் அஞ்சலி எழுதினால்
வேடதாரிகளே
கொஞ்சம் எட்டி நில்லுங்கள்
என்று தான் விமரிசனம் வைப்பார்.
சிறுநீரகக்கோளாறுகள்
சில கோடீஸ்வரர்களுக்கு
வெறும் சில்லறைத்தொந்தரவுகள்
தான்.
இவரை
காவு கொண்ட அந்த வியாதி
மௌனமாய் அவரை
தின்று முடித்ததைக்கண்ட போது
அது நமக்கு
ஒரு தாங்கவொண்ணா அதிர்ச்சியே!
இவர் தன் உயிரெழுத்துக்களை
பத்திரிகைகளுக்குக் கொடுத்தார்.
தன் "மெய்" எழுத்துக்களை
உயிர் காக்கும் மருத்துவ
விஞ்ஞானத்துக்குக் கொடுத்தார்.
மனிதம் எனும்
பொருள் பொதிந்த
பொன்னெழுத்துக்களைப் பொறி
என்றால்
அது "ஞானி"யே தான்.

ஆனாலும்
இவர் இழப்பு
சமுதாய அலசல்கள்
இல்லாத காலி பக்கங்களைத்தான்

இனி நமக்குக் காட்டும்.
இந்தப் பத்திரிகைகள்...
ரீம் ரீமாக அச்சில்
ஓடிக்கொண்டிருந்தபோதும்.

---

## 30. கவிதை: நடுகல் பீலியும் நார்அரி கலமும்

**– ருத்ரா இ.பரமசிவன்**

நடுகல் பீலியும் நார்அரி கலமும்
நுரையத் தரூஉம் நறவக் காட்சியான்
வேட்டுவன் யான் கூற்றம் கொண்டு
போயினும் ஓர் ஊழ்  வந்து மீட்டிய
காலை
விண்ணின் இழிந்து ஓர் உயிருள் புகு
தர
வேந்துகடன் ஆற்றும் நசைமிக்கூர
அகலம் ஆயிரம் அம்புகள் துளைக்க
வெண்ணிப்பறந்தலை வீழ்படுத்தாங்கு
விண்ணும் வெளியும் பரந்தேன்
மன்னே!
என்னே பாழ் இது? ஈனப்படுகுழி
வீழ்ந்தார் ஈண்டு. சிறைய படர்ந்த
சிலம்பும் புலம்பும்.எவன்செயும்?
இணரிடை ஊரும் அம்புல் எறும்பாய்
மீள் தர ஆங்கு எவ்விடையாயினும்
தோற்றிடும்  யான் நம்
அருமைச்செம்மொழி
காத்திடும் வல்லரண் படைகொடு
கிளர்பு
எத்துணை வரினும் அமர்கடாம்
உய்த்து
வெல்குவன்  வெல்குவன் அதன்கண்
உருகெழு பிறப்பின் மண்சுவை
தமிழ்ச்சுவை
நனிகூர் களிகொள யாண்டு ஒருநாள்
மீள்குவன் மீள்குவன் காண்மின்
மன்னே.

---

**குறிப்பு:** வீரம் செறிந்த மன்னர்கள் போரில் இறந்த பின் அவர்களுக்கு நடுகல் இட்டு மலர்கள் சூடி மயிற்பீலி அணிவித்து மதுவும் படைத்து நினைவு கூர்வதுண்டு.அதைக்குறித்து அருமையானதொரு பாடல் படித்தேன். "அதியமான் நெடுமான் அஞ்சி"யின் நடுகல் பற்றி மனம் வெதும்பி ஔவையார் பாடியது. அதில்,
"நடுகல் பீலி சூட்டி நார் அரி
சிறுகலம்..." (புறம் 232)

என்ற வரிகள் மிகவும் நுட்பமும் அழகும் செறிந்து இருப்பதாக எனக்குப்பட்டன.அதன் உந்துதலில் உடனே நான் எழுதிய சங்கநடைச்செய்யுட் கவிதை தான்மேலே நான்எழுதியிருக்கும்பாடல்.

இது நம் தமிழின் வீழ்ச்சிகண்டு மனம் வெதும்பி ஒரு மன்னன் மறுபிறவி எடுத்தாவது அது எறும்பின் பிறவியாக இருந்தாலும் சரி தமிழ் மண்ணைக்காப்பேன் என்று புறநானூற்று வீரம் கொப்பளிக்க அவன் கூறுவது போல் எழுதப்பட்ட பாடல்.

---

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன்
(ruthraasivan@gmail.com)

---

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

## த.ம.அ. பன்னாட்டுக் கருத்தரங்கம் - பூசாகோ அர கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி

கோவை பூசாகோ அர கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறையும், மலாய்ப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையும், தமிழ்மரபு அறக்கட்டளை ஜெர்மனியும் இணைந்து 5.12.2017 அன்று பன்னாட்டுக் கருத்தரங்கை நடத்தியது.



இதில் பல்கலைக்கழகம் மற்றும் கல்லூரிகளிலிருந்து பல பேராசிரியர்கள் மாணவர்கள் மற்றும் தமிழ் ஆர்வலர்கள் உட்பட 200க்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொண்டு ஆய்வரங்கைச் சிறப்பித்தனர்.

கல்லூரி முதல்வர் முனைவர் எஸ். நிர்மலா அவர்கள் வரவேற்புரையும், கல்லூரிச் செயலர் நா. யசோதா தேவி அவர்கள் தொடக்கவுரையும் நிகழ்த்தினர். மலாய்ப் பல்கலைக்கழக ஆய்வியல் துறைப் பேராசிரியர் முனைவர் சு. குமரன் தலைமையுரை ஆற்றினார். யாழ்ப்பாணப் பல்கலைக்கழக சமஸ்கிருதத்துறைத் தலைவர் சிறப்புரை ஆற்றினார். தகைசால் பேராசிரியர் தமிழ்மரபு அறக்கட்டளைச் செயலர் முனைவர்.வீ . ரேணுகாதேவி மகிழ்வுரை நிகழ்த்தினர். கோவை கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் க. முருகேசன் அவர்களும், கல்லூரியின் முன்னாள் மாணவி கவிதாயினி மீ. உமாமகேஷ்வரி அவர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள். கருத்தரங்கத்தின் நிறைவாக கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் இரா.சாந்தி அவர்கள் நன்றியுரை நவில விழா இனிதே நிறைவுற்றது.

கருத்தரங்கின் ஆய்வுக்கட்டுரைகள் இரண்டு தொகுப்புக்களாக வெளியிடப்பட்டன.







அன்புடன்
பேராசிரியர் முனைவர். வீ . ரேணுகாதேவி
செயலாளர், தமிழ் மரபு அறக்கட்டளை

**த.ம.அ. பன்னாட்டுக் கருத்தரங்கம் - அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி**

சிவகாசி, அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரியின் தமிழ்த்துறை, மலேசியா, மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறை, ஜெர்மனி, தமிழ் மரபு அறக்கட்டளை ஆகியன இணைந்து "உலகளாவிய தமிழ் - காலந்தோறும் தமிழ் இலக்கியங்களில் பொருண்மைகளும் புதுமைகளும்" என்னும் தலைப்பிலான பன்னாட்டு ஆய்வுக்கருத்தரங்கம் 07.12.2017, வியாழக்கிழமை அன்று நடைபெற்றது.




இக்கருத்தரங்கினை அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரியின் தாளாளர் திரு. கி. அபிரூபன் அவர்கள் குத்துவிளக்கேற்றி தொடங்கி வைத்து ஆய்வுக்கோவையை வெளியிட்டார். கல்லூரி முதல்வர் முனைவர் வ. பாண்டியராஜன் அவர்கள் கருத்தரங்கிற்கு தலைமையேற்று தலைமையுரை ஆற்றினார். இளங்கலைத் தமிழ்த்துறைத் தலைவர் மற்றும் கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர் முனைவர் இரா.இளவரசு அவர்கள் வரவேற்புரை ஆற்றினார். மலேசியா, மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறைப் பேராசிரியர் முனைவர் சு.குமரன் அவர்கள் கருத்தரங்க நோக்கவுரை வழங்கினார். சென்னை, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் பதிவாளர் முனைவர் முகிலை இராசபாண்டியன் அவர்கள் சிறப்புரை ஆற்றினார். தமிழ் மரபு அறக்கட்டளைச் செயலர், மதுரை காமராசர் பல்கலைக்கழக தகைசால் பேராசிரியர் முனைவர் வீ.ரேணுகாதேவி அவர்கள் பாராட்டுரை வழங்கினார். இலங்கை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் சமஸ்கிருதத் துறைத்தலைவர் திரு. ச. பத்மநாபன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க. சிவனேசன் அவர்கள் நன்றியுரை வழங்கினார்.

இப்பன்னாட்டுக் கருத்தரங்கிற்கு பல்வேறு நாடுகளைச் சார்ந்த 209 ஆய்வாளர்கள் ஆய்வுக்கட்டுரைகளைச் சமர்ப்பித்திருந்தனர். இளங்கலைத் தமிழ்த்துறைத் தலைவர் மற்றும் கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர் முனைவர் இரா.இளவரசு, முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க. சிவனேசன் மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் பன்னாட்டுக் கருத்தரங்கிற்கான ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தனர்.

கருத்தரங்கின் ஆய்வுக்கட்டுரைகள் இரண்டு தொகுப்புக்களாக வெளியிடப்பட்டன.







அன்புடன்
பேராசிரியர் முனைவர். வீ. ரேணுகாதேவி
செயலாளர், தமிழ் மரபு அறக்கட்டளை

### த.ம.அ. பன்னாட்டுக் கருத்தரங்கம் - கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி

கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை, மலாயப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறை, ஜெர்மனி தமிழ் மரபு அறக்கட்டளை, சென்னை ந. சுப்புரெட்டியார் 100 அறக்கட்டளை, முனைவர் மா. ஆறுச்சாமி ஆராய்ச்சி நிறுவனம் ஆகியன இணைந்து நடத்திய பன்னாட்டுக் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியங்களும் தமிழறிஞர்களும் என்னும் பொருண்மையிலான பன்னாட்டுக் கருத்தரங்கம் 06.12.2017 அன்று கல்லூரியில் நடைபெற்றது.







மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறைப் பேராசிரியர் முனைவர். சு. குமரன் அவர்கள் சிறப்பு விருந்தினராகப் பங்கேற்றுச் சிறப்புரையாற்றினார். அவர்தம் உரையில், “மனித வாழக்கையை இயக்குவன

இலக்கியங்கள் என்றும் இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் புலம்பெயர்ந்த தமிழர்களின் வாழ்வியலை வெளிப்படுத்தின என்றும் குறிப்பிட்டார். மேலும், இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் புலம்பெயர்ந்த தமிழர்களின் இனமான உணர்வு, பெண்ணியச் சிந்தனை, கடந்தகால கண்ணீர், காதல், வீரம், குடும்ப அமைப்பு, அரசியல் நிலை, பண்பாடு ஆகியவற்றைப் பதிவு செய்துள்ளன” என்று குறிப்பிட்டார்.

இவ்விழாவில் கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரியின் செயலர் மற்றும் இயக்குநர் டாக்டர் சி. ஏ. வாசுகி அவர்கள் தலைமையுரையாற்றினார். ஜெர்மனி தமிழ் மரபு அறக்கட்டளையின் செயலர் முனைவர் வீ. ரேணுகா தேவி அவர்கள் நோக்கவுரையாற்றினார். இலங்கை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் சமஸ்கிருதத்துறைத் தலைவர் கலாநிதி ச. பத்மநாபன் அவர்களும் கல்லூரி முதல்வர் முனைவர் வே. பாலசுப்பிரமணியம் அவர்கள் வாழ்த்துரை வழங்கினர். முன்னதாகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க. முருகேசன் அவர்கள் வரவேற்புரையாற்றினார்.

இவ்விழாவில் 263 பேராளர்கள் எழுதிய ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய ஆய்வுக்கோவை மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டது.




கல்லூரிச் செயலர் டாக்டர் சி. ஏ. வாசுகி அவர்கள் ஆய்வுக் கோவையின் முதல் தொகுதியை வெளியிட மலாயப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறைப் பேராசிரியர் முனைவர் சு. குமரன் அவர்கள் பெற்றுக் கொண்டார். இரண்டாவது

தொகுதியை ஜெர்மனி தமிழ் மரபு அறக்கட்டளையின் செயலர் முனைவர் வீ. ரேணுகா தேவி அவர்கள் வெளியிட கலாநிதி ச. பத்மநாபன் அவர்கள் பெற்றுக் கொண்டார். மூன்றாவது தொகுதியை ந. சுப்புரெட்டியார் 100 அறக்கட்டளையின் நிறுவனர் முனைவர் சு. இராமலிங்கம் அவர்கள் வெளியிட தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியின் மேனாள் தமிழ்ப்பேராசிரியர் சு. ஞானப்பூங்கோதை அவர்கள் பெற்றுக்கொண்டார். விழாவின் நிறைவில் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் க. பழனிவேல் அவர்கள் நன்றி நவின்றார்.

இலங்கை, மலேயா உள்ளிட்ட அயல்நாடுகளில் இருந்தும் தமிழ்நாட்டின் பல்வேறு பல்கலைக்கழகங்கள் மற்றும் கல்லூரிகளிலிருந்தும் பேராசிரியர்களும் ஆய்வாளர்களும் பெருந்திரளாகப் பங்கேற்றனர்.

அன்புடன்
பேராசிரியர் முனைவர். வீ . ரேணுகாதேவி
செயலாளர், தமிழ் மரபு அறக்கட்டளை

**த.ம.அ. மையம் துவக்கம் - நாமக்கல், செல்வம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி**

நாமக்கல், செல்வம் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் 29.12.2017 அன்று தமிழ் மரபு அறக்கட்டளை மையம் இனிதாகத் துவங்கப் பெற்றது.

கல்லூரியின் முதல்வர் முனைவர் ந. இராஜவேல் அவர்கள் மையத்தைத் துவக்கி வைத்து வாழ்த்துரை வழங்கி, மாணவர்கள் சிறப்பாகப் பங்களிக்க வேண்டியும் எடுத்துரைத்தார். தமிழ் இலக்கியவியல் முதுகலை முதலாமாண்டு மாணவர்கள் கலந்துகொண்ட இந்த நிகழ்வில், தமிழ் மரபு அறக்கட்டளையைப் பிரதிநித்து தமிழ்க்குடியின் கலாச்சாரம், பண்பாடு, மொழி ஆகியவற்றின் தொன்மை குறித்து செயற்குழு உறுப்பினர் திருமதி. பவளசங்கரி உரையாற்றினார்.



தமிழ் மரபு அறக்கட்டளையின் திருச்சி பகுதி தொடர்பாளரும் தூயவளனார் கல்லூரியின் பேராசிரியர் சூசை அவர்கள் சிறப்பு சொற்பொழிவை வழங்கினார்





பெப்ரவரி மாதம் 27ம் தேதி இதே கல்லூரியில் தமிழ் மரபு அறக்கட்டளையின் பன்னாட்டுக் கருத்தரங்கம் ஒன்று நிகழ திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

அன்புடன்
முனைவர்.சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை

---

**தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடுகள்**

**தமிழ் மரபு அறக்கட்டளையின் - மின்னூல்கள்**:
ஓலைச்சுவடி- தன்வந்திரி உடற்கூறு

**தமிழ் மரபு அறக்கட்டளையின் - மண்ணின் குரல் மரபுக் காணொளிகள்**:
கொங்கர்புளியங்குளம் தமிழி கல்வெட்டுக்களும் சமணர் சின்னங்களும் மாயன் வாழிபாடும்

தூத்துக்குடி நெய்தல் நில மக்கள் - பகுதி 1

தூத்துக்குடி நெய்தல் நில மக்கள் - பகுதி 2



THE TEXT IN THIS ISSUE BY Tamil Heritage Foundation IS LICENSED UNDER A CREATIVE COMMONS ATTRIBUTION-SHAREALIKE 4.0 INTERNATIONAL LICENSE.



Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books
and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org



முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# மின்தமிழ் மேடை



## "நெய்தல் நிலத்தில் தொடரும் வாழ்க்கைப் போராட்டங்கள்"

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*
*வெளியிடும் காலாண்டு மின்னிதழ்*
*மின்தமிழ்மேடை - காட்சி: 12*
*ஜனவரி — 2018*

